



நீறலைத்த திருஉருவும் நெற்றிக் கண்ணும்
நிலாஅலைந்த பாம்பினொடு நிறைநீர்க் கங்கை
ஆறலைத்த சடைமுடியும் அம்பொன் தோளும்
அடியவர்க்குக் காட்டிஅருள் புரிவார் போலும்
ஏறலைத்த நிமிர்கொடிஒன் றுடையார் போலும்
ஏழுலகுந் தொழுகழல்எம் ஈசர் போலும்
கூறலைத்த மலைமடந்தை கொழுநர் போலும்
குடந்தைக்கீழ்க் கோட்டத்தெம் கூத்த னாரே.





ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி பரமாச்சார்ய சுவாமிகள்

36/3

உ

Phone: 2115

Sri Chandramouleeswaraya Namaha

Sri Sankara Bhagavadpadacharya Paramparagatha

HIS HOLINESS SRI KANCHI KAMAKOTI PEETADHIPATHI

Jagadguru Sri Sankaracharya Swamigal Srimatam Samasthanam

KANCHEEPURAM-631 502.

Date 5.2.92

உ

இந்த உலகம் படைப்பதற்கு மூலகாரன மாகவும் முதல் காரணமாகவும் விளங்கிய க்ஷேத்ரம் கும்பகோணம். சோழ மண்டலத்தின் நடுநாயகமாக விளங்கும் க்ஷேத்ரம் கும்பகோண்ம். இந்த உலகில் உள்ள கங்கை முதலிய அனைத்துப் புண்ய தீர்த்தங்களையும் 12 ஆண்டுகளுக்கு ஒருமுறை மகாமகக் குளத்தில் தோற்றுவிக்கும் பெருமை கொண்டது கும்பகோணம். சைவம் வைணவம் இரண்டும் இந்து சமயத்தின் இரு கண்கள்; இவ்விரண்டிற்கும் கும்பேஸ்வரர் போன்ற பல சிவன்கோயில்களையும், சக்கரபாணி, சாரங்க பாணி போன்ற வைணவக் கோயில்களையும் கொண்டது கும்பகோணம். சைவ சமய நாயன்மார்களாலும் ஆழ்வாராதிகளாலும் பாடல் பெற்ற மங்களாசாஸனம் கொண்ட க்ஷேத்ரங்களைக் கொண்டது கும்பகோண்ம். சாமான்யமாகக் குளத்திலோ ஆற்றிலோ குளித்தால் உடம்பிலுள்ள அழுக்குப் போகும். திருக்கோயில்களிலுள்ள புண்யதீர்த்தங்களில் ஸ்நானம் செய்யும்பொழுது நம்முடைய உள்ளத்திலுள்ள பாவத்தின் செயலாய்த் தோன்றுகின்ற காமம் க்ரோதம். போன்றவைகளையும் அழித்துப் புண்யத்தின் பயனான – செயலான இன்பம், நற்சிந்தனை, கடவுள் நினைப்பு, பரோபகாரம் போன்ற நற்பண்புகளை வளர்க்கக் கூடியது.

காலம் தேசம் இவ்விரண்டும் ஒவ்வொரு காலத்திலும் விசேஷ பலன்களை அளிக்கக் கூடியது. மகாமகம் போன்ற புண்யகாலம் கும்பகோணம் போன்ற மாபெரும் புண்ய க்ஷேத்ர பிரதேசம். இவ்விரண்டும் சேர்ந்திருக்கும் நல்ல நேரத்திலே பக்த கோடிகள் உள்ளத்தூய்மையை வளர்த்துக்கொள்வதற்கு ஆதி கும்ப பரமேஸ்வரனின் திருவடி நிழலில் ஒன்று கூடி, அனைத்துப் புனித நதிகளுடைய சேர்க்கை சேர்ந்துள்ள மகாமகக்குளத்தில், இறைவனும் மகாமகக் குளத்தின் கரையில் சாக்ஷியாக நின்றுகொண்டு அனைத்துப் பக்தர்களையும் திருக்கண் பார்த்துக் கொண்டிருக்கும் நேரத்தில் இறைவனின் தீர்த்தவாரிக் காக்ஷியில் நாமும் மூழ்கி ஸ்நானம் செய்து நம்முடைய உள்ளத்தைப் புனிதப்படுத்திக் கொள்வதற்கு முயல்வோமாக.

ஸ்ரீ கும்பலிங்கம் துணை.




RAJ BHAVAN
MADRAS-600 022

10.2.1992.

MESSAGE

'Mahamaham' or 'Mamangam' is one of the holy festivals of Hindus. It coincides with the ascension of Lord Guru on the Star 'Leo' on the full-moon day in the Tamil Month 'Masi', an event that happens once in 12 years. The 'Mahamaham' is an occasion when lakhs of people of various hues would be converging at Kumbakonam to take the holy bath demonstrating once again the role played by religious festivals and cultural fairs in bringing to the fore the essential unity of the people.

I am glad to know that the Mahamaham Joint Committee is bringing out a Souvenir to commemorate this event. I extend my best wishes to the Committee for the successful conduct of the holy festival.

(BHISHMA NARAIN SINGH)

டாக்டர் ஜெ. ஜெயலலிதா
முதலமைச்சர்




தலைமைச் செயலகம்
சென்னை-600 009

நாள் 5.2.1992

# செய்தி

பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஒரு முறை மலரும் குறிஞ்சி மலரைப் போன்று, பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஒரு முறை நடைபெறும் கும்பகோணம் மகாமகப் பெருவிழாவும் தமிழ்நாட்டிற்குச் சிறப்பு சேர்ப்பனவற்றுள் முக்கியமானது.

இந்து மதம் எங்ஙனம் அனைத்துச் சமயங்களில் உள்ள சிறந்த கருத்துக்களையும் தன்னகத்தே கொண்டு, நன்னெறிப் பிரவாகமாக, நீண்ட நெடுங்காலமாக விளங்கி வருகிறதோ, அதேபோன்ற சிறப்பினை உடையது மகாமகம். இப் பெருவிழாவில் பங்குகொண்டு மகாமகத் திருக்குளத்தில் நீராடி, முழுமுதற்கடவுளை வழிபடுவது இந்தியாவில் உள்ள அனைத்துப் புனித நதிகளிலும் நீராடுவதற்கு ஒப்பாகும் என்பதே அத் தனிச்சிறப்பு.

இந்தியாவிலுள்ள பல பகுதிகளிலிருந்தும் ஏறத்தாழ 40 இலட்சம் பக்தர்கள் இப்புனிதத் தலத்திற்கு வருகை புரிந்து வழிபாடு நடத்திச் செல்ல அனைத்து வசதிகளும் தமிழகத்திற்கே உரிய விருந்தோம்பல் பண்புக்கு ஏற்ப, சிறப்பான முறையில் தமிழக அரசால் செய்யப்பட்டுள்ளன.

இத்தருணத்தில், அரசோடு இணைந்து மகாமகத்தினை நன்முறையில் நடத்திட தங்களது முழுத்திறனையும் ஈடுபாட்டினையும் மகாமகம் தொடர்பான வசதிகள் ஏற்படுத்தும் பணியில் காட்டியமைக்குக் கும்பகோணம் வாழ் பெருமக்களுக்கு நன்றியை நான் உரித்தாக்கிக் கொள்கிறேன். மகாமகப் பெருவிழா சிறப்பாக நடைபெற ஒத்துழைத்த அனைவருக்கும் எனது பாராட்டுக்களையும் நன்றியினையும் தெரிவித்துக் கொள்கிறேன். மகாமகம் நன்முறையில் நடந்து தமிழகத்தின் பெருமை சிறக்க வேண்டும் என்று எனது விருப்பத்தினையும் தெரிவித்துக் கொள்வதில் பெருமகிழ்ச்சி கொள்கிறேன்.

(ஜெ. ஜெயலலிதா),
முதலமைச்சர்.

**எஸ். டி. சோமசுந்தரம்**
வருவாய்த்துறை அமைச்சர்



தலைமைச் செயலகம்
சென்னை-600 009

நாள் 6 . 2 . '92

# குடந்தை மாமாங்கம்

'நீரின்றி அமையாது உலகு' என்பது திருவள்ளுவர் வாக்கு. மனித நாகரிகம் முதன் முதலில் ஆற்றங்கரையில் தான் தோன்றியது என்பதற்குத் தொல்லியல் சான்றுகள் உள்ளன. சிந்து சமவெளியில் அகழாய்வு செய்தபொழுது ஒர ஊர் அமைப்பினையும் அங்கே காண முடிந்தது. அதில் மிகப் பெரிய அளவில் குளம் ஒன்று இருந்ததற்கான தடயங்கள் கிடைத்துள்ளன. இந்திய நாட்டில் கங்கை, காவிரி, தென்பெண்ணை, தாமிரபரணி ஆகிய ஆற்றங்கரையில் தான் முதன் முதலில் நாகரிகம் தோன்றியது என்பதற்குச் சான்றுகள் கிடைத்துள்ளன.

சங்க காலம் தொட்டு உண்டி கொடுக்கும் தண்ணீரைத் தெய்வமாக மக்கள் வழிபட்டு வந்துள்ளனர் என்பதற்குச் சான்றுகள் உள்ளன. கடல் துறைத் தெய்வம், ஆற்றுத் துறைத் தெய்வம், குளத்தில் உறையும் தெய்வம் என்று பல பெயர்களால் நீரினைப் போற்றி வந்துள்ளனர். இது நம் முன்னோர்கள் இயற்கை வழிபாட்டில் கொண்டிருந்த அந்நாளைய ஈடுபாட்டினைக் காட்டுகிறது. தை நீராடல், மார்கழி நீராடல் போன்றவையும் அத்தகையதே. நீர் வளத்தினால் புன்செய் நிலங்கள் நன்செய் நிலங்களாக மாறின. காவிரி புரக்கும் சோழ வள நாடு சோறுடைத்து என்று கூறப்படுவது இந்நீர் வளத்தின் அடிப்படையில் தான். "குளம்தொட்டு வளம் பெருக்கி" என்ற ஒரு பழமொழியும் நெடுங்காலமாக நம்மிடையே வழங்கி வருகிறது. நீர் வளத்தினைப் பெருக்குவதற்காகச் சோழ மாமன்னர்கள் காவிரிக்குக் கரைகளை அமைத்தும் அவைகளை எடுப்பித்தும் பல்வகை ஏரிகளை வெட்டுவித்தும், குளங்களை அமைத்தும் சிறு சிறு ஆறுகளின் மூலம் நீர்ப் பாசன வசதிகளைச் செய்து கொடுத்து உள்ளனர் என்பதற்கான குறிப்புகள் கல்வெட்டுக்களில் ஏராளமாகக் கிடைக்கின்றன.

அந்த வகையில் 'மகா்மக நீராட்டும்' நீர் வழிபாட்டின் மரபை ஒட்டி நடைபெறும் திருவிழா்வாகும். நீர் வழிபாட்டின் சிறப்பினைப் போற்றும் இந்த நாளில் தமிழக முதல்வர் டாக்டர் புரட்சித் தலைவி அவர்கள் காவிரி நீர்ப் பிரச்சினையில் எடுத்து வரும் முயற்சிகள் சோழ வள நாட்டினை மேலும் வளமுடைத்தாகச் செய்யும் என்பதில் ஐயமில்லை. மகாமகத் திருவிழா சீரும் சிறப்புடன் நடைபெறுவதற்கு என்னுடைய மனங்கனிந்த வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

(எஸ். டி. சோமசுந்தரம்)

அழகு திருநாவுக்கரசு
நகர வளர்ச்சி மற்றும்
உள்ளாட்சித்துறை அமைச்சர்



தலைமைச் செயலகம்
சென்னை-600 009

நாள் 6.2.92

# வாழ்த்துச் செய்தி

உயர்ந்த கோபுரங்களைக் கொண்ட கோயில்கள், வழிபாட்டு இடங்களாக மட்டுமின்றி வழிவழிவந்த கலைகளைப் பேணிக் காத்திடும் போற்றுதற்குரிய இடங்களாக அமைந்துள்ளன. இத்தகு சிறப்புமிக்க திருத்தலங்கள் தமிழகத்தில் பல உள்ளன. காலத்தால் பல கோயில்கள் சிறப்பிழந்து பராமரிக்கப்படாதனவாகி வழிபாட்டுக்கும் இயலாத நிலைக்கு வந்திருந்தன. இந்நிலை உணர்ந்த நமது மாண்புமிகு முதல்வர் டாக்டர் புரட்சித் தலைவி அவர்கள், நலிவடைந்த கோயில்களை மேம்படுத்திடக் கோயில்கள் பராமரிப்பு நிதியைத் தொடங்கி வைத்து அவர்களும் நிதி அளித்துள்ளார்கள்.

12 ஆண்டுகளுக்கு ஒரு முறை கொண்டாடப்படும் புனித மகாமகம் சமயநெறி தழைத்திடும் தமிழ்நாட்டின் பாரம்பரியத்தைக் காத்திடும் முயற்சியில் ஈடுபட்டுள்ள தமிழகத்தின் காவல் தெய்வம், மாண்புமிகு முதல்வர் டாக்டர் புரட்சித் தலைவி அவர்களின் நல்லாட்சியில் நிகழவிருப்பது நமக்குப் பெருமையாகும்.

தஞ்சை மாவட்டத்தில், கோயில்கள் நிறைந்த கும்பகோணத்தில் 1992 பிப்ரவரித் திங்கள் 18ஆம் நாள் நிகழவிருக்கும் புனித மகாமகம் எல்லா வகையிலும் ஏற்றமிக்கதாக அமைந்திட, புரட்சித் தலைவி அவர்களின், ஆணையின்கீழ், தேவையான நிதி வசதியும் செய்யப்பட்டு, இலட்சக்கணக்கான மக்கள் சீரிய வகையில் எல்லா வசதிகளையும் பெற்றிட எல்லாத் துறைகளும் முனைந்து செயல்படுகின்றன.

இதயதெய்வம் புரட்சித் தலைவி அவர்களின் சீரிய தலைமையில் இயங்கும் இந்த அரசு, கும்பகோணம் மகாமகம் இந்திய மக்களின் பாராட்டினைப் பெறுமளவிற்கு முனைந்து செயலாற்றி வருகிறது. இந்த ஒப்பற்ற வரலாற்றுப் புகழ்மிக்க நிகழ்ச்சி சிறந்தோங்கிட என் இதயங்கனிந்த நல்வாழ்த்துக்கள்.

18-2-92 அன்று கும்பகோணத்திற்கு வரவிருக்கின்ற பக்தர்களுக்கும் எனது வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

அழகுதிருநாவுக்கரசு
6/2/92

(அழகு திருநாவுக்கரசு)



திரு. சி. தங்கராஜு, இ.ஆ.ப.,
அரசுச் செயலர்,
வணிகவரி மற்றும் இந்து அறநிலய ஆட்சித்துறை.

C. THANGARAJU, I.A.S.,
Secretary to Govt.



Commercial Taxes & Religious
Endowments Department,
Secretariat;
MADRAS - 600 009.

Dated the 7th February, 1992.

# MESSAGE

I deem it a great privilege to be officially associated with the arrangements that are being made for the convenience of pilgrims visiting this 'Temple Town of Kumbakonam' in connection with the "Mahamaham festival" to take place on 18.2.92. This festival, which is considered holiest of the holy religious festivals by the Hindus is celebrated once in twelve years. I recall that I was present on the occasion of its celebration in 1980 with my family. The festival is of all India popularity and comes in endless continuity in the holy tradition of the glorious culture of our country.The State Government is implementing a variety of measures, involving a number of State Government Departments/State Public Sector Undertakings, at a total cost of Rs. about 10 Crores. The Railways, Posts & Telegraph, Telephones, Doordarshan and All India Radio are playing their role for the successful celebration of the festival. All the 19 temples in Kumbakonam- 12 Saivite and 7 Vaishnavite temples, have been renovated and painted afresh. The State Government have provided Rs.40.27 lakhs from all sources. Public have contributed works to the value of Rs.10 lakhs.The official machinery is working in full-swing with enthusiasm, to provide maximum convenience to the pilgrims. The success of our efforts would certainly depend upon the extent to which the needs and requirements of the multitude of pilgrims visiting the Town in connection with the festival, are met. There could always be scope for improvement in the quality and standard of service rendered, and the experience gained in making arrangements for this year's festival, should enable Government and other Agencies to render better service in future, on such occasions. I hope that the festival proves a success.On my part, I cherish this opportunity of being associated with the arrangements for this festival.

(C. Thangaraju),
Secretary to Government.

SUGAVANESWAR, I.A.S.,
Commissioner
Hindu Religious And Charitable
Endowments Administration
Department



MADRAS - 600 034.

09-02-'92

# வாழ்த்துரை

சிவபெருமான் அமுத கலசத்திலிருந்து உலகைத் தோற்றுவித்த இடமாகத் திருக்குடந்தை கருதப்படுகிறது. பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஒருமுறை, குருபகவான் சிம்மராசியில் வருகையில், சூரியன் கும்பராசியில் சேரும் மாசி மாதத்தில் மகநட்சத்திரம் கூடிய பௌர்ணமியில் மகாமகப் பெருவிழா கும்பகோணத்தில் சிறப்பாக நடைபெற்று வருகிறது.

இந்தியா முழுவதிலுமிருந்து பல லட்சக்கணக்கான பக்தர்கள் மகாமகப் பெருவிழாவின்போது மகாமகத் தீர்த்தத்தில் நீராடித் தத்தம் பாவங்களைப் போக்கிக் கொள்கிறார்கள்.

கங்கை, காவிரி, யமுனை, சரஸ்வதி, நர்மதை, கோதாவரி, மகாநதி, பாலாறு, சரயு ஆகிய ஒன்பது புண்ணிய நதிகளும் மகாமகத் தீர்த்தத்தில் நீராடிப் பாவம் தீர்கின்றன என்றால் மகாமகத் தீர்த்தச் சிறப்பினை என்னென்று புகழ்வது?

புண்ணிய சேத்திரங்களில் வசிப்பவர்கள் செய்யும் பாவமெல்லாம் காசியிலே தீரும்; அக்காசியிலும் தீராத பாவங்கள் கும்பகோண மகாமகத் தீர்த்தம் ஆடத் தீர்ந்து போகும் என்று ஆன்றோர்கள் மகாமகத் தீர்த்தச் சிறப்பைப் போற்றி உள்ளனர்.

"பூமருவும் கங்கைமுதல் புனிதமாம் பெருந்தீர்த்தம்
மாமகந்தான் ஆடுதற்கு வந்து வழிபடும் கோயில்"

என்று சேக்கிழார் பெருமான் கி. பி. 12ம் நூற்றாண்டில் தாமருளிய பெரிய புராணத்திலேயே மகாமகப் பெருவிழாவின் சிறப்பினைக் கூறியுள்ளார்.

திருநாவுக்கரசர், தாம் வாழ்ந்த கி. பி. ஏழாம் நூற்றாண்டிலேயே மகாமகத் தீர்த்தமும் விழாவும் சிறப்புற்றிருந்ததைக் கீழ்க்கண்ட தேவாரப் பாடலில் போற்றியுள்ளார்.

"தாவிமுதற் காவிரி நல்யமுனை கங்கை
தலைச்சதி பொற்றாமரை புட்கரணி தெண்ணீர்க்
கோவியொடு குமரிவரு தீர்த்தம் சூழ்ந்த
குடந்தைக்கீழ்க் கோட்டத் தெங் கூத்தனாரே"

இவ்வாறு பல நூற்றாண்டுகளுக்கு முன்பே தமிழ்த் திருமுறைகளில் பெருமையாகப் பேசப்பட்டுள்ள மகாமக விழா இவ்வாண்டு பிப்ரவரி 18ஆம் நாள் குடந்தையில் சிறப்புறக் கொண்டாடப்பட இருக்கிறது. வட நாட்டில் கும்பமேளா, ஆந்திரத்தில் புஷ்கரம் போன்று தமிழகத்தில் சிறப்புறக் கொண்டாடப்படும் மகாமக விழாவை மிகச் சிறப்பாகக் கொண்டாடுவதற்குத் தமிழக அரசு வேண்டிய நிதி உதவியினை வழங்கி, தக்க ஆணைகள் பிறப்பித்து ஆவன செய்துள்ளது.

இந்து சமய அறநிலைய ஆட்சித் துறை, குடந்தையில் உள்ள அனைத்து சைவ வைணவத் திருக்கோயில்களின் திருப்பணியைச் செவ்வனே நிறைவேற்றித் திருக்குடநீராட்டு விழாக்களையும் சிறப்புற நிகழ்த்தியுள்ளது. அனைத்துக் கோவில்களும் புதுப்பொலிவுடன் திகழ்கின்றன. முந்தைய மகாமக விழாக்களைக் காட்டிலும் மிகச் சிறப்பாக 11 திருக்கோயில்களில் கும்பாபிஷேகம் நடத்தப்பட்டுள்ளது. மகாமக விழா காணவரும் பக்தர்கள் குடந்தைப் புண்ணியச் சேத்திரத்திலுள்ள அனைத்துத் திருக்கோயில்களையும் தொழுது வழிபடுவதற்குத் தேவையான அனைத்து வசதிகளையும் செய்துள்ளது.

மகாமக விழாவைக் கண்டும், தீர்த்தமாடியும் புண்ணியக் கோயில்களை வழிபட்டும், பதினாயிரம் அசுவமேதயாகம் செய்வதனால் உண்டாகும் பலன் யாவும் ஒருங்கு பெற இறையன்பர்கள் அனைவரையும் கும்பகோணம் வருக வருக என அன்போடு வரவேற்கின்றேன். மகாமக விழா சிறக்கவும் மகாமக விழா மலர் மணக்கவும் என் நல்வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்கிறேன்.



திரு. தி. சண்முக ராஜேஸ்வரன், இ.ஆ.ப.,
மாவட்ட ஆட்சியர்,
தஞ்சாவூர்.

# மலர்க்குழு

| | | |
|---|---|---|
| **திரு தி. சண்முக ராஜேஸ்வரன், இ.ஆ.ப.,**<br>மாவட்ட ஆட்சியர், தஞ்சாவூர். | : | தலைவர் |
| திரு மு. ராஜேந்திரன், எம்.ஏ., பி.எல்.,<br>வருவாய்க் கோட்ட ஆட்சியர், தஞ்சாவூர். | : | அமைப்பாளர் |
| திரு. தீபக் அகர்வால், இ.ஆ.ப.,<br>உதவி ஆட்சியர் (பயிற்சி) தஞ்சாவூர். | : | உறுப்பினர் |
| திரு. த. பத்மநாபன்; எம்.ஏ., எம்.எல்.ஐ.எஸ்.,<br>நூலக இயக்குநர், தமிழ்ப் பல்கலைக்கழகம். | : | உறுப்பினர் |
| திரு குடவாயில் பாலசுப்ரமணியன், எம்.ஏ.,<br>காப்பாளர் (நுண்படப் பிரிவு),<br>தஞ்சை சரஸ்வதிமஹால் நூலகம். | : | உறுப்பினர் |
| திரு புலவர் செ. இராசு, எம்.ஏ.,<br>இணைப்பேராசிரியர், கல்வெட்டியல் துறை,<br>தமிழ்ப் பல்கலைக்கழகம். | : | உறுப்பினர் |
| திரு புலவர் ப. வெ. நாகராஜன், பி.லிட்., விசாரத்,<br>ஓலைச்சுவடித் துறை,<br>தமிழ்ப் பல்கலைக்கழகம். | : | உறுப்பினர் |
| திரு நல்லாசிரியர் புலவர் சி. இளங்கோவன்,<br>உதவி இயக்குநர், பதிப்புத்துறை,<br>தமிழ்ப் பல்கலைக்கழகம். | : | உறுப்பினர் |
| **திரு. இரா. நடராசன்**<br>**உதவிப் பொது மேலாளர்**<br>**பாரத ஸ்டேட் வங்கி**<br>**தஞ்சாவூர்.** | : | உறுப்பினர் |

## நன்றி!

ஓவியமேதை அமரர் சில்பி என்ற மாமனிதரின் படைப்புக்களைத் தமிழகம் அறியச் செய்த பெருமை ஆனந்த விகடனுக்கே உரியது. அவர்தம் கை வண்ணங்களின் துணையோடு இம்மலர் தெய்வ மணம் பரப்புகின்றது. ஆனந்த விகடனுக்கு மலர்க்குழுவினரின் நெஞ்சார்ந்த நன்றி.

# பதிப்புரை

காவிரிக் கரையின் ஒரு கவின்மிகு நகராகவும் விண்மறைக்கும் கோபுரங்களைப் பெற்ற வினைகளைப் போக்கும் தெய்வத் திருக் கோயில்களையுடைய கோநகரமாகவும் தமிழகப் பண்பாட்டின் உறைவிடமாகவும் சங்க காலம் முதல் இரண்டாயிரம் ஆண்டுகளாகத் தொடர்ந்து வரலாற்றுச் சிறப்புடைய பேரூராகவும் திகழுவது குடந்தை – இன்றைய கும்பகோணம்.

திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், முதலிய சைவ சமய குரவர்களாலும் வைணவ ஆழ்வார்களாலும் பாடிப் பரவப்பெற்ற எண்ணற்ற தெய்வீகத் திருத்தலங்களைத் தன்னகத்தும் சுற்றுப் புறத்திலும் கொண்டு திகழுவது கும்பகோணம் – குடந்தை மாநகர்.

அறுபடை வீடுகளில் ஒன்றாகிய ஏரகம் என்னும் சுவாமி மலையும் சோழர் கோநகராகிய பழையாறும் மூன்றாம் குலோத்துங்கனின் திரிபுவன வீரேச்வரமும் வரகுணபாண்டியன் வணங்கிப்பணி செய்த திருவிடைமருதூரும் போன்ற புனிதத்தலங்களால் சூழப் பெற்றது பண்டு குடமூக்கு என வழங்கப்பெற்ற இன்றைய கும்கோணம்.

குடந்தையென்னும் மங்கை நல்லாளுக்கு மலர்மாலை இட்டு அணி செய்தது போல அரிசிலாறும் காவிரியாறும் இருபுறமும் இணைந்தோட வளம் பெறுவது இந்நகர்.

இந்நகர் காவிரித் தாயின் அலைக் கரத்தால் அணைக்கப்பெற்று நன்செய் வளம் கொஞ்சி விளையாடும் பசுமை வளம் பெற்றது. உண்ணும் உணவு பற்றிய ஆய்வு, அருகிலுள்ள ஆடுதுறையிலும் உடுக்கும் வண்ணப்பட்டு திரிபுவனம் முதலிய பல இடங்களிலும் உற்பத்தியாவது கும்பகோணத்திற்குத் தனிச் சிறப்புத் தருவன.

தெய்வத் திருமேனிகளைப் படைக்கும் 'பிரம்மாக்களாகிய' சிற்பிகளால் சிற்பக்கலை இங்குச் செழித்து வளர்கிறது. நிலவளம், கலைவளம் போன்ற பல்வேறு தனிச்சிறப்புக்கள் பெற்ற கும்பகோணத்தில், பன்னிரு ஆண்டுகளுக்கொருமுறை வரும் 'மகாமகம்' அந்நகரின் அழகுக்குப் பெருமை சேர்க்கிறது. பன்னிரண்டு ஆண்டுகட்கு ஒரு முறையே பூக்கும் குறிஞ்சிமலர் போல் தமிழக விழாக்களில் தனித்தன்மை வாய்ந்த குறிஞ்சிமலர் விழா, மகாமகம் 'விழா' இவ்விழா சீருடனும் சிறப்புடனும் நல்ல கோள்நிலை கூடும் நல்வேளையில் 18-2-1992 அன்று நிகழ்கிறது. இலட்சோப இலட்சம் மக்கள் குடந்தை நோக்கி வந்து ஆலயங்களில் இறைவனை வணங்கி, மகாமகக் குளத்தில் புனித நீராடி மகிழ காத்துக் கொண்டிருக்கிறார்கள்.

வடநாட்டில் ஒரு கும்ப மேளா; அதற்கு இணையாகத் தென்னாட்டில் கும்பகோணம் மகாமகம். மகாமகத்துப் புனித நீராட்டுக்கு வர வேண்டுமென்பதற்காகத் தங்கள் வீட்டு மங்கல நிகழ்ச்சிகளைக்கூட மகாமக ஆண்டில் நடத்த மாட்டார்கள் சோழநாட்டு மக்கள் சிறப்பாகத் தஞ்சை மாவட்ட மக்களுக்கு மகாமகப்புனித நீராட்டில் அத்துணை ஈடுபாடு.

மாண்புமிகு தமிழக முதல்வர் அவர்கள் கும்பகோணம் மகாமகவிழா சீரோடும் சிறப் போடும் பிறர்போற்றிப் புகழுமாறும் நடைபெற வேண்டும் என்ற எண்ணத்தில் ஏறக்குறைய பத்து கோடி உருபாய்களை ஒதுக்கித் தந்துள்ளார்கள். அவர்களின் எண்ணத்திற்கு மாவட்ட நிருவாக அமைப்பும் சிறந்த முறையில் செயலாற்றி, இப்புனித விழாவிற்கு வேண்டிய எல்லா வசதிகளையும் செய்துள்ளது. இம் மாபெரும் விழாநடக்கும் இச்சிறப்புமிகு ஆண்டில் நான் தஞ்சை மாவட்டத்தின் மாவட்ட

ஆட்சியராக பொறுப்பேற்றுள்ளமையைப் பெரும்பேறாகக் கருதுகின்றேன்.

இந்த நிலையில் நூறாயிரக்கணக்கில் விழாவில் பங்குகொள்ளும் மக்கள் அறிவுக்கும் விருந்து படைக்க வேண்டுமே என்ற அவாவின் வெளிப்பாடே இம்மலர் வெளியீட்டு முயற்சி.

இம்மலரில் மகாமகம், அதன் தீர்த்தச் சிறப்பு, நீராடும் காலம், நீராடும் முறை, மகாமகத்தன்று நீராடவரும் நவகன்னியர் சிறப்புக்கள், குடந்தைத் திருக்கோயில்கள், குடந்தை வட்டார அருளாளர்கள், அறம் வளர்க்கும் திருமடங்கள், ஆலயச் சிற்பங்கள், கல்வெட்டுச் செய்திகள், கட்டடக்கலை, சோழமண்டல வரலாற்றுப் பெருமைகள் ஆகிய அனைத்தும் இடம்பெற்றுள்ளன. இவை கல்வெட்டு, செப்பேடு, வரலாறு, இலக்கியம், தனிப்பாடல், புராணம், இதிகாசம், சாத்திரம், தோத்திரம், வேதம், அவற்றின் வியாக்கியானங்கள் காட்டும் அடிப்படைச் சான்றுகளைக் கொண்டு தக்க சான்றோர்களால் எழுதப் பெற்றவையாகும்; எனவே இவை தனிச் சிறப்பு வாய்ந்தவை.

கும்பகோணம் – மகாமகம், சோழநாடு – சோழநாட்டுச் சமயநிறுவனம், சமயச் சான்றோர் பற்றிய அரிய தகவல்களைக் கொண்ட கலைக் களஞ்சியமாக இம்மலர் விளங்குகிறது. அருளாளர்களின் ஆசிச் செய்திகளும் அரிய ஒளிப்படங்களும் இம்மலரை அணி செய்கின்றன. மலரைப் படிப்போர் என்றும் பாதுகாத்து வைக்கும் வண்ணம் கலையழகும் கருத்தழகும் பொருந்த இம் மலர் மலர்ந்துள்ளது; மணக்கவருகிறது.

ஆலயங்களைப் பாதுகாக்கவேண்டும்; அவற்றின் பண்டைய வரலாற்றைப் போற்ற வேண்டும்; இறை வழிபாடு குன்றாமல் நடைபெறவேண்டும்; பக்தர்கட்கு வேண்டிய வழிபாட்டு வசதிகள் செய்தளிக்கவேண்டும் என்னும் தமிழக அரசின் கொள்கைகளுக்கேற்ப இம்மலர் தயாரிக்கப்பெற்றுள்ளது.

மிகக் குறுகிய காலத்தில் ஒப்படைக்கப் பெற்ற இப்பணியைச் செம்மையாகவும் சிறப்பா கவும் செய்தளித்த தஞ்சை வருவாய்க் கோட்ட ஆட்சியர் திரு மு. இராசேந்திரன் எம். ஏ., பி.எல், அவர்கட்கும் அவர் ஆற்றிய இம்மகாமலர் பணிகட்கு உறுதுணையாக இருந்த மலர்க்குழு உறுப்பினர்கட்கும் மலருக்கு விளம்பரங்கள் அளித்துதவிய பல்வேறு நிறுவனங்கட்கும் என் நன்றி உரித்தாகுக. மிகக் குறுகிய காலத்தில் ஏற்று அச்சுப்பணியை ஆற்றி இம்மலர் பொலிவோடும் கருத்துச் செறிவோடும் வெளிவர உறுதுணைபுரிந்த தமிழ்ப் பல்கலைக்கழகப் பதிப்புத்துறையினருக்கு என் பாராட்டுக்கள்.

மலர் சிறப்புற வெளிவர உதவிய அனை வருக்கும் சிறப்பாக உடனிருந்து பணியாற்றிய திரு குடவாயில் பாலசுப்பிரமணியன், திரு புலவர்.செ.இராசு, திரு புலவர். பா.வே.நாகராசன் ஆகியவர்களுக்கும் ஓவியர் சென்னை திரு. சந்துரு அவர்களுக்கும் சிறந்த கட்டுரைகளை வழங்கிய கட்டுரையாளர்களுக்கும் என் நன்றி. மணக்க வரும் தென்றலாக, இனிக்க வரும் முக்கனியாக, கலைநலம் பொலியும் காவியமாக மலையென நிலைத்த கருத்துக் கருவூலமாக வரும் மகாமக மலர் மணம் நுகர வாருங்கள்! பெற்று மகிழுங்கள்!

அன்புடன்,

தி. சண்முக ராஜேஸ்வரன்

(தி. சண்முக ராஜேஸ்வரன், இ. ஆ. ப.,)
மாவட்ட ஆட்சியர்,
தஞ்சாவூர்.



# மஹாமகம்

ஸ்ரீமான் சி. சுப்ரமணிய பாரதி

(பெ. தூரன் தொகுத்த பாரதி தமிழ் — நூலிலிருந்து)

24 பிப்ரவரி 1921 ரௌத்திரி மாசி 13

இந்த்ரனை தேவ தேவன் என்ப. மற்ற மனிதருக்கு வானவர் எப்படியோ, அப்படி வானவர்க்கவன் என்பது குறிப்பு. வட மொழியில் வால்மீகி, காளிதாஸர்களையும், தமிழில் கம்பனையும் புகழேந்தியையும், இங்கிலீஷ் ஷெல்லியையும், "கவிகளின் கவி" என்று சிறப்பித்துச் சொல்லுகிறார்கள். அதாவது, மற்ற மனிதருக்குக் கவிகளால் எத்தனை புதிய சுவை கிடைக்கிறதோ, அத்தனை புதிய சுவை கவிஞருக்கு அவ் வால்மீகி முதலியவர்களிடம் கிடைக்கிறதென்பது குறிப்பு.

அதுபோல கும்பகோணத்திலுள்ள அமிர்தவாவிகள் என்று சொல்லப்பட்ட பொற்றாமரைக் குளம், மஹாமகக்குளம், இவ்விரண்டும் புண்ய தீர்த்தங்களுக்குப் புண்யதீர்த்தமென்று புராணம் சொல்லுகிறது. அதெப்படியெனில் முற்காலத்தில் ஒன்பது தீர்த்த தேவதைகளும் ஈசனிடத்தில் சென்று, "கடவுளே, உலகத்திலுள்ள பாவிகளெல்லாரும் எங்களிடம் வந்து மூழ்கித் தங்கள் பாவங்களையெல்லாம் எங்களுக்குக் கரைத்து விட்டுவிட்டுப் புண்யாத்மாக்களாகிச் செல்லுகின்றனர். நாங்கள் சம்பாதிக்கும் இந்தப் பாவங்களுக்கெல்லாம் விமோசனம் அருள் புரிய வேண்டும்" என்று ப்ரார்த்தனை செய்தனர். அவர்களிடம் கருணை பாவித்து எம்பெருமான், "புண்ய தீர்த்தங்களே! பாவங்களாலே தீண்டப்படாத அமிர்த வாவிகள் இரண்டு நான் கும்பகோணத்தில் சமைத்திருக்கிறேன். அவற்றில் சென்று ஸ்நானம் புரிந்தால் உங்களுடைய பாவங்கள் விலகிவிடும்" என்று கட்டளை புரிந்தார்.

பன்னிரண்டு வருஷங்களுக் கொருமுறை இங்கு கங்கை முதலிய தீர்த்த தேவதைகள் வந்து ஸ்நானம் புரியும் ஸமயமாகிய மஹாமக புண்யகாலம் நேற்று (செப். 22) செவ்வாய்க்கிழமையன்று கும்பகோணத்தில் கொண்டாடப்பட்டது. லக்ஷக்கணக்கான ஹிந்துக்கள் நேற்று அதில் ஸ்நானம் செய்திருப்பார்கள்.

ஆனால், இத்தனை பேர்களும் ஸர்வ பாப ரஹிதர்களாய்ப் பரம சுத்தத் தன்மை யெய்தி விடுவார்களோ என்று சில மதப் பற்றில்லாதார் ஆக்ஷேபிக்கலாம். தீர்த்த ஸ்தலங்கள், புண்ய க்ஷேத்ரங்கள், எல்லா மதஸ்தர்களுக்கும் பொதுவாக அமைந்திருக்கின்றன. யூதர்கள் யெருஸலேமைப் புண்யக்ஷேத்ர மென்கிறார்கள். கிருஸ்தவர்கள் யெருஸலேம், நஜரேத், ரோமாபுரி முதலிய பல பல புண்ய க்ஷேத்திரங்களைக் கொண்டாடுகிறார்கள். முஸ்லிம்கள் மக்கம், மதீனம், யெருஸலேம் முதலிய கணக்கற்ற க்ஷேத்ரங்களைக் கொண்டாடுகிறார்கள். பௌத்தர் கயை முதலிய ஆயிரக்கணக்கான புண்ய க்ஷேத்ரங்களைப் போற்றி வருகிறார்கள். எனவே, அறியாமை காரணமாகவோ, மறதி காரணமாகவோ சில கிறிஸ்தவப் பாதிரிகள் புண்ய க்ஷேத்ரயாத்திரை ஹிந்துக்களுக்கு மாத்திரம் விசேஷமாக ஏற்பட்ட வழக்கமென்று கருதுவார் போல், ஹிந்து மதத்தின்மீது இவ்விஷயத்தில் பழிகூறுவதை நாம் புறக்கணித்து, மதவாதிகளுக்குள்ளே இவ் வழக்கத்தை மறுத்துரைப்போர் யாருமிருக்க நியாமில்லை யாதலால் மதப் பற்றில்லாதவர்களே மேற்கூறிய





கேள்வி கேட்டார்களென்று குறிப்பிட்டோம்.

ஆனால், மதப் பற்றுடையார், அஃதற்றோர் என்னும் இரு திறத்தாரும் உணர்ந்துகொள்ளும்படி, இதுபோன்ற தீர்த்த யாத்திரைகளின் தத்துவத்தை இங்கு விளக்குவோம். இவற்றில் பாவமழிந்து புண்யத் தன்மை பெற வேண்டுமானால், உண்மையான நம்பிக்கை யிருக்கவேண்டுமென்று நம்முடைய புராதன ஹிந்து சாஸ்த்ரங்கள் மிகத் தெளிவாக வற்புறுத்தி யிருக்கின்றன. உண்மையான மனக்கோளின்றி கங்கையில் முழுகினாலும், மஹாமகத்தில் மூழ்கினாலும், பாபகர்மந் தொலையாதென்று சாஸ்த்ரங்கள் தெளிவுபடத் தெரிவிக்கின்றன. இனிமேல் நாம் பாவம் பண்ணுவதில்லையென்ற மனோ நிச்சயம் வேண்டும்.

### தீர்த்த யாத்திரையின் அர்த்தமும் பயனும்

இந்தத் தீர்மானந்தான் பரிசுத்தத் தன்மை கொடுக்கிறது. ஒருவன் இந்த க்ஷணமுதல் பாவம் செய்வதில்லை யென்று மனவுறுதி செய்து கொள்ளுதலாகிய அக்நி மயமான செய்கையாலேயே அவன் அதுவரை செய்த பாவமெல்லாம் எரித்துவிடப் படுகிறது. "ஞானாக்நிஸ் ஸர்வகர்மாணி பஸ்மஸாத் குருதேர்ஜுன" என்று பகவத் கீதையில் கடவுள் சொல்லியிருக்கிறார். பாவத்தை இனிச் செய்வதில்லையென்ற தீர்மானம் உண்மையாக இருக்கவேண்டும். ஞானமே அவ்வளவுதான். அதைக் காட்டிலும் பெரிய ஞானம் கிடையாது. சிலர் தவத்தால் ஞானமெய்த நாடுகிறார்கள். சிலர் தானத்தால், சிலர் ஆராய்ச்சியால், சிலர் தியானத்தால், சிலர் பூஜையால் ஞானமெய்த முயலுகிறார்கள். ஆனால் எல்லா வழிகளும் உண்மையான வழிகளே. இவையெல்லாம் ஞானத்தைத் தரும். ஆனால் எந்த வழியாலே தரும்? பாவத்தைத் தீர்த்துவிடுதலாகிய வழியிலே தரும். அவற்றால் பாவம் நீங்கும். அதனால் மோக்ஷம் அல்லது அறிவு மயக்கம் தெளியும். அதிலிருந்து ஞானமுண்டாகும். ஞானமாவது எல்லாம் கடவுள் மயமென்ற அனுபவம். பாவமாவது தனக்கேனும் பிறர்க்கேனும் துன்பம் விளைவித்தல். இங்ஙனமே, புண்யமாவது தனக்கேனும் பிறர்க்கேனும் துன்பக் கலப்பில்லாத சுத்தமான இன்பம் விளைவித்தற்குரிய செய்கையென்பது சாஸ்த்ர கோடிகளின் பரம ஸித்தாந்தம். எல்லாம் ஆத்மா----எல்லாம் கடவுள் ஆதலால், எல்லாம்தான் என்ற ஞானத்தால் பிற உயிர்களுக்குத் துன்பம் விளைவிக்கும் குணம் நீங்கிவிடும். அதாவது பாவம் போய்விடும். நியாயம் புண்யம்; அநியாயம் பாவம். ஹிதம் புண்யம்; அஹிதம் பாவம். ஸத்யம் புண்யம்; அஸத்யம் பாவம். திருப்தி புண்யம்; துக்கம் பாவம்.

மரணமாவது பாவத்தின் கூலியென்று கிறிஸ்தவ வேதம் சொல்லுகிறது.

"இங்ஙனம் பாவத்தைத் துறந்துவிட விரும்புவோனுக்கு மனோ நிச்சயமும், ஞான உதயமும் கதியாயின், பணச் செலவு செய்து ரயிலேறிக் கும்பகோணத்துக்கும், காசிக்கும், ராமேசுவரத்திற்கும் ஏன் போகவேண்டும்?" என்று சிலர் வினவக்கூடும்.

மன மாறுதல்கள் சாசுவதமான இடத்தே விரதங்கள் என்று கூறப்படும். பெரிய சாசுவதமான ஸங்கல்பங்கள் விரதங்களெனப்படும். இந்த விரதங்கள் மனிதருடைய நினைப்பில் நன்றாக அழுந்தும் பொருட்டு ஆன்றோர் உலகமெங்கணும் இவற்றுக்குச் சில சடங்குகள் வகுத்திருக்கிறார்கள். கல்வி தொடங்கப் போகிறபோது ஒரு சடங்கு நடத்தப்படுகிறது. விவாகம் பண்ணும்போது மிகவும் கோலாகலமான கிரியைகள் நடக்கின்றன. புதிய வீட்டில் குடிபுகும்போது ஒரு சடங்கு நடத்து கிறோம். இவற்றின் நோக்கம், நாம் ஏதேனும் அமங்களத்தை நீக்கி மங்களத்தை சாசுவத உடைமை யாகச் செய்துகொள்ள வேண்டுமென்பதேயாம். நான் மேலே கூறியபடி, மரணம் பாவத்தின் கூலி என்று கிறிஸ்தவ வேதம் சொல்லுவதைக் கருது மிடத்தே, அமங்களமனைத்திலும் அமங்களமானது பாவமென்று விளங்குகிறது. எனவே, மங்களங்களிற் சிறந்தது புண்யமென்பதும் வெளிப்படையாம்.

இப்படிப்பட்ட பாவத்தைக் களைந்து புண்யத்தைப் போர்த்துக்கொள்வதாகிய ராஜ விரதத்துக்கு ஒரு சடங்கு வேண்டாவோ? அவ்விதச் சடங்கே மஹாமக முதலிய புண்ய தீர்த்த யாத்திரை யென்க.

# திருக்குடமூக்கில் மாமகம்



குடந்தை என். சேதுராமன் பி.எஸ்சி., டி.எம்.ஐ.டி.

'காந்தமன் என்னும் சோழ மன்னன் வேண்ட, அகத்திய முனிவர் தனது குடத்தைக் கவிழ்க்க, அதிலிருந்து பெருக்கெடுத்து வருபவளும், ஆகாய கங்கையுமாகிய காவிரிப் பாவை, சூரிய குலத் தோன்றலாகிய சோழனும், அவனது குடிமக்களும் சிறப்புடன் வாழ, ஒளிவிளக்காகத் திகழ்கிறாள்' என்று மணிமேகலை பகர்கின்றது. முதலாம் ஆதித்ய சோழனின் (கி. பி. 871-910) திருச்செந் துறைக் கல்வெட்டு "தக்ஷிண கங்கா காவேரி" என்று காவிரியைச் சீறப்பிக்கின்றது. "அலைபுரியும் புனற்பொன்னி ஆறுடைய சோழன் அருண்மொழி" என்று முதலாம் இராஜ ராஜ சோழனின் (கி. பி. 985-1014) திருமலைக் கல்வெட்டு கூறும். "தென்திசை தேமரு கமலப் பூமகள் பொதுமையும் பொன்னி ஆடை நன்னிலப்பாவை' என்று முதல் குலோத்துங்க சோழனின் (கி. பி. 1070-1122) மெய்க்கீர்த்தியும் விளக்கிச் சொல்லும். ஆகாய கங்கை, தென்கங்கை (தக்ஷிண கங்கா) என்று சிறப்பித்துக் கூறப்படும் காவிரி வளந்தரும் நாடு "பொன்னி நாடு" என்று அழைக்கப்பட்டது. இப்பொன்னி நாடே சோழ நாடாகும்.

இச் சோழ நாடு இன்று திருச்சி, தஞ்சை, நாகப்பட்டினம் மாவட்டங்களாகக் காட்சி அளிக்கின்றது. "சோழநாடு சோறுஉடைத்து" என்னும் பழம் பாடலுக்கு ஏற்ப மூன்றாம் குலோத்துங்க சோழனின் (1178-1218) மெய்க் கீர்த்தியும் "சுங்க மில்லாச் சோணாட்டில் சோற்றுமலை கண்டருளி" என்று சிறப்பித்துக் கூறுகிறது. இன்றைய கும்பகோணத்தின் தென்மேற்கே ஆறு கிலோமீட்டர் தூரத்தில் உள்ள பழையாறை என்னும் சிற்றூர், அன்று சோழ மன்னர்கள் முடிசூடும் நகரமாக விளங்கியது. நந்திபுரம், பழையாறை, பட்டீசுரம், திருச்சத்தி முற்றம் ஆகிய சிற்றூர்கள் எல்லாம் ஒருங்கிணைந்து மிகப்பெரிய நகரமாகி முடிகொண்டசோழபுரம்" என்று அழைக்கப்பட்ட காலமும் உண்டு. இவ்வூரின் அருகில் இரண்டாம் இராஜராஜ சோழன் கி.பி. 1166-இல் இராஜராஜபுரம் என்னும் நகரை எடுப்பித்து, இராஜராஜேஸ்வரம் கோயிலையும் கட்டினான். இதனை ஒட்டக்கூத்தர் தக்கயாகப் பரணியில் புகழ்ந்து பாடியுள்ளார். காலத்தின் கோலத்தினால் இவ்வூர் இன்று தாராசுரம் என்று அழைக்கப்படுகிறது.

இன்றைய கும்பகோணம், தேவார காலத்தில் (கி. பி. 7-ஆம் நூற்றாண்டு) குடமூக்கு என்று அழைக்கப்பட்டது. ஒரு ஆறு கடலோடு கலக்கும்போது, வளம் மிகுந்த அப்பகுதி முக்கோண வடிவத்தில் அமைந்திருக்கும். இதனை ஆங்கிலத்தில் டெல்டா என்றும், வடமொழியில் "கோண மண்டலம்" என்றும் குறிப்பிடுவார்கள். தமிழில் குடநாடு எனப்படும். உதாரணமாகத் தாம்பரபரணி ஆறு கடலோடு கலக்கும் டெல்டா பகுதிக்குக் குடநாடு என்று பெயர் இருந்ததை அப்பகுதியில் உள்ள கோயில்களின் கல்வெட்டுகளில் காணலாம். பெருந்தொகையில் உள்ள ஒரு பாடல் விக்கிரம சோழனைப்பற்றிக் கூறும்போது 'குடக் காவிரிநாடா அகளங்கா" என்று போற்றுகின்றது. காவிரியின் டெல்டா பகுதியாகிய சோழநாடு முக்கோண வடிவாய் ஒரு குடம் போன்று அமைந்து உள்ளது. அக்



குடத்தின் மூக்கில் (நுனியில்) அமைந்துள்ள நகரம் குடமூக்கு என்று பெயர் பெற்றது.

பண்டைய இலக்கியங்களிலும், தேவாரத் திருமுறைகளிலும், நாலாயிரத் திவ்யப் பிரபந்தங்களிலும் கல்வெட்டுகளிலும் இன்றைய கும்பகோண நகருக்குக் குடமூக்கு என்ற பெயரே காணப்படுகின்றது. 'ஐ' விகுதி பெற்றுக் குடந்தை (குடத்தில் அழுந்தியது) எனவும் அழைக்கப்பட்டது. பதின்மூன்றாம் நூற்றாண்டில் சோழர் வலிவு இழந்து, வரலாற்று ஏடுகளிலிருந்து மறைந்தனர். தமிழ்நாடு முழுவதும் பாண்டியரின் ஆதிக்கத்தின் கீழ் வந்தது. பதினான்காம் நூற்றாண்டில் டில்லி சுல்தானியரின் படையெடுப்பால் பாண்டியர் பெரும் அவதிக்குள்ளாயினர். 1323-இல் டில்லி சுல்தானியர் மதுரையைப் பிடித்து 48 ஆண்டுகள் அரசு புரிந்தனர். பாண்டியர் மதுரையைவிட்டு வெளியேறி, கொங்குமண்டலம், சோழமண்டலம், நடுவில்மண்டலம், தொண்டைமண்டலம் ஆகிய பகுதிகளில் அரசு புரிந்தனர். கி. பி. 1371-இல் விஜயநகர வேந்தர் கம்பண உடையார் மதுரையைப் பிடித்தார். சுல்தான்கள் மறைந்தனர். தமிழ்நாடு விஜயநகர மன்னர்களின் ஆளுகைக்குக்கீழ் வந்தது. பாண்டியர் திருநெல்வேலிப் பகுதிக்குச் சென்று விட்டனர். விஜயநகர மன்னர்கள் கன்னடியர்கள்; எனினும் நலிந்திருந்த தமிழ்க் கலாசாரத்திற்குப் புத்துயிர் அளித்தனர். என்ற போதிலும் சில இடங்களில் தமிழில் இருந்த பெயர்களை வடமொழியில் கொணர்ந்தனர். இவ்வூரின் பெயரான குடமூக்கு என்பதை வடமொழியில் கும்பகோணம் என்று அழைக்கலாயினர்.

கும்பகோணம் சார்ங்கபாணி கோயிலின் முன்மண்டபத்துத் தெற்குச் சுவரில் காணப்படும் கல்வெட்டு விஜயநகர வேந்தர் விருப்பண்ண உடையாருக்கு உரியது. இக்கல்வெட்டின் காலம் கி. பி. 1385 ஐப்பசி மாதம் 27-ஆம் தேதி புதன்கிழமை ஆகும். இக் கல்வெட்டில்தான் இவ்வூரின் பெயர் கும்பகோணம் என்று முதன் முதலாக வருகின்றது. எனவே இப்பெயர் 1385-இல் இருந்து வழக்காற்றில் வந்தது எனக் கொள்ளலாம். அருணகிரியாரும் "கும்பகோண நகர் வந்த பெருமாளே" என்று கும்பகோணத்து முருகப்பெருமானைப் போற்றுகிறார். இதனால் அருணகிரியார் பதினான்காம் நூற்றாண்டின் கடைப் பகுதிக்குப் பின் வாழ்ந்தனர் என்பதனை அறியலாம். குடமூக்கு என்ற பெயர் கால வெள்ளத்தில் வழக்காற்றில் இருந்து மறைந்தது. கும்பகோணம் என்ற பெயரும் திருக்குடந்தை என்ற பெயருமே எழுத்திலும், பேச்சிலும் நிலைத்து நின்றுள்ளன.

இரண்டாம் குலோத்துங்க சோழன் கி. பி. 1133 முதல் 1150 வரை ஆட்சி புரிந்தான். இம்மன்னனது அவையை முதல் மந்திரியாக அலங்கரித்த சேக்கிழார் பெருமான் பெரியபுராணத்தை இயற்றினார். பெரிய புராணத்தில் திருஞான சம்பந்தரின் வரலாற்றினைச் சிறப்புடன் எடுத்துரைக்கிறார். திருஞானசம்பந்தர் பல திருக் கோயில்களுக்குச் சென்று பதிகங்கள் பாடி, சிவபெருமானுக்குச் செந்தமிழ்மாலை பல சூட்டி மகிழ்ந்து, திருக்குடமூக்கினை வந்தடைந்தார். திருக்குட மூக்கின் கோயில், திருக்கீழ்க்கோட்டத்துக் கோயில், திருக்குடந்தைக் காரோணம் ஆகிய கோயில்களுக்கு எழுந்தருளி இறைவன் மீது பதிகங்கள் பாடினார். இதனைச் சேக்கிழார் வாயிலாகக் காண்போம்.

- திருஞான சம்பந்தர் திருக்குட
  மூக்கினைச்சேர
  வருவார்தம் பெருமானை வன்தமிழில்
  திருப்பதிகம்
  உருகாநின்று உளமகிழக் குடமூக்கை
  உகந்திருந்த
  பெருமான்எம் இறைஎன்று பெருகு
  இசையால் பரவினார்
- வந்தணைந்து திருக்கீழ்க்கோட்டத்து
  இருந்த வான்பொருளைச்
  சிந்தை மகிழ்வுற வணங்கித் திருத்
  தொண்டருடன் செல்வார்
  அந்தணர்கள் புடைசூழ்ந்து போற்றிசைப்ப
  அவரோடும்
  கந்தமலர்ப் பொழில் சூழ்ந்த காரோணம்
  சென்றடைந்தார்
- **பூமருவும் கங்கைமுதற் புனிதமாம்
  பெருந்தீர்த்த
  மாமகந்தான் ஆடுதற்கு வந்துவழி
  படுங்கோயில்**
  தூமருவும் மலர்க்கையில் தொழுது
  வலம்கொண்டணைந்து
  காமர்கெட நுதல்விழித்தார் கழல்
  பணிந்து கண்களித்தார்



## கும்பேஸ்வரர் கோயில்

ஏழாம் நூற்றாண்டில் அவதரித்த திருஞானசம்பந்தரால் "குடமூக்கின் பெருமான் எம் இறைவன்" என்று பாடல்பெற்ற கோயில் இன்றைய கும்பேஸ்வரர் கோயிலாகும். பல காலகட்டங்களில் திருப்பணி செய்யப்பட்டதால் சோழர் கால கல்வெட்டுகளை இக்கோயிலில் காணுவதற்கு இல்லை. விஜயநகர மன்னர்களின் பிரதிநிதியாக இருந்த குருராஜ ருத்ரதேவ சோழமகாராஜனின் கல்வெட்டு உள்ளது. இதன் காலம் கி. பி. 1554 ஆகும். ஆதிகும்பேஸ்வரர் கோயிலுக்கு வயலூர், ஏழாம் கட்டளைக் கிராமங்களை அளித்த செய்தியைக் கூறுகிறது. பக்கத்தில் உள்ள நாகேஸ்வரர் கோயிலிருந்து கிடைக்கும் ஒரு கல்வெட்டு மூன்றாம் இராஜராஜ சோழனுக்கு உரியது. இதன் காலம் கி. பி. 1237 பங்குனி மாதமாகும். இதில் உடையார் திருக்குடமூக்கு உடையார் கோயிலுக்குக் கொடுத்த நிலங்கள் சொல்லப்பட்டுள்ளன. இப்பெயர் திருஞான சம்பந்தரின் குடமூக்குப் பதிகத்துடன் ஒத்து வருகிறது. குடமூக்கு என்னும் பெயர் கும்பகோணம் என்று மாறிய பின்பு இறைவன் என்ற சொல் ஈசராகிக் குடமூக்கின் இறைவன் கும்பேஸ்வரர் என்று அழைக்கப்படலானார். திருஞானசம்பந்தர் அன்னையை வளர்மங்கை என்று இனிய தமிழில் சிறப்பிக்கின்றார். இவ்வன்னை இன்று மங்களாம்பாள் என்று அழகிய வடமொழிப்பெயரை ஏற்றுள்ளாள்.

தேவாரம், கல்வெட்டுகள் இவைகளில் கூறப்பட்டுள்ள செய்திகளை தொடர்பு படுத்தி உண்மையான வரலாற்றினை அறியாத காரணத்தினால் பிற்காலத்தில் புதிய பெயர்களால் அழைக்கப்படும் கும்பேஸ் வரருக்கும், கும்பகோணத்திற்கும் பல புராணக் கதைகள் எழுந்தன.

## நாகேஸ்வரர் கோயில்

திருஞானசம்பந்தர் அடியார்கள் புடைசூழ வந்து தரிசித்த திருக்கீழ்க்கோட்டம் என்னும் கோயில் இன்றைய நாகேஸ்வரர் கோயிலாகும். திருஞானசம்பந்தரின் சமகாலத்தவரான திரு நாவுக்கரசர் இக்கோயிலின் இறைவனைக் கீழ்க்கோட்டத்து எம்கூத்தனார் என்று தமது பதிகத்தில் சிறப்பித்துள்ளார். திருநாவுக்கரசரின் பாடலுக் கேற்ப இக்கோயிலில் உள்ள நடராசப்பெருமான், சிவகாமி அம்மையின் விக்கிரகங்கள் கலை அழகு சொட்டச் சொட்ட அமைந்துள்ளன. இவை 11-ஆம் நூற்றாண்டின் சோழர்களின் கலைப்பாணியைச் சேர்ந்தவை. சோழர்களின் கல்வெட்டுகளில் இக்கோயிலின் பெயர் திருக்குடமூக்கின் திருக்கீழ்க் கோட்டம் உடையார் கோயில் என்றே சொல்லப்பட்டுள்ளது. இக்கோயிலில் இருந்து கிடைக்கும் ஒரு கல்வெட்டு மூன்றாம் இராஜ ராஜ சோழனுக்கு உரியது. இதன் காலம் கி. பி. 1217 பங்குனி மாதமாகும் "மடந்தைபாக தேவர் திருவனத்தில் எழுந்தருளி இருந்து திரு ஓலக்கம் செய்து ஸ்ரீபுராணம் கேட்டு அருளாநிற்க" என்று கூறிச் செல்கிறது. மடந்தைபாக தேவர் என்பது உற்சவ விக்கிரகத்தை குறிக்கும். இக்கோயிலுக்கு உரிய திருநாவுக்கரசரின் பாடலில் மடப்பாவை மணாளர், உமைஒருபாகர் என்று வருவதால் விக்கிரகத்தின் பெயரும் மடந்தைபாக தேவர் என்று அழைக்கப்படலாயிற்று. மேலும் இறைவனின் உற்சவ விக்கிரகம் எழுந்தருளியிருக்கும் காலத்து, ஸ்ரீபுராணமாகிய பெரியபுராணம் படிக்கும் வழக்கம் இருந்ததை இக்கல்வெட்டால் அறிகிறோம். கி. பி. 1490-க்கு உரிய கோனேரிதேவ மகாராயரின் கல்வெட்டில் இக்கோயிலின் பெயர் திருகுடமூக்குநாயனார் மடந்தைபாக நாயனார் கோயில் என்றே அழைக்கப்படுகிறது. இப்பெயர் கி. பி. 1735-க்கு உரிய மராட்டியரின் செப்பேடுகளிலும் சொல்லப்பட்டுள்ளது. (உற்சவ விக்கிரகங்களின் பெயரால் கோயில்களின் பெயர்களை மாற்றம் செய்யும் வழக்கம் 14-ஆம் நூற்றாண்டுக்குப் பின் ஏற்பட்டது). சென்ற நூற்றாண்டிலிருந்து நாகேஸ்வரர் கோயில் என்று அழைக்கப்படுகிறது. இம் மாற்றத்திற்கு வரலாற்றின் அடிப்படையில் காரணம் தெரியவில்லை. தேவாரம், கல்வெட்டுகள், செப்பேடு இவைகளில் கூறப்பட்டுள்ள செய்திகளை அறியாத காரணத்தால் கோயில்களுக்குப் புதிய பெயர்கள் ஏற்படுகின்றன என்பதற்கு இது ஒரு எடுத்துக்காட்டு.

## காரோணம்

திருக்கீழ்க்கோட்டத்துப் பெருமானைத் தரிசித்தபின்பு திருஞானசம்பந்தர் குடந்தை (குடமூக்கின்) காரோணம் வந்தடைந்தார். கங்கை முதல் புனிதமாம் பெரும்தீர்த்தம் இக்கோயில்

முதல் புனிதமாம் பெரும்தீர்த்தம் இக்கோயில் எத்துணை புகழ் வாய்ந்தது தெரியுமா? மாமகம்தான் ஆடுதற்கு வந்து வழிபடும் கோயில். இன்றைய மகாமகக் குளத்தின் வடகரையில் அமைந்துள்ள காசி விஸ்வநாதர் ஆலயமே காரோணம் கோயிலாகும். இக்கோயிலில் கல்வெட்டுகள் இல்லை. பிற்காலத்துத் திருப்பணியில் சிலாசாசனப் பலகைகள் பூமிக்கு அடியில் புதைக்கப்பட்டனவாகக் கூறுகிறார்கள். நாகேஸ்வரர் கோயிலிருந்து கிடைக்கும் முதலாம் இராஜாதிராஜ சோழனின் கல்வெட்டில் (கி. பி. 1054) திருக்காரோணம் உடைய மஹாதேவர்க்கும் கன்னியா பிடாரிகளுக்கும் அளித்த நிவந்தங்கள் கூறப்பட்டுள்ளன. எனவே இக்கோயிலில் கன்னிகைகள் எழுவர் இருந்திருக்கவேண்டும். ஆம் உண்மையிலேயே உள்ளனர். 10-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த இரண்டு கைகளுடன் கூடிய சுமார் ஐந்து அடி உயரமுள்ள ஏழு கன்னிகைகளின் சிலைகள் இன்றும் உள்ளன. இத்துடன் நாலு கைகளுடன் கூடிய பிற்காலக் கலைப்பாணியைச் சார்ந்த துர்க்கை, பார்வதியின் சிலைகளையும் சேர்த்து நவநதிக்கன்னிகைகள் என்று வழிபாடு செய்து வருகின்றனர்.

காரோணம் என்றால் என்ன? பாசுபத சைவகுருவான லகுலீசரால் இரண்டாம் நூற்றாண்டில் பாசுபத சைவ மடம் முதன் முதலாக குஜராத் மாநிலத்தில் காரோணம் என்னும் ஊரில் நிறுவப்பட்டது. இவ்வூர் இன்றும் பரோடா அருகில் கார்வான் என்ற பெயரில் உள்ளது. வடமொழிக் கல்வெட்டுகள், இலக்கியங்கள் இவைகளில் கூறப்படும் காயாரோஹணம், காயாவரோஹணம், காயாவிரோஹணம் என்பதன் சுருக்கமே காரோணம் என்பதாகும். காய ஆரோஹணம் என்றால் (பக்தன்) உடலுடன் மேலே (வானத்திற்கு) செல்வது என்பது பொருள், காய அவரோஹணம் என்றால் பக்தனுக்காக இறைவன் (மனித உருவில்) இறங்கி வருகின்றான் (அவதாரம்) என்பதாகும். மீண்டும் பிறவியில்லை என்ற பொருளில் காயாவிரோஹணம் என்று சொல்லப்பட்டுள்ளது. இவ்வடமொழிச் சொற்களின் சுருக்கமான காரோணம் என்ற பெயரில் தமிழ்நாட்டில் கச்சிக் காரோணம், நாகைக் காரோண்ம், குடந்தைக் காரோணம் என்று மூன்று கோயில்கள் இருந்தன. இதில் முதலாவது மறைந்துவிட்டது. மற்ற இரண்டும் உள்ளன. நாகப்பட்டினத்தில் உள்ள பாடல் பெற்ற சிவத்தலம் திருநாகைக்காரோணம் ஆகும்.

கும்பகோணத்தில் மகாமகக் குளக்கரையில் வடகரையில் உள்ள காசிவிஸ்வநாதர் ஆலயமே திருக்குடந்தைக் காரோணம் என்பதைக் கண்டோம். இக்கோயில்களுக்குப் பதிகங்கள் அருளிய சம்பந்தர், இப் பதிகங்களைப் பாடுவோர் கரையா உடலோடு வானடைவர் (காய ஆரோஹணம்) என்றும், கருவார் இடும்பைப் பிறப்பு அறுப்பர் (காய அவிரோஹணம்) என்றும் கூறுகின்றார். கி. பி. 2-ஆம் நூற்றாண்டில் தாபிக்கப்பட்ட லகுலீச பாசுபத தலைமைப் பீடத்தின் இடமான காரோணத்தின் பெயரைத் தாங்கித் தமிழ்நாட்டில் கோயில்கள் இருந்தன. இத் தலங்களின் சித்தாந்த விளக்கங்களை ஏழாம் நூற்றாண்டில் சம்பந்தர் தமது பதிகங்களில் எடுத்துரைத்தார் என்பதை நோக்கவேண்டும். பக்தனுக்காக இறைவன் மனித உருவில் வந்து அருள்புரிந்தான் என்று சொல்லும் புராண வரலாறுகள் நிறைய உள்ளன.

திருஞானசம்பந்தரின் பதிகங்களின் கடைசிப் பாடலில் அவரது சிறப்பு முத்திரை இருக்கும். சம்பந்தரின் பதிகங்களைப் பாடவல்லார் வானுலகத்தில் "உறைவர், வானுலகு ஆள்வர், வானோர் உலகத்தில் வீற்றிருப்பர் என்று பல இடங்களில் கூறுகின்றார். திருவாவடுதுறை திருப்பறியலூர்ப் பதிகங்களில் சம்பந்தரின் பாடல்களைப் பாடுவோர் மறுபிறவி அடையார் என்று கூறுகிறார். "ஞானசம்பந்தன் நவின்ற மொழி நலமிகு பத்தும் பண் இயல்பாகப் பத்தியாய்ப் பாடியும், ஆடியும் பயில வல்லோர், விண்ணவர் விமானம் கொடுவர ஏறி விண் உலகு ஆண்டு வீற்றிருப்பர்" என்று திருவெண்குருப் பதிகத்தில் சொல்லுகிறார். பெரியபுராணத்தில் அறுபத்து மூன்று நாயன்மார்களின் வரலாறுகள் சொல்லப்பட்டுள்ளன. இவர்கள் பல சாதிகளைச் சேர்ந்தவர். சிவபெருமானின் கருணையால் உடலோடு வானடைந்ததாகப் பல நாயன்மார்கள் குறிப்பிடப்படுகின்றனர்: "களையா உடலோடு சேரமான் ஆரூரன்" திருக்கயிலை சென்றனர் என்று ஒன்பதாம் திருமுறையில் பூந்துருத்தி காட நம்பி கூறுவதும் ஈண்டு நோக்கத்தக்கது.

உடலோடு வானடைய முடியுமா? (காய ஆரோஹணம்). இது விஞ்ஞானபூர்வமான கேள்வி. இதற்குத் தத்துவார்த்தமான விடையைத்தான் காணமுடியும். திருக்கோயில்களில் இறைவன், இறைவி மற்றும் பல தெய்வத் திருமேனிகளை வணங்குகிறோம். மயிலாப்பூர், கும்பகோணம், திருவிடைமருதூர் ஆகிய இடங்களில் 63-நாயன்மார்களின் விக்ரஹங்களை வீதிவலமாக எழுந்தருளச்செய்து விழாக்கள் கொண்டாடுவதை இன்றும் காணலாம். நாயன்மார்களையும் ஆழ்வார்களையும் தெய்வங்களாக வணங்குகிறோம். இங்குதான் வானடையும் விந்தையைக் காணலாம். மனிதன் தெய்வமாகிறான் என்பதே இதன் பொருள். கோயில்களில் முதன்முதலாகத் தெய்வமாக வணங்கப்பட்ட மனிதன் சண்டிகேச்வரர்தான். இதனைப் பதினொன்றாம் திருமுறையில் நக்கீரர் கோபப்பிரசாதத்தில் "மானுடனாகிய சண்டியை வானவன் ஆக்கியும்" என்கிறார். பல சாதிகளைச் சேர்ந்த நாயன்மார்களையும், ஆழ்வார்களையும் கோயிலில் வைத்து வழிபடுவது ஏன்? பக்தியில் முக்தி அடைந்த மனிதன் தெய்வமாகிறான். உள்ளத்தைத் தொடவைக்கும் மிகச் சிறந்த சித்தாந்தம். இதையே திருவள்ளுவர் "வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும் தெய்வத்துள் வைக்கப்படும்" என்று விளக்கமாகக் கூறியுள்ளார்.

### மகாமகம்

சேக்கிழார் பெருமான் கூறுவதை நன்கு கவனிக்க வேண்டும். கங்கை முதல் புனிதமாம் பெரும்தீர்த்தம் மாமகம்தான் ஆடுதற்கு வந்து வழிபடும் கோயில் என்று குடந்தைக் காரோணம் கோயிலைக் குறிப்பிடுகிறார். மகாமகப் பெருவிழா என்றால் என்ன? சாதாரணமாக ஒவ்வொரு ஆண்டும் மாசி மாதத்தில் பௌர்ணமியும் மக நக்ஷத்திரமும் சேரும் நாள் மாசிமகத் திருநாள் என்பதாக எல்லாக் கோயில்களிலும் கொண்டாடப்படும். இதற்கென முற்காலங்களில் அரசர்கள் நிவந்தங்கள் கொடுத்திருந்தனர். குருவாகிய வியாழன் கிரகம் (பிரகஸ்பதி) சிம்மராசியில் இருக்கும்போது மாசி மாதத்தில் பௌர்ணமியும் மக நக்ஷத்திரமும் சேரும் நாள் மகாமகம் எனப்படும். வியாழன் ஒருமுறை சூரியனைச்சுற்றிவர 1,18,618 வருடங்கள் ஆகின்றன. எனவே மகாமகத் திருவிழா 12 ஆண்டுகளுக்கு ஒருமுறை வரும். (சில சமயம் 11-வது ஆண்டிலும் வருவதுண்டு.இது வானசாத்திரக் கணக்கு). இன்று கும்பகோணத்தில் மட்டுமே மகாமகப் பெருவிழா கொண்டாடப்பட்டு வருகிறது.

திருச்சிராப்பள்ளி திருவானைக்காக் கோவிலிலிருந்து கிடைக்கும் ஒரு கல்வெட்டு விஜயநகரப் பேரரசின் குறுநில மன்னனான தெலுங்குச் சோழன் வாலக காமயர் அக்கலராசருக்கு உரியது. "சகாப்தம் 1403-இதன் மேல் செல்லா நின்ற பிலவ சம்வச்சரத்து கும்ப நாயற்று பூர்வபக்ஷத்து பௌர்ணமியும், ஆதித்த வாரமும் பெற்ற மகத்து நாள் - சிங்க பிரஹஸ்பதி மகாமக புண்ய காலத்திலே. . . . . . . ." திருவானைக்காக் கோயிலிலிருக்கும் அகிலாண்ட நாயகியருக்குத் தினமும் அமுது படைக்க வெண்கோண்குடி என்னும் கிராமத்தில் ஒரு வேலி நிலத்தை அக்கலராசர் தானமாக அளித்தார் என்று சொல்லப்பட்டுள்ளது. இக்கல்வெட்டின் காலம் கி. பி. 1482 மாசி மாதம் ஒன்பதாம் தியதி ஞாயிற்றுக்கிழமை. அன்று மகாமகப் புண்யகாலம். இப்புனித நாளை அக்கலராசர் கொண்டாடித் திருவானைக்கா கோவிலுக்குத் நிவந்தம் அளித்துள்ளார்.

விஜயநகரப் பேரரசின் சக்கரவர்த்தி கிருஷ்ணதேவராயர் கி. பி. 1500 முதல் 1529-வரை ஆட்சி புரிந்தார். சென்னைக்கு வடக்கே உள்ள நாகலாபுரம் (செங்கை எம். ஜி. ஆர். மாவட்டம்) வேதநாராயணஸ்வாமி விஷ்ணு கோயில் இம்மன்னனின் காலத்தில் கட்டப்பட்டது. இக்கோயிலில் பல கல்வெட்டுகள் உள்ளன. இக்கல்வெட்டுகளின் காலம் கி. பி. 1524 தை மாதம் எட்டாம் தேதி செவ்வாய்க் கிழமையாகும். முன்னாளில் கிருஷ்ணதேவராயர் கோயிலுக்குச் செய்த பல தர்மங்களைக் கூறுகின்றன. முக்கியமான செய்தியை மட்டும் பார்ப்போம். கிருஷ்ணதேவராயர் திக்விஜயம் செய்துவிட்டு, திருவேங்கடநாதனையும் ஸேவித்து (திருப்பதி) திருவேங்கடநாதனுக்கு வேண்டின கைங்கர்யம் பண்ணிக் கும்பகோணத்துக்கு மகாமகத் தீர்த்தத்துக்குச் செல்லுகிற வழியில் அரிகண்டபுரம் கரியமாணிக்கத்து எம்பெருமான் கோயில் திருப்பணிக்கு இரண்டு லக்ஷம் பொன் கொடுத்தார் என்று கூறப்பட்டுள்ளது. எனவே முன்னாளில் கி. பி. 1524-க்கு முன் ஒரு மகாமகம் வந்துள்ளது. அது எப்போது? கி. பி. 1517-இல்



மாசி மாதம் 12-ஆம் தேதி வெள்ளிக்கிழமை மகாமகப் பெருவிழா கும்பகோணத்தில் நடந்தது. அவ்வமயம் கிருஷ்ணதேவராயரும் புனித நீராடினார். மயிலாடுதுறைக்கு அருகில் உள்ள குத்தாலம் "சொன்னவாரறிவார்" கோயிலிலிருந்து கிடைக்கும் ஒரு கல்வெட்டு கிருஷ்ணதேவராயருக்கு உரியது. தாது வருஷம் மாமாங்கப் புண்யகாலத்திலே வெள்ளிக்கிழமை அரசன் செய்த தர்மங்களைக் கூறுகிறது. இக்குறிப்புகள் கி. பி. 1517 மாசி மாதம் 12-ஆம் தேதி வெள்ளிக்கிழமையுடன் ஒத்து வருகின்றன. 'ராயவாசகமு' என்னும் தெலுங்குக் காவியம் கூறும் சுவையான செய்தியைப் பார்ப்போம். "கி. பி. 1517 தை மாதம் 6-ஆம் தேதி வெள்ளிக்கிழமை கிருஷ்ணதேவராயர் திருப்பதிக்குச் சென்று திருவேங்கடநாதனைத் தரிசித்தார். இரண்டு கைகளும் கூப்பிய நிலையில் தன்னைப் போன்ற பிரதிமம் ஒன்றும், அரசியார் திருமலா தேவியார், நாகலா தேவியார் பிரதிமங்கள் இரண்டும் ஆக மூன்று பிரதிமங்களைச் செம்பினால் செய்து திருப்பதிக் கோயிலில் வைத்தார். (இச்செம்புப் பிரதிமங்களை இன்றும் காணலாம்). பிறகு கும்பகோணத்திற்குச் சென்று மாசி மாதம் 12-ஆம் தேதி வெள்ளிக்கிழமை மகாமகப் புண்யகாலத்தில் மகாமகக் குளத்தில் நீராடினார்".

அச்சுதப்ப நாயக்கனும் (1572-1600), அவனது மகன் இரகுநாத நாயக்கனும் (1600-34) தஞ்சையைத் தலைநகராகக் கொண்டு ஆட்சிபுரிந்தனர். இவ் விருவருக்கும் கோவிந்த தீக்ஷிதர் முதல் மந்திரியாக விளங்கினார். தீக்ஷிதரது மேற்பார்வையில் கும்பேஸ்வரர் கோயில் புதுப்பிக்கப்பட்டது. காவிரிக்கரையில் மண்டபங்களும், படித்துறைகளும் கட்டப் பட்டன. பட்டீசுரம் சிவன்கோயில் புதுப்பிக்கப்பட்டது. மகாமகக்குளம் செப்பனிடப் பட்டது. குளத்தைச் சுற்றி உள்ள 16 மண்டபங்களும், படித்துறைகளும் கோவிந்த தீக்ஷிதரால் கட்டப்பட்டன. புண்ணிய தீர்த்தக் கரையில் 16 விதமான தானங்கள் செய்ய வேண்டும். இத்தானங்கள் முறையே பொன், பூமி, கன்னிகை, வஸ்திரம், பசு, குதிரை, காளைமாடு, அன்னம், தென்னை, குப்ததானம், சந்தனம், முத்து, நவரத்தினம், தேன், உப்பு, பழங்கள் ஆகியனவாகும். இத்தானங்களை எப்படிச் செய்வது என்பதை 16 மண்டபங்களின் மேல் தளத்தில் சிற்பங்களாகக் காணலாம். துலாபாரம் செய்வது அரசர்களுக்கு விசேஷமாகும். மகாமகக் குளத்தின் வடமேற்குக் கரையில் உள்ள பெரிய மண்டபம் துலாபார மண்டபம் என்று அழைக்கப்படுகிறது. தராசின் ஒரு தட்டில் மன்னர் வீற்றிருப்பார்; மற்றொரு தட்டில் எடைக்கு எடை பொன் நிறுத்தி அப்பொன்னை வாசுதேவன் சாக்ஷியாக ஹோமம் வளர்த்து, அரசியர், மந்திரி, பிரதானிகள் முன்னிலையில் மன்னர் தானமாக வழங்குவார். இதனை இத் துலாபார மண்டபத்து மேல்தளத்தில் சிற்பங்களாகக் காணலாம். தராசின் ஒரு தட்டில் நாயக்கமன்னனும் மற்ற தட்டில் பொற்குவியலும் உள்ள சிற்பத்தைக் காணும்போது அந்த நாளும் வந்திடாதா என்று நினைப்பதில் வியப்பேதுமில்லை. துலா பாரத்திற்காக தராசு தொங்கவிடுவதற்குப் பதிக்கப்பட்ட கல்லாலான கோல் இன்றும் மண்டபத்தின் மேல்தளத்தில் உள்ளது. (இதில் காணப்படும் நாயக்க மன்னன் அச்சுதப்பனா அல்லது இரகுநாதனா என்பது தெரியவில்லை). இரகுநாத நாயக்கன் காலத்தில் கோவிந்த தீக்ஷிதர், கும்பகோணம் வேதபாடசாலையை சக வருடம் 1542-இல் (கி.பி. 1620) நிறுவினார். இப்பாடசாலை இன்றும் செவ்வனே நடந்து வருகிறது. குடந்தை இராமஸ்வாமி கோயிலும் கட்டப்பட்டது. இக்கோயிலில் இரகுநாத நாயக்கனின் சிலை உள்ளது இரகுநாத நாயக்கனுக்கும் டென்மார்க் தேசத்தவர்களுக்கும் தொடர்பு இருந்தது. இதனைக் குறிக்கும் வகையில் இராமஸ்வாமி கோயிலில் டென்மார்க் தேசத்து இராணுவ அதிகாரியின் சிலையை இன்றும் காணலாம்.

மக்கள் பல புண்ணிய நதிகளிலும், தீர்த்தங்களிலும் நீராடித் தங்கள் பாவங்களைக் கழுவுகிறார்கள். இப்பாவங்களைச் சுமந்துவரும் நதி தீர்த்தமாதர்கள் 12-ஆண்டுகளுக்கு ஒருமுறை மகாமகக் குளத்தில் மகாமகத்தன்று நீராடி அப்பாவங்களைக் கழுவுகிறார்கள் என்பது ஐதீகம். அத் தீர்த்தங்களைக் குறிக்கும்வகையில் இக்குளத்தில் ஊற்றுகளும், ஊற்றுகளுடன் கூடிய 15 கிணறுகளும் உள்ளன. அவை முறையே கங்கை, யமுனை, கோதாவரி, நர்மதை, சரஸ்வதி, காவிரி, சரயு முதலிய நதிகளும், வாயு, பிர்ம்ம, குபேர, ஈசானிய, இந்திர, அக்கினி, நாக, குமரி, நிருதி, பயோஷ்ணி, தேவ, வருண, கன்யா முதலிய தீர்த்தங்களும் ஆகும்.



# மஹாமகம்

ஸ்ரீமான் சி. சுப்ரமணிய பாரதி

(பெ. தூரன் தொகுத்த பாரதி தமிழ் — நூலிலிருந்து)

24 பிப்ரவரி 1921 ரௌத்திரி மாசி 13

இந்த்ரனை தேவ தேவன் என்ப. மற்ற மனிதருக்கு வானவர் எப்படியோ, அப்படி வானவர்க்கவன் என்பது குறிப்பு. வட மொழியில் வால்மீகி, காளிதாஸர்களையும், தமிழில் கம்பனையும் புகழேந்தியையும், இங்கிலீஷ் ஷெல்லியையும், "கவிகளின் கவி" என்று சிறப்பித்துச் சொல்லுகிறார்கள். அதாவது, மற்ற மனிதருக்குக் கவிகளால் எத்தனை புதிய சுவை கிடைக்கிறதோ, அத்தனை புதிய சுவை கவிஞருக்கு அவ் வால்மீகி முதலியவர்களிடம் கிடைக்கிறதென்பது குறிப்பு.

அதுபோல கும்பகோணத்திலுள்ள அமிர்தவாவிகள் என்று சொல்லப்பட்ட பொற்றாமரைக் குளம், மஹாமகக்குளம், இவ்விரண்டும் புண்ய தீர்த்தங்களுக்குப் புண்யதீர்த்தமென்று புராணம் சொல்லுகிறது. அதெப்படியெனில் முற்காலத்தில் ஒன்பது தீர்த்த தேவதைகளும் ஈசனிடத்தில் சென்று, "கடவுளே, உலகத்திலுள்ள பாவிகளெல்லாரும் எங்களிடம் வந்து மூழ்கித் தங்கள் பாவங்களையெல்லாம் எங்களுக்குக் கரைத்து விட்டுவிட்டுப் புண்யாத்மாக்களாகிச் செல்லுகின்றனர். நாங்கள் சம்பாதிக்கும் இந்தப் பாவங்களுக்கெல்லாம் விமோசனம் அருள் புரிய வேண்டும்" என்று ப்ரார்த்தனை செய்தனர். அவர்களிடம் கருணை பாவித்து எம்பெருமான், "புண்ய தீர்த்தங்களே! பாவங்களாலே தீண்டப்படாத அமிர்த வாவிகள் இரண்டு நான் கும்பகோணத்தில் சமைத்திருக்கிறேன். அவற்றில் சென்று ஸ்நானம் புரிந்தால் உங்களுடைய பாவங்கள் விலகிவிடும்" என்று கட்டளை புரிந்தார்.

பன்னிரண்டு வருஷங்களுக் கொருமுறை இங்கு கங்கை முதலிய தீர்த்த தேவதைகள் வந்து ஸ்நானம் புரியும் ஸமயமாகிய மஹாமக புண்யகாலம் நேற்று (செப். 22) செவ்வாய்க்கிழமையன்று கும்பகோணத்தில் கொண்டாடப்பட்டது. லக்ஷக்கணக்கான ஹிந்துக்கள் நேற்று அதில் ஸ்நானம் செய்திருப்பார்கள்.

ஆனால், இத்தனை பேர்களும் ஸர்வ பாப ரஹிதர்களாய்ப் பரம சுத்தத் தன்மை யெய்தி விடுவார்களோ என்று சில மதப் பற்றில்லாதார் ஆக்ஷேபிக்கலாம். தீர்த்த ஸ்தலங்கள், புண்ய க்ஷேத்ரங்கள், எல்லா மதஸ்தர்களுக்கும் பொதுவாக அமைந்திருக்கின்றன. யூதர்கள் யெருஸலேமைப் புண்யக்ஷேத்ர மென்கிறார்கள். கிருஸ்தவர்கள் யெருஸலேம், நஜரேத், ரோமாபுரி முதலிய பல பல புண்ய க்ஷேத்திரங்களைக் கொண்டாடுகிறார்கள். முஸ்லிம்கள் மக்கம், மதீனம், யெருஸலேம் முதலிய கணக்கற்ற க்ஷேத்ரங்களைக் கொண்டாடுகிறார்கள். பௌத்தர் கயை முதலிய ஆயிரக்கணக்கான புண்ய க்ஷேத்ரங்களைப் போற்றி வருகிறார்கள். எனவே, அறியாமை காரணமாகவோ, மறதி காரணமாகவோ சில கிறிஸ்தவப் பாதிரிகள் புண்ய க்ஷேத்ரயாத்திரை ஹிந்துக்களுக்கு மாத்திரம் விசேஷமாக ஏற்பட்ட வழக்கமென்று கருதுவார் போல், ஹிந்து மதத்தின்மீது இவ்விஷயத்தில் பழிகூறுவதை நாம் புறக்கணித்து, மதவாதிகளுக்குள்ளே இவ் வழக்கத்தை மறுத்துரைப்போர் யாருமிருக்க நியாமில்லை யாதலால் மதப் பற்றில்லாதவர்களே மேற்கூறிய

கேள்வி கேட்டார்களென்று குறிப்பிட்டோம்.

ஆனால், மதப் பற்றுடையார், அஃதற்றோர் என்னும் இரு திறத்தாரும் உணர்ந்துகொள்ளும்படி, இதுபோன்ற தீர்த்த யாத்திரைகளின் தத்துவத்தை இங்கு விளக்குவோம். இவற்றில் பாவமழிந்து புண்யத் தன்மை பெற வேண்டுமானால், உண்மையான நம்பிக்கை யிருக்கவேண்டுமென்று நம்முடைய புராதன ஹிந்து சாஸ்த்ரங்கள் மிகத் தெளிவாக வற்புறுத்தி யிருக்கின்றன. உண்மையான மனக்கோளின்றி கங்கையில் முழுகினாலும், மஹாமகத்தில் மூழ்கினாலும், பாபகர்மந் தொலையாதென்று சாஸ்த்ரங்கள் தெளிவுபடத் தெரிவிக்கின்றன. இனிமேல் நாம் பாவம் பண்ணுவதில்லையென்ற மனோ நிச்சயம் வேண்டும்.

## தீர்த்த யாத்திரையின் அர்த்தமும் பயனும்

இந்தத் தீர்மானந்தான் பரிசுத்தத் தன்மை கொடுக்கிறது. ஒருவன் இந்த க்ஷணமுதல் பாவம் செய்வதில்லை யென்று மனவுறுதி செய்து கொள்ளுதலாகிய அக்நி மயமான செய்கையாலேயே அவன் அதுவரை செய்த பாவமெல்லாம் எரித்துவிடப் படுகிறது. "ஞானாக்நிஸ் ஸர்வகர்மாணி பஸ்மஸாத் குருதேர்ஜுன" என்று பகவத் கீதையில் கடவுள் சொல்லியிருக்கிறார். பாவத்தை இனிச் செய்யவில்லையென்ற தீர்மானம் உண்மையாக இருக்கவேண்டும். ஞானமே அவ்வளவுதான். அதைக் காட்டிலும் பெரிய ஞானம் கிடையாது. சிலர் தவத்தால் ஞானமெய்த நாடுகிறார்கள். சிலர் தானத்தால், சிலர் ஆராய்ச்சியால், சிலர் தியானத்தால், சிலர் பூஜையால் ஞானமெய்த முயலுகிறார்கள். ஆனால் எல்லா வழிகளும் உண்மையான வழிகளே. இவையெல்லாம் ஞானத்தைத் தரும். ஆனால் எந்த வழியாலே தரும்? பாவத்தைத் தீர்த்துவிடுதலாகிய வழியிலே தரும். அவற்றால் பாவம் நீங்கும். அதனால் மோக்ஷம் அல்லது அறிவு மயக்கம் தெளியும். அதிலிருந்து ஞானமுண்டாகும். ஞானமாவது எல்லாம் கடவுள் மயமென்ற அனுபவம். பாவமாவது தனக்கேனும் பிறர்க்கேனும் துன்பம் விளைவித்தல். இங்ஙனமே, புண்யமாவது தனக்கேனும் பிறர்க்கேனும் துன்பக் கலப்பில்லாத சுத்தமான இன்பம் விளைவித்தற்குரிய செய்கையென்பது சாஸ்த்ர கோடிகளின் பரம ஸித்தாந்தம். எல்லாம் ஆத்மா----எல்லாம் கடவுள் ஆதலால், எல்லாம்தான் என்ற ஞானத்தால் பிற உயிர்களுக்குத் துன்பம் விளைவிக்கும் குணம் நீங்கிவிடும். அதாவது பாவம் போய்விடும். நியாயம் புண்யம்; அநியாயம் பாவம். ஹிதம் புண்யம்; அஹிதம் பாவம். ஸத்யம் புண்யம்; அஸத்யம் பாவம். திருப்தி புண்யம்; துக்கம் பாவம்.

மரணமாவது பாவத்தின் கூலியென்று கிறிஸ்தவ வேதம் சொல்லுகிறது.

"இங்ஙனம் பாவத்தைத் துறந்துவிட விரும்புவோனுக்கு மனோ நிச்சயமும், ஞான உதயமும் கதியாயின், பணச் செலவு செய்து ரயிலேறிக் கும்பகோணத்துக்கும், காசிக்கும், ராமேசுவரத்திற்கும் ஏன் போகவேண்டும்?" என்று சிலர் வினவக்கூடும்.

மன மாறுதல்கள் சாசுவதமான இடத்தே விரதங்கள் என்று கூறப்படும். பெரிய சாசுவதமான ஸங்கல்பங்கள் விரதங்களெனப்படும். இந்த விரதங்கள் மனிதருடைய நினைப்பில் நன்றாக அழுந்தும் பொருட்டு ஆன்றோர் உலகமெங்கணும் இவற்றுக்குச் சில சடங்குகள் வகுத்திருக்கிறார்கள். கல்வி தொடங்கப் போகிறபோது ஒரு சடங்கு நடததப்படுகிறது. விவாகம் பண்ணும்போது மிகவும் கோலாகலமான கிரியைகள் நடக்கின்றன. புதிய வீட்டில் குடிபுகும்போது ஒரு சடங்கு நடத்து கிறோம். இவற்றின் நோக்கம், நாம் ஏதேனும் அமங்களத்தை நீக்கி மங்களத்தை சாசுவத உடைமை யாகச் செய்துகொள்ள வேண்டுமென்பதேயாம். நான் மேலே கூறியபடி, மரணம் பாவத்தின் கூலி என்று கிறிஸ்தவ வேதம் சொல்லுவதைக் கருது மிடத்தே, அமங்களமனைத்திலும் அமங்களமானது பாவமென்று விளங்குகிறது. எனவே, மங்களங்களிற் சிறந்தது புண்யமென்பதும் வெளிப்படையாம்.

இப்படிப்பட்ட பாவத்தைக் களைந்து புண்யத்தைப் போர்த்துக்கொள்வதாகிய ராஜ விரதத்துக்கு ஒரு சடங்கு வேண்டாவோ? அவ்விதச் சடங்கே மஹாமக முதலிய புண்ய தீர்த்த யாத்திரை யென்க.

# திருக்குடமூக்கில் மாமகம்



குடந்தை என். சேதுராமன் பி.எஸ்சி., டி.எம்.ஐ.டி.

'காந்தமன் என்னும் சோழ மன்னன் வேண்ட, அகத்திய முனிவர் தனது குடத்தைக் கவிழ்க்க, அதிலிருந்து பெருக்கெடுத்து வருபவளும், ஆகாய கங்கையுமாகிய காவிரிப் பாவை, சூரிய குலத் தோன்றலாகிய சோழனும், அவனது குடிமக்களும் சிறப்புடன் வாழ, ஒளிவிளக்காகத் திகழ்கிறாள்' என்று மணிமேகலை பகர்கின்றது. முதலாம் ஆதித்ய சோழனின் (கி. பி. 871-910) திருச்செந் துறைக் கல்வெட்டு "தக்ஷிண கங்கா காவேரி" என்று காவிரியைச் சீறப்பிக்கின்றது. "அலைபுரியும் புனற்பொன்னி ஆறுடைய சோழன் அருண்மொழி" என்று முதலாம் இராஜ ராஜ சோழனின் (கி. பி. 985-1014) திருமலைக் கல்வெட்டு கூறும். "தென்திசை தேமரு கமலப் பூமகள் பொதுமையும் பொன்னி ஆடை நன்னிலப்பாவை' என்று முதல் குலோத்துங்க சோழனின் (கி. பி. 1070-1122) மெய்க்கீர்த்தியும் விளக்கிச் சொல்லும். ஆகாய கங்கை, தென்கங்கை (தக்ஷிண கங்கா) என்று சிறப்பித்துக் கூறப்படும் காவிரி வளந்தரும் நாடு "பொன்னி நாடு" என்று அழைக்கப்பட்டது. இப்பொன்னி நாடே சோழ நாடாகும்.

இச் சோழ நாடு இன்று திருச்சி, தஞ்சை, நாகப்பட்டினம் மாவட்டங்களாகக் காட்சி அளிக்கின்றது. "சோழநாடு சோறுஉடைத்து" என்னும் பழம் பாடலுக்கு ஏற்ப மூன்றாம் குலோத்துங்க சோழனின் (1178-1218) மெய்க் கீர்த்தியும் "கங்க மில்லாச் சோணாட்டில் சோற்றுமலை கண்டருளி" என்று சிறப்பித்துக் கூறுகிறது. இன்றைய கும்பகோணத்தின் தென்மேற்கே ஆறு கிலோமீட்டர் தூரத்தில் உள்ள பழையாறை என்னும் சிற்றூர், அன்று சோழ மன்னர்கள் முடிசூடும் நகரமாக விளங்கியது. நந்திபுரம், பழையாறை, பட்டீசுரம், திருச்சத்தி முற்றம் ஆகிய சிற்றூர்கள் எல்லாம் ஒருங்கிணைந்து மிகப்பெரிய நகரமாகி முடிகொண்டசோழபுரம்" என்று அழைக்கப்பட்ட காலமும் உண்டு. இவ்வூரின் அருகில் இரண்டாம் இராஜராஜ சோழன் கிபி. 1166-இல் இராஜராஜபுரம் என்னும் நகரை எடுப்பித்து, இராஜராஜேஸ்வரம் கோயிலையும் கட்டினான். இதனை ஒட்டக்கூத்தர் தக்கயாகப் பரணியில் புகழ்ந்து பாடியுள்ளார். காலத்தின் கோலத்தினால் இவ்வூர் இன்று தாராசுரம் என்று அழைக்கப்படுகிறது.

இன்றைய கும்பகோணம், தேவார காலத்தில் (கி. பி. 7-ஆம் நூற்றாண்டு) குடமூக்கு என்று அழைக்கப்பட்டது. ஒரு ஆறு கடலோடு கலக்கும்போது, வளம் மிகுந்த அப்பகுதி முக்கோண வடிவத்தில் அமைந்திருக்கும். இதனை ஆங்கிலத்தில் டெல்டா என்றும், வடமொழியில் "கோண மண்டலம்" என்றும் குறிப்பிடுவார்கள். தமிழில் குடநாடு எனப்படும். உதாரணமாகத் தாம்ப்ரபரணி ஆறு கடலோடு கலக்கும் டெல்டா பகுதிக்குக் குடநாடு என்று பெயர் இருந்ததை அப்பகுதியில் உள்ள கோயில்களின் கல்வெட்டுகளில் காணலாம். பெருந்தொகையில் உள்ள ஒரு பாடல் விக்கிரம சோழனைப்பற்றிக் கூறும்போது 'குடக் காவிரிநாடா அகளங்கா" என்று போற்றுகின்றது. காவிரியின் டெல்டா பகுதியாகிய சோழநாடு முக்கோண வடிவாய் ஒரு குடம் போன்று அமைந்து உள்ளது. அக்



குடத்தின் மூக்கில் (நுனியில்) அமைந்துள்ள நகரம் குடமூக்கு என்று பெயர் பெற்றது.

பண்டைய இலக்கியங்களிலும், தேவாரத் திருமுறைகளிலும், நாலாயிரத் திவ்யப் பிரபந்தங்களிலும் கல்வெட்டுகளிலும் இன்றைய கும்பகோண நகருக்குக் குடமூக்கு என்ற பெயரே காணப்படுகின்றது. 'ஐ' விகுதி பெற்றுக் குடந்தை (குடத்தில் அழுந்தியது) எனவும் அழைக்கப்பட்டது. பதின்மூன்றாம் நூற்றாண்டில் சோழர் வலிவு இழந்து, வரலாற்று ஏடுகளிலிருந்து மறைந்தனர். தமிழ்நாடு முழுவதும் பாண்டியரின் ஆதிக்கத்தின் கீழ் வந்தது. பதினான்காம் நூற்றாண்டில் டில்லி சுல்தானியரின் படையெடுப்பால் பாண்டியர் பெரும் அவதிக்குள்ளாயினர். 1323-இல் டில்லி சுல்தானியர் மதுரையைப் பிடித்து 48 ஆண்டுகள் அரசு புரிந்தனர். பாண்டியர் மதுரையைவிட்டு வெளியேறி, கொங்குமண்டலம், சோழமண்டலம், நடுவில்மண்டலம், தொண்டைமண்டலம் ஆகிய பகுதிகளில் அரசு புரிந்தனர். கி. பி. 1371-இல் விஜயநகர வேந்தர் கம்பண உடையார் மதுரையைப் பிடித்தார். சுல்தான்கள் மறைந்தனர். தமிழ்நாடு விஜயநகர மன்னர்களின் ஆளுகைக்குக்கீழ் வந்தது. பாண்டியர் திருநெல்வேலிப் பகுதிக்குச் சென்று விட்டனர். விஜயநகர மன்னர்கள் கன்னடியர்கள்; எனினும் நலிந்திருந்த தமிழ்க் கலாசாரத்திற்குப் புத்துயிர் அளித்தனர். என்ற போதிலும் சில இடங்களில் தமிழில் இருந்த பெயர்களை வடமொழியில் கொணர்ந்தனர். இவ்வூரின் பெயரான குடமூக்கு என்பதை வடமொழியில் கும்பகோணம் என்று அழைக்கலாயினர்.

கும்பகோணம் சார்ங்கபாணி கோயிலின் முன்மண்டபத்துத் தெற்குச் சுவரில் காணப்படும் கல்வெட்டு விஜயநகர வேந்தர் விருப்பண்ண உடையாருக்கு உரியது. இக்கல்வெட்டின் காலம் கி. பி. 1385 ஐப்பசி மாதம் 27-ஆம் தேதி புதன்கிழமை ஆகும். இக் கல்வெட்டில்தான் இவ்வூரின் பெயர் கும்பகோணம் என்று முதன் முதலாக வருகின்றது. எனவே இப்பெயர் 1385-இல் இருந்து வழக்காற்றில் வந்தது எனக் கொள்ளலாம். அருணகிரியாரும் "கும்பகோண நகர் வந்த பெருமாளே" என்று கும்பகோணத்து முருகப்பெருமானைப் போற்றுகிறார். இதனால் அருணகிரியார் பதினான்காம் நூற்றாண்டின் கடைப் பகுதிக்குப் பின் வாழ்ந்தனர் என்பதனை அறியலாம். குடமூக்கு என்ற பெயர் கால வெள்ளத்தில் வழக்காற்றில் இருந்து மறைந்தது. கும்பகோணம் என்ற பெயரும் திருக்குடந்தை என்ற பெயருமே எழுத்திலும், பேச்சிலும் நிலைத்து நின்றுள்ளன.

இரண்டாம் குலோத்துங்க சோழன் கி. பி. 1133 முதல் 1150 வரை ஆட்சி புரிந்தான். இம்மன்னனது அவையை முதல் மந்திரியாக அலங்கரித்த சேக்கிழார் பெருமான் பெரியபுராணத்தை இயற்றினார். பெரிய புராணத்தில் திருஞான சம்பந்தரின் வரலாற்றினைச் சிறப்புடன் எடுத்துரைக்கிறார். திருஞானசம்பந்தர் பல திருக் கோயில்களுக்குச் சென்று பதிகங்கள் பாடி, சிவபெருமானுக்குச் செந்தமிழ்மாலை பல சூட்டி மகிழ்ந்து, திருக்குடமூக்கினை வந்தடைந்தார். திருக்குடமூக்கின் கோயில், திருக்கீழ்க்கோட்டத்துக் கோயில், திருக்குடந்தைக் காரோணம் ஆகிய கோயில்களுக்கு எழுந்தருளி இறைவன் மீது பதிகங்கள் பாடினார். இதனைச் சேக்கிழார் வாயிலாகக் காண்போம்.

- திருஞான சம்பந்தர் திருக்குட
  மூக்கினைச்சேர
  வருவார்தம் பெருமானை வன்தமிழில்
  திருப்பதிகம்
  உருகாநின்று உளமகிழக் குடமூக்கை
  உகந்திருந்த
  பெருமான்எம் இறைஎன்று பெருகு
  இசையால் பரவினார்
- வந்தணைந்து திருக்கீழ்க்கோட்டத்து
  இருந்த வான்பொருளைச்
  சிந்தை மகிழ்வுற வணங்கித் திருத்
  தொண்டருடன் செல்வார்
  அந்தணர்கள் புடைசூழ்ந்து போற்றிசைப்ப
  அவரோடும்
  கந்தமலர்ப் பொழில் சூழ்ந்த காரோணம்
  சென்றடைந்தார்
- **பூமருவும் கங்கைமுதற் புனிதமாம்
  பெருந்தீர்த்த
  மாமகந்தான் ஆடுதற்கு வந்துவழி
  படுங்கோயில்**
  தூமருவும் மலர்க்கையில் தொழுது
  வலம்கொண்டணைந்து
  காமர்கெட நுதல்விழித்தார் கழல்
  பணிந்து கண்களித்தார்



## கும்பேஸ்வரர் கோயில்

ஏழாம் நூற்றாண்டில் அவதரித்த திருஞானசம்பந்தரால் "குடமூக்கின் பெருமான் எம் இறைவன்" என்று பாடல்பெற்ற கோயில் இன்றைய கும்பேஸ்வரர் கோயிலாகும். பல காலகட்டங்களில் திருப்பணி செய்யப்பட்டதால் சோழர் கால கல்வெட்டுகளை இக்கோயிலில் காணுவதற்கு இல்லை. விஜயநகர மன்னர்களின் பிரதிநிதியாக இருந்த குருராஜ ருத்ரதேவ சோழமகாராஜனின் கல்வெட்டு உள்ளது. இதன் காலம் கி. பி. 1554 ஆகும். ஆதிகும்பேஸ்வரர் கோயிலுக்கு வயலூர், ஏழாம் கட்டளைக் கிராமங்களை அளித்த செய்தியைக் கூறுகிறது. பக்கத்தில் உள்ள நாகேஸ்வரர் கோயிலிருந்து கிடைக்கும் ஒரு கல்வெட்டு மூன்றாம் இராஜராஜ சோழனுக்கு உரியது. இதன் காலம் கி. பி. 1237 பங்குனி மாதமாகும். இதில் உடையார் திருக்குடமூக்கு உடையார் கோயிலுக்குக் கொடுத்த நிலங்கள் சொல்லப்பட்டுள்ளன. இப்பெயர் திருஞான சம்பந்தரின் குடமூக்குப் பதிகத்துடன் ஒத்து வருகிறது. குடமூக்கு என்னும் பெயர் கும்பகோணம் என்று மாறிய பின்பு இறைவன் என்ற சொல் ஈசராகிக் குடமூக்கின் இறைவன் கும்பஸேஸ்வரர் என்று அழைக்கப்படலானார். திருஞானசம்பந்தர் அன்னையை வளர்மங்கை என்று இனிய தமிழில் சிறப்பிக்கின்றார். இவ்வன்னை இன்று மங்களாம்பாள் என்று அழகிய வடமொழிப்பெயரை ஏற்றுள்ளாள்.

தேவாரம், கல்வெட்டுகள் இவைகளில் கூறப்பட்டுள்ள செய்திகளை தொடர்பு படுத்தி உண்மையான வரலாற்றினை அறியாத காரணத்தினால் பிற்காலத்தில் புதிய பெயர்களால் அழைக்கப்படும் கும்பேஸ் வரருக்கும், கும்பகோணத்திற்கும் பல புராணக் கதைகள் எழுந்தன.

## நாகேஸ்வரர் கோயில்

திருஞானசம்பந்தர் அடியார்கள் புடைசூழ வந்து தரிசித்த திருக்கீழ்க்கோட்டம் என்னும் கோயில் இன்றைய நாகேஸ்வரர் கோயிலாகும். திருஞானசம்பந்தரின் சமகாலத்தவரான திரு நாவுக்கரசர் இக்கோயிலின் இறைவனைக் கீழ்க்கோட்டத்து எம்கூத்தனார் என்று தமது பதிகத்தில் சிறப்பித்துள்ளார். திருநாவுக்கரசரின் பாடலுக் கேற்ப இக்கோயிலில் உள்ள நடராசப்பெருமான், சிவகாமி அம்மையின் விக்கிரகங்கள் கலை அழகு சொட்டச் சொட்ட அமைந்துள்ளன. இவை 11-ஆம் நூற்றாண்டின் சோழர்களின் கலைப்பாணியைச் சேர்ந்தவை. சோழர்களின் கல்வெட்டுகளில் இக்கோயிலின் பெயர் திருக்குடமூக்கின் திருக்கீழ்க் கோட்டம் உடையார் கோயில் என்றே சொல்லப்பட்டுள்ளது. இக்கோயிலில் இருந்து கிடைக்கும் ஒரு கல்வெட்டு மூன்றாம் இராஜ ராஜ சோழனுக்கு உரியது. இதன் காலம் கி. பி. 1217 பங்குனி மாதமாகும் "மடந்தைபாக தேவர் திருவனத்தில் எழுந்தருளி இருந்து திரு ஓலக்கம் செய்து ஸ்ரீபுராணம் கேட்டு அருளாநிற்க" என்று கூறிச் செல்கிறது. மடந்தைபாக தேவர் என்பது உற்சவ விக்கிரகத்தை குறிக்கும். இக்கோயிலுக்கு உரிய திருநாவுக்கரசரின் பாடலில் மடப்பாவை மணாளர், உமைஒருபாகர் என்று வருவதால் விக்கிரகத்தின் பெயரும் மடந்தைபாக தேவர் என்று அழைக்கப்படலாயிற்று. மேலும் இறைவனின் உற்சவ விக்கிரகம் எழுந்தருளியிருக்கும் காலத்து, ஸ்ரீபுராணமாகிய பெரியபுராணம் படிக்கும் வழக்கம் இருந்ததை இக்கல்வெட்டால் அறிகிறோம். கி. பி. 1490-க்கு உரிய கோனேரிதேவ மகாராயரின் கல்வெட்டில் இக்கோயிலின் பெயர் திருகுடமூக்குநாயனார் மடந்தைபாக நாயனார் கோயில் என்றே அழைக்கப்படுகிறது. இப்பெயர் கி. பி. 1735-க்கு உரிய மராட்டியரின் செப்பேடுகளிலும் சொல்லப்பட்டுள்ளது. (உற்சவ விக்கிரகங்களின் பெயரால் கோயில்களின் பெயர்களை மாற்றம் செய்யும் வழக்கம் 14-ஆம் நூற்றாண்டுக்குப் பின் ஏற்பட்டது). சென்ற நூற்றாண்டிலிருந்து நாகேஸ்வரர் கோயில் என்று அழைக்கப்படுகிறது. இம் மாற்றத்திற்கு வரலாற்றின் அடிப்படையில் காரணம் தெரியவில்லை. தேவாரம், கல்வெட்டுகள், செப்பேடு இவைகளில் கூறப்பட்டுள்ள செய்திகளை அறியாத காரணத்தால் கோயில்களுக்குப் புதிய பெயர்கள் ஏற்படுகின்றன என்பதற்கு இது ஒரு எடுத்துக்காட்டு.

## காரோணம்

திருக்கீழ்க்கோட்டத்துப் பெருமானைத் தரிசித்தபின்பு திருஞானசம்பந்தர் குடந்தை (குடமூக்கின்) காரோணம் வந்தடைந்தார். கங்கை முதல் புனிதமாம் பெரும்தீர்த்தம் இக்கோயில்

முதல் புனிதமாம் பெரும்தீர்த்தம் இக்கோயில் எத்துணை புகழ் வாய்ந்தது தெரியுமா? மாமகம்தான் ஆடுதற்கு வந்து வழிபடும் கோயில். இன்றைய மகாமகக் குளத்தின் வடகரையில் அமைந்துள்ள காசி விஸ்வநாதர் ஆலயமே காரோணம் கோயிலாகும். இக்கோயிலில் கல்வெட்டுகள் இல்லை. பிற்காலத்துத் திருப்பணியில் சிலாசாசனப் பலகைகள் பூமிக்கு அடியில் புதைக்கப்பட்டனவாகக் கூறுகிறார்கள். நாகேஸ்வரர் கோயிலிருந்து கிடைக்கும் முதலாம் இராஜாதிராஜ சோழனின் கல்வெட்டில் (கி. பி. 1054) திருக்காரோணம் உடைய மஹாதேவர்க்கும் கன்னியா பிடாரிகளுக்கும் அளித்த நிவந்தங்கள் கூறப்பட்டுள்ளன. எனவே இக்கோயிலில் கன்னிகைகள் எழுவர் இருந்திருக்கவேண்டும். ஆம் உண்மையிலேயே உள்ளனர். 10-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த இரண்டு கைகளுடன் கூடிய சுமார் ஐந்து அடி உயரமுள்ள ஏழு கன்னிகைகளின் சிலைகள் இன்றும் உள்ளன. இத்துடன் நாலு கைகளுடன் கூடிய பிற்காலக் கலைப்பாணியைச் சார்ந்த துர்க்கை, பார்வதியின் சிலைகளையும் சேர்த்து நவநதிக்கன்னிகைகள் என்று வழிபாடு செய்து வருகின்றனர்.

காரோணம் என்றால் என்ன? பாசுபத சைவகுருவான லகுலீசரால் இரண்டாம் நூற்றாண்டில் பாசுபத சைவ மடம் முதன் முதலாக குஜராத் மாநிலத்தில் காரோணம் என்னும் ஊரில் நிறுவப்பட்டது. இவ்வூர் இன்றும் பரோடா அருகில் கார்வான் என்ற பெயரில் உள்ளது. வடமொழிக் கல்வெட்டுகள், இலக்கியங்கள் இவைகளில் கூறப்படும் காயாரோஹணம், காயாவரோஹணம், காயாவிரோஹணம் என்பதன் சுருக்கமே காரோணம் என்பதாகும். காய ஆரோஹணம் என்றால் (பக்தன்) உடலுடன் மேலே (வானத்திற்கு) செல்வது என்பது பொருள், காய அவரோஹணம் என்றால் பக்தனுக்காக இறைவன் (மனித உருவில்) இறங்கி வருகின்றான் (அவதாரம்) என்பதாகும். மீண்டும் பிறவியில்லை என்ற பொருளில் காயாவிரோஹணம் என்று சொல்லப்பட்டுள்ளது. இவ்வடமொழிச் சொற்களின் சுருக்கமான காரோணம் என்ற பெயரில் தமிழ்நாட்டில் கச்சிக் காரோணம், நாகைக் காரோணம், குடந்தைக் காரோணம் என்று மூன்று கோயில்கள் இருந்தன. இதில் முதலாவது மறைந்துவிட்டது. மற்ற இரண்டும் உள்ளன. நாகப்பட்டினத்தில் உள்ள பாடல் பெற்ற சிவத்தலம் திருநாகைக்காரோணம் ஆகும்.

கும்பகோணத்தில் மகாமகக் குளக்கரையில் வடகரையில் உள்ள காசிவிஸ்வநாதர் ஆலயமே திருக்குடந்தைக் காரோணம் என்பதைக் கண்டோம். இக்கோயில்களுக்குப் பதிகங்கள் அருளிய சம்பந்தர், இப் பதிகங்களைப் பாடுவோர் கரையா உடலோடு வானடைவர் (காய ஆரோஹணம்) என்றும், கருவார் இடும்பைப் பிறப்பு அறுப்பர் (காய அவிரோஹணம்) என்றும் கூறுகின்றார். கி. பி. 2-ஆம் நூற்றாண்டில் தாபிக்கப்பட்ட லகுலீச பாசுபத தலைமைப் பீடத்தின் இடமான காரோணத்தின் பெயரைத் தாங்கித் தமிழ்நாட்டில் கோயில்கள் இருந்தன. இத் தலங்களின் சித்தாந்த விளக்கங்களை ஏழாம் நூற்றாண்டில் சம்பந்தர் தமது பதிகங்களில் எடுத்துரைத்தார் என்பதை நோக்கவேண்டும். பக்தனுக்காக இறைவன் மனித உருவில் வந்து அருள்புரிந்தான் என்று சொல்லும் புராண வரலாறுகள் நிறைய உள்ளன.

திருஞானசம்பந்தரின் பதிகங்களின் கடைசிப் பாடலில் அவரது சிறப்பு முத்திரை இருக்கும். சம்பந்தரின் பதிகங்களைப் பாடவல்லார் வானுலகத்தில் உறைவர், வானுலகு ஆள்வர், வானோர் உலகத்தில் வீற்றிருப்பர் என்று பல இடங்களில் கூறுகின்றார். திருவாவடுதுறை திருப்பறியலூர்ப் பதிகங்களில் சம்பந்தரின் பாடல்களைப் பாடுவோர் மறுபிறவி அடையார் என்று கூறுகிறார். "ஞானசம்பந்தன் நவின்ற மொழி நலமிகு பத்தும் பண் இயல்பாகப் பக்தியாய்ப் பாடியும், ஆடியும் பயில வல்லோர், விண்ணவர் விமானம் கொடுவர ஏறி விண் உலகு ஆண்டு வீற்றிருப்பர்" என்று திருவெண்குருப் பதிகத்தில் சொல்லுகிறார். பெரியபுராணத்தில் அறுபத்து மூன்று நாயன்மார்களின் வரலாறுகள் சொல்லப்பட்டுள்ளன. இவர்கள் பல சாதிகளைச் சேர்ந்தவர். சிவபெருமானின் கருணையால் உடலோடு வானடைந்ததாகப் பல நாயன்மார்கள் குறிப்பிடப்படுகின்றனர்: "களையா உடலோடு சேரமான் ஆரூரன்" திருக்கயிலை சென்றனர் என்று ஒன்பதாம் திருமுறையில் பூந்துருத்தி காட நம்பி கூறுவதும் ஈண்டு நோக்கத்தக்கது.

உடலோடு வானடைய முடியுமா? (காய ஆரோஹணம்). இது விஞ்ஞானபூர்வமான கேள்வி. இதற்குத் தத்துவார்த்தமான விடையைத்தான் காணமுடியும். திருக்கோயில்களில் இறைவன், இறைவி மற்றும் பல தெய்வத் திருமேனிகளை வணங்குகிறோம். மயிலாப்பூர், கும்பகோணம், திருவிடைமருதூர் ஆகிய இடங்களில் 63_நாயன்மார்களின் விக்ரஹங்களை வீதிவலமாக எழுந்தருளச்செய்து விழாக்கள் கொண்டாடுவதை இன்றும் காணலாம். நாயன்மார்களையும் ஆழ்வார்களையும் தெய்வங்களாக வணங்குகிறோம். இங்குதான் வானடையும் விந்தையைக் காணலாம். மனிதன் தெய்வமாகிறான் என்பதே இதன் பொருள். கோயில்களில் முதன்முதலாகத் தெய்வமாக வணங்கப்பட்ட மனிதன் சண்டிகேச்வரர்தான். இதனைப் பதினொன்றாம் திருமுறையில் நக்கீரர் கோபப்பிரசாதத்தில் "மானுடனாகிய சண்டியை வானவன் ஆக்கியும்" என்கிறார். பல சாதிகளைச் சேர்ந்த நாயன்மார்களையும், ஆழ்வார்களையும் கோயிலில் வைத்து வழிபடுவது ஏன்? பக்தியில் முக்தி அடைந்த மனிதன் தெய்வமாகிறான். உள்ளத்தைத் தொடவைக்கும் மிகச் சிறந்த சித்தாந்தம். இதையே திருவள்ளுவர் "வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும் தெய்வத்துள் வைக்கப்படும்" என்று விளக்கமாகக் கூறியுள்ளார்.

## மகாமகம்

சேக்கிழார் பெருமான் கூறுவதை நன்கு கவனிக்க வேண்டும். கங்கை முதல் புனிதமாம் பெரும்தீர்த்தம் மாமகம்தான் ஆடுதற்கு வந்து வழிபடும் கோயில் என்று குடந்தைக் காரோணம் கோயிலைக் குறிப்பிடுகிறார். மகாமகப் பெருவிழா என்றால் என்ன? சாதாரணமாக ஒவ்வொரு ஆண்டும் மாசி மாதத்தில் பௌர்ணமியும் மக நக்ஷத்திரமும் சேரும் நாள் மாசிமகத் திருநாள் என்பதாக எல்லாக் கோயில்களிலும் கொண்டாடப்படும். இதற்கென முற்காலங்களில் அரசர்கள் நிவந்தங்கள் கொடுத்திருந்தனர். குருவாகிய வியாழன் கிரகம் (பிரகஸ்பதி) சிம்மராசியில் இருக்கும்போது மாசி மாதத்தில் பௌர்ணமியும் மக நக்ஷத்திரமும் சேரும் நாள் மகாமகம் எனப்படும். வியாழன் ஒருமுறை சூரியனைச்சுற்றிவர 1,18,618 வருடங்கள் ஆகின்றன. எனவே மகாமகத் திருவிழா 12 ஆண்டுகளுக்கு ஒருமுறை வரும். (சில சமயம் 11_வது ஆண்டிலும் வருவதுண்டு.இது வானசாத்திரக் கணக்கு). இன்று கும்பகோணத்தில் மட்டுமே மகாமகப் பெருவிழா கொண்டாடப்பட்டு வருகிறது.

திருச்சிராப்பள்ளி திருவானைக்காக் கோவிலிலிருந்து கிடைக்கும் ஒரு கல்வெட்டு விஜயநகரப் பேரரசின் குறுநில மன்னனான தெலுங்குச் சோழன் வாலக காமயர் அக்கலராசருக்கு உரியது. "சகாப்தம் 1403_இதன் மேல் செல்லா நின்ற பிலவ சம்வச்சரத்து கும்ப நாயற்று பூர்வபக்ஷத்து பௌர்ணமியும், ஆதித்த வாரமும் பெற்ற மகத்து நாள் — சிங்க பிரஹஸ்பதி மகாமக புண்ய காலத்திலே. . . . . . . ." திருவானைக்காக் கோயிலிலிருக்கும் அகிலாண்ட நாயகியருக்குத் தினமும் அமுது படைக்க வெண்கோன்குடி என்னும் கிராமத்தில் ஒரு வேலி நிலத்தை அக்கலராசர் தானமாக அளித்தார் என்று சொல்லப்பட்டுள்ளது. இக்கல்வெட்டின் காலம் கி. பி. 1482 மாசி மாதம் ஒன்பதாம் தியதி ஞாயிற்றுக்கிழமை. அன்று மகாமகப் புண்யகாலம். இப்புனித நாளை அக்கலராசர் கொண்டாடித் திருவானைக்கா கோவிலுக்குத் நிவந்தம் அளித்துள்ளார்.

விஜயநகரப் பேரரசின் சக்கரவர்த்தி கிருஷ்ணதேவராயர் கி. பி. 1500 முதல் 1529_வரை ஆட்சி புரிந்தார். சென்னைக்கு வடக்கே உள்ள நாகலாபுரம் (செங்கை எம். ஜி. ஆர். மாவட்டம்) வேதநாராயணஸ்வாமி விஷ்ணு கோயில் இம்மன்னனின் காலத்தில் கட்டப்பட்டது. இக்கோயிலில் பல கல்வெட்டுகள் உள்ளன. இக்கல்வெட்டுகளின் காலம் கி. பி. 1524 தை மாதம் எட்டாம் தேதி செவ்வாய்க் கிழமையாகும். முன்னாளில் கிருஷ்னதேவராயர் கோயிலுக்குச் செய்த பல தர்மங்களைக் கூறுகின்றன. முக்கியமான செய்தியை மட்டும் பார்ப்போம். கிருஷ்ணதேவராயர் திக்விஜயம் செய்துவிட்டு, திருவேங்கடநாதனையும் ஸேவித்து (திருப்பதி) திருவேங்கடநாதனுக்கு வேண்டின கைங்கர்யம் பண்ணிக் கும்பகோணத்துக்கு மகாமகத் தீர்த்தத்துக்குச் செல்லுகிற வழியில் அரிகண்டபுரம் கரியமாணிக்கத்து எம்பெருமான் கோயில் திருப்பணிக்கு இரண்டு லக்ஷம் பொன் கொடுத்தார் என்று கூறப்பட்டுள்ளது. எனவே முன்னாளில் கி. பி. 1524_க்கு முன் ஒரு மகாமகம் வந்துள்ளது. அது எப்போது? கி. பி. 1517_இல்



மாசி மாதம் 12-ஆம் தேதி வெள்ளிக்கிழமை மகாமகப் பெருவிழா கும்பகோணத்தில் நடந்தது. அவ்வமயம் கிருஷ்ணதேவராயரும் புனித நீராடினார். மயிலாடுதுறைக்கு அருகில் உள்ள குத்தாலம் "சொன்னவாரறிவார்" கோயிலிலிருந்து கிடைக்கும் ஒரு கல்வெட்டு கிருஷ்ணதேவராயருக்கு உரியது. தாது வருஷம் மாமாங்கப் புண்யகாலத்திலே வெள்ளிக்கிழமை அரசன் செய்த தர்மங்களைக் கூறுகிறது. இக்குறிப்புகள் கி. பி. 1517 மாசி மாதம் 12-ஆம் தேதி வெள்ளிக்கிழமையுடன் ஒத்து வருகின்றன. 'ராயவாசகமு' என்னும் தெலுங்குக் காவியம் கூறும் சுவையான செய்தியைப் பார்ப்போம். "கி. பி. 1517 தை மாதம் 6-ஆம் தேதி வெள்ளிக்கிழமை கிருஷ்ணதேவராயர் திருப்பதிக்குச் சென்று திருவேங்கடநாதனைத் தரிசித்தார். இரண்டு கைகளும் கூப்பிய நிலையில் தன்னைப் போன்ற பிரதிமம் ஒன்றும், அரசியார் திருமலா தேவியார், நாகலா தேவியார் பிரதிமங்கள் இரண்டும் ஆக மூன்று பிரதிமங்களைச் செம்பினால் செய்து திருப்பதிக் கோயிலில் வைத்தார். (இச்செம்புப் பிரதிமங்களை இன்றும் காணலாம்). பிறகு கும்பகோணத்திற்குச் சென்று மாசி மாதம் 12-ஆம் தேதி வெள்ளிக்கிழமை மகாமகப் புண்யகாலத்தில் மகாமகக் குளத்தில் நீராடினார்".

அச்சுதப்ப நாயக்கனும் (1572-1600), அவனது மகன் இரகுநாத நாயக்கனும் (1600-34) தஞ்சையைத் தலைநகராகக் கொண்டு ஆட்சிபுரிந்தனர். இவ்விருவருக்கும் கோவிந்த தீக்ஷிதர் முதல் மந்திரியாக விளங்கினார். தீக்ஷிதரது மேற்பார்வையில் கும்பேஸ்வரர் கோயில் புதுப்பிக்கப்பட்டது. காவிரிக்கரையில் மண்டபங்களும், படித்துறைகளும் கட்டப் பட்டன. பட்டீசுரம் சிவன்கோயில் புதுப்பிக்கப்பட்டது. மகாமகக்குளம் செப்பனிடப் பட்டது. குளத்தைச் சுற்றி உள்ள 16 மண்டபங்களும், படித்துறைகளும் கோவிந்த தீக்ஷிதரால் கட்டப்பட்டன. புண்ணிய தீர்த்தக் கரையில் 16 விதமான தானங்கள் செய்ய வேண்டும். இத்தானங்கள் முறையே பொன், பூமி, கன்னிகை, வஸ்திரம், பசு, குதிரை, காளைமாடு, அன்னம், தென்னை, குப்ததானம், சந்தனம், முத்து, நவரத்தினம், தேன், உப்பு, பழங்கள் ஆகியனவாகும். இத்தானங்களை எப்படிச் செய்வது என்பதை 16 மண்டபங்களின் மேல் தளத்தில் சிற்பங்களாகக் காணலாம். துலாபாரம் செய்வது அரசர்களுக்கு விசேஷமாகும். மகாமகக் குளத்தின் வடமேற்குக் கரையில் உள்ள பெரிய மண்டபம் துலாபார மண்டபம் என்று அழைக்கப்படுகிறது. தராசின் ஒரு தட்டில் மன்னர் வீற்றிருப்பார்; மற்றொரு தட்டில் எடைக்கு எடை பொன் நிறுத்தி அப்பொன்னை வாசுதேவன் சாக்ஷியாக ஹோமம் வளர்த்து, அரசியர், மந்திரி, பிரதானிகள் முன்னிலையில் மன்னர் தானமாக வழங்குவார். இதனை இத் துலாபார மண்டபத்து மேல்தளத்தில் சிற்பங்களாகக் காணலாம். தராசின் ஒரு தட்டில் நாயக்கமன்னனும் மற்ற தட்டில் பொற்குவியலும் உள்ள சிற்பத்தைக் காணும்போது அந்த நாளும் வந்திடாதா என்று நினைப்பதில் வியப்பேதுமில்லை. துலா பாரத்திற்காக தராசு தொங்கவிடுவதற்குப் பதிக்கப்பட்ட கல்லாலான கோல் இன்றும் மண்டபத்தின் மேல்தளத்தில் உள்ளது. (இதில் காணப்படும் நாயக்க மன்னன் அச்சுதப்பனா அல்லது இரகுநாதனா என்பது தெரியவில்லை). இரகுநாத நாயக்கன் காலத்தில் கோவிந்த தீக்ஷிதர், கும்பகோணம் வேதபாடசாலையை சக வருடம் 1542-இல் (கி.பி. 1620) நிறுவினார். இப்பாடசாலை இன்றும் செவ்வனே நடந்து வருகிறது. குடந்தை இராமஸ்வாமி கோயிலும் கட்டப்பட்டது. இக்கோயிலில் இரகுநாத நாயக்கனின் சிலை உள்ளது இரகுநாத நாயக்கனுக்கும் டென்மார்க் தேசத்தவர்களுக்கும் தொடர்பு இருந்தது. இதனைக் குறிக்கும் வகையில் இராமஸ்வாமி கோயிலில் டென்மார்க் தேசத்து இராணுவ அதிகாரியின் சிலையை இன்றும் காணலாம்.

மக்கள் பல புண்ணிய நதிகளிலும், தீர்த்தங்களிலும் நீராடித் தங்கள் பாவங்களைக் கழுவுகிறார்கள். இப்பாவங்களச் சுமந்துவரும் நதி தீர்த்தமாதர்கள் 12-ஆண்டுகளுக்கு ஒருமுறை மகாமகக் குளத்தில் மகாமகத்தன்று நீராடி அப்பாவங்களைக் கழுவுகிறார்கள் என்பது ஐதீகம். அத் தீர்த்தங்களைக் குறிக்கும்வகையில் இக்குளத்தில் ஊற்றுகளும், ஊற்றுகளுடன் கூடிய 15 கிணறுகளும் உள்ளன. அவை முறையே கங்கை, யமுனை, கோதாவரி, நர்மதை, சரஸ்வதி, காவிரி, சரயு முதலிய நதிகளும், வாயு, பிர்ம்ம, குபேர, ஈசானிய, இந்திர, அக்கினி, நாக, குமரி, நிருதி, பயோஷ்னி, தேவ, வருண, கன்யா முதலிய தீர்த்தங்களும் ஆகும்.



# மாமகப் பெருவிழா

குடவாயில் பாலசுப்ரமணியன். எம்.ஏ,

"பூமருவும் கங்கைமுதற் புனிதமாம் பெருந்தீர்த்தம் மாமகந்தா னாடுதற்கு வந்து வழிபடுங்கோயில் தூமருவு மலர்க்கையால் தொழுது வலங்கொண்டணைந்து காமர்கெட நுதல் விழித்தார் கழல் பணிந்து கண்களித்தார்" என்பது தெய்வச் சேக்கிழார் பெருமானின் திருவாக்கு இரண்டாம் குலோத்துங்க சோழனின் (கி.பி. 1133-1150) முதல் அமைச்சராகத் திகழ்ந்தவர் சேக்கிழார் பெருமானார். புனிதமான பெருந்தீர்த்தத்தில் மாமகம் ஆடும் இக் காட்சியினைத் திருத்தொண்டர் புராணத்தில் திருஞானசம்பந்தர் வரலாறு கூறுமிடத்து அவர் பாடுகின்றார். மேலும்,

"திருஞானசம்பந்தர்
திருக்குடமூக்கினைச்சேர
வருவார்தம் பெருமானை வண்டமிழின்
திருப்பதிகம்
உருகா நின்றுளம் மகிழக் குடமூக்கை
உவந்திருந்த
பெருமான் எம் இறை என்று
பெருகிசையால் பரவினார்"

என்றும் கூறுகின்றார். எனவே 12ஆம் நூற்றாண்டில் இவ்வாறு சேக்கிழார் பெருமானால் குறிப்பிடப்படும் குடமூக்காம் கும்பகோணத்தில் நிகழ்ந்த மாமகம் ஆடும் நிகழ்ச்சி, திருஞானசம்பந்தப்பெருமான் வாழ்ந்த கி. பி. 7ஆம் நூற்றாண்டிலும் நிகழ்ந்த புனித விழா என்பதை அறியலாம்.

மாமகந்தான் ஆடும், கங்கைமுதற் புனிதமான பெருந்தீர்த்தங்கள் பற்றித் திருஞானசம்பந்தப் பெருமானார் காலத்திலேயே வாழ்ந்த திருநாவுக்கரசரான அப்பர் அடிகள் தம் திருக்குடந்தை தேவாரப் பதிகங்களில் மிக அழகாகக் குறிப்பிடுகின்றார்.

## திருக்குடமூக்குப் பதிகம்

"கங்கையானவள் கன்னி எனப்படும்
கொங்கையாள் உறையும் குடமூக்கிலே"

"கோதாவரி உறையும் குட மூக்கிலே"

"சாமியோடு சரசுவதி அவள்
கோமியும் உறையும் குடமூக்கிலே"

இங்கு கங்கை, காவிரி (கன்னி), யமுனை (சாமி) சரசுவதி, கோதாவரி ஆகிய புனிதநதிகள் குடமூக்கில் உறைந்ததாகக் காண்கிறார். அடுத்து, குடந்தைக் கீழ்கோட்டத்து (நாகேசுவரன் திருக்கோயில்) இறைவனைப் பணிந்து போற்றும் பதிகத்தில்,

"தாவிமுதற் காவிரிநல் யமுனை கங்கை
சரசுவதிபொற் றாமரைபுட் கரணி
தென்னீர்க்
கோவியொடு குமரிவரு தீர்த்தம் சூழ்ந்த
குடந்தைகீழ் கோட்டத்துஎம் கூத்த
னாரே"

என்றும் கூறுகின்றார்.

வாகீசப் பெருமானின் இவ்வாக்குகளால் கி.பி. 7ஆம் நூற்றாண்டிலேயே பொற்றாமரைத் திருக்குளம் கும்பகோணத்தில் திகழ்ந்ததை





அறிகிறோம். திருஞானசம்பந்தர் கண்ட மாமகம் ஆடும் பெருவிழாவின் போது இந்தியத் திருநாட்டின் புனித நதிகள் திருக்குடந்தையில் சங்கமித்தன என்பதைச் சமய குரவர்களின் திருப்பாடல்களால் உணரலாம். இவ்வாறு நதிகள் சங்கமிப்பது கோள்நிலை கூடும் பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஒருமுறையே என்பது நம் முன்னோர் கண்ட மரபாகும்.

## கோள்நிலை கூடும் மாமகம்

புவியில் நிகழும் நலங்களும், கேடுகளும் கோள்களின் இயக்க அடிப்படையில் நிகழ்பவையே என்பது நம்முன்னவர்கள் பல ஆயிரம் ஆண்டுகளாகக் கண்டுணர்ந்த பேருண்மையாகும். வானவியல், கணிதவியல் ஆகிய துறைகளில் ஆழ்ந்த புலமையோடு அவர்கள் கண்ட உண்மைகளை நம் இலக்கியங்கள் செப்பும்.

தம் பார்வையை இழந்த சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருவொற்றியூர் இறைவனிடம் தம் அல்லல் களையத் தான்படும் துயரினை எடுத்து இயம்புமிடத்து,

"மகத்திற் புக்கதோர் சனி எனக்கானாய்"

என்று குறிப்பிடுகின்றார். மக விண்மீனில் (நட்சத்திரம்) சனி நுழையும்போது (சிம்மராசியில் பிரவேசிக்கும்போது) பிறந்தவர் படும்பாடு எவ்வளவோ அவ்வளவு துயரங்களை நான் அனுபவிக்கிறேன் என்று கூறுகிறார். இது 8-ஆம் நூற்றாண்டில் நிகழ்ந்த நிகழ்ச்சி. சனியின் இப்பிரவேசத்தின் கடுமைபற்றி இரண்டாயிரம் ஆண்டுகள் தொன்மையுடைய தமிழ்நூல்கள் தெளிவாகக் குறிப்பிடுகின்றன.

"மைம்மீன் புகையினும் தூமம் தோன்றினும்
தென்திசை மருங்கின் வெள்ளி ஓடினும்"

(மைம்மீன்=சனிமீன்) — புறநானூறு
பாடல் எண் 117.

"கரியவன் புகையினும் புகைக் கொடி
தோன்றினும்
விரிகதிர் வெள்ளி தென்புலம் படரினும்"

(கரியவன்_சனி) — சிலப்பதிகாரம்
நாடுகாண்காதை

"அடையார் தமக்கு மகத்திற் சனியன்ன
சந்திரவாணன்"

— தஞ்சை வாணன்
கோவை48.

"மகத்தில் வாழ் சனியாயின"

— வாயு சங்கிதை7.

"விசயன் தம் முற்குதவி செய்யாமல்
மகத்திற் சனிபோல் வளைக்குவம் யாம்."

— வில்லிபாரதம் 11ஆம்
போர்ச். 40.

இவ்வாறு பேசப்படும் சனி தனக்குப் பகைவீடான சிங்கராசி புகின் உலகிற்குப் பெருந்தீங்கு விளைவிப்பான் என்பது சோதிட நூல்வல்லோர் தம் கணிப்பாகும்.

முப்பது ஆண்டுகளுக்கு ஒரு முறை மகத்தில் புகும் சனியினால் எவ்வளவு பெருங்கேடுகளோ, அதற்கு நேர் எதிரான நற்பலன்களை 12 ஆண்டுகளுக்கொருமுறை நல்கும் கோள்நிலையே மாமக நன்னாளாகும். அன்று குரு சிம்மராசிக்குள் இருப்பார். சந்திரனும் இந்த ராசியில் மகநட்சத்திரத்தன்று தங்கி இருப்பார். அதனால் குரு சந்திர யோகச் சிறப்பு உண்டாகிறது. சூரியன் கும்பராசியில் வீற்றிருந்து தன் இராசியை நோக்குகின்றார். இதனால் ஒன்றுக்கொன்று ஏழாம் இடமாகக் குருவுக்கும் சூரியனுக்கும் பார்வை ஏற்படும். அன்று பௌர்ணமி நன்னாள். அதனை மாகப்பௌர்ணமி என்றும் கூறுவர். இப்பெருநாளில் கும்பகோணத்தில் மாமகத் தீர்த்தம் ஆடுபவர்களுக்கு எல்லா நலங்களும் பயப்பதோடு உள்ளொளி பெருகிச் சிவஞானப்பேறும் கிட்டும் என்பதே புனித நீராடுதலின் நோக்கமாகும்.

## திருக்குடந்தைத் தலபுராணம்.

கும்பகோணமான்மியம் எனும் குடந்தைத் தலபுராண நூல் தலமகிமையும், தீர்த்த மகிமையும் விவரிக்கின்றது. பேரூழிக்காலத்தில்



வெள்ளப்பெருக்கால் உலகம் மூழ்கி அழியும்போது, மீண்டும் உயிர்கள் தோன்ற என்ன வழி எனப் பிரமன் சர்வேஸ்வரனை வேண்ட, அவர் கூறியபடி அமிருதத்தை மண்ணில் குழைத்து ஓர்குடம் செய்து, அதனுள் அனைத்துச் சிருஷ்டி பீஜங்களையும் வைத்து அமிருதத்தால் நிரப்பி மேருமலையில் ஓர் உறியில்வைத்துப் பூஜித்து வந்தார். மகாபிரளய காலத்துப் பெருவெள்ளத்தில் உறியுடன் கலசம் மிதந்து சென்று, வெள்ளம் வடிந்த போது இறைவனின் திருவருளால் பூமியில் நிலைபெற்றது. பரமேசுவரனின் திருவருளால் அமுத கலசம் அம்பினால் உடைக்கப்பட அமுதவெள்ளம் பெருக்கெடுத்தோடியது. இவ்வாறு அமுதம் பரவிய ஐந்து குரோச நிலப்பரப்புதான் பஞ்ச குரோசத்தலம் எனும் கும்பகோணமாயிற்று. அமுதப் பெருக்கால் மீண்டும் உயிர்கள் தோன்றிப் புவி செழித்தது. உயிர்கள் தோன்றக் காரணமாய் இருந்த பதி குடந்தைப்பதி. அமுதம் வழிந்தோடித் தங்கிய இடம் "அமுத சரோருகம்" என்றழைக்கப்பட்டது. அந்த இடம்தான் மாமகத்திருக்குளமாம் பொற்றாமரை புட்கரணி ஆகும்.மாமக நாளில் இங்கு கங்கை, யமுனை, சரயு, சரஸ்வதி, சிந்து , நர்மதை, கோதாவரி, கிருஷ்ணா, காவிரி ஆகிய ஒன்பது நதிகளும் நவகன்னியர்களாக வந்து நீராடியதால் "கன்னியர் தீர்த்தம்" என்றும் பெயர் பெற்றது.

அமுத கும்பம் வைத்திருந்த இடம் கும்பேசமாகவும், அமுத குடம் இருந்த உறி சிவலிங்கமான இடம் சோமேசம் எனவும், அக்கும்பத்தில் சாத்தி இருந்த வில்வம் நாகேச மாகவும், கும்பத்தேங்காய் அபிமுகேசமாகவும், பெருமான் அமுத குடத்தை வில்லால் சிதைத்த இடம் பாணுபுரேசமாகவும், கும்பம் சிதறியதால் அதன்மேல் சுற்றப்பட்ட நூல் சிதறிய இடம் கௌதமீசம் எனவும் அழைக்கப்படலாயிற்று. இவை திருக்குடந்தையில் உள்ள திருக்கோயில்களாகும்.

## தேவாரக்கோயில்களும் தேமதுரத் தீர்த்தங்களும்.

திருக்குடந்தைப் பெருநகரில் தேவாரப் பாடல் பெற்ற திருக்கோயில்கள் மூன்று உள்ளன. திருக்குடமூக்கு, குடந்தைக் கீழ்க்கோட்டம், குடந்தைக் காரோணம் என்பவையே அவை. திவ்யப்பிரபந்தப் பாடல் பெற்ற வைணவத் திருப்பதி குடந்தைக் கிடந்தான் உறையும் சார்ங்கபாணி திருக்கோயிலாகும்.

கும்பேசுவரர், அமுதேசுவரர், குழகர் என்ற திருநாமங்களால் இறைவனும், மங்களாம்பிகை என்ற பெயரால் இறைவியும் கோலம் கொண்டு திகழும் அருள்மிகு கும்பேசர் திருக்கோயிலே திருக்குடமூக்கு என அழைக்கப்பெறும். இத் திருக்கோயிலுக்குக் கிழக்காகவும், சார்ங்கபாணி ஆலயத்திற்கு மேற்காகவும் திகழும் புட்கரணி பொற்றாமரைத் திருக்குளமாகும்.

இறைவன் நாகேசுவரராகவும், (நாகநாதர்) இறைவி பிருஹந்நாயகி (பெரியநாயகி) யாகவும் உறையும் கற்கோயில் குடந்தைக் கீழ்க்கோட்டம் எனும் நாகேசுவரசுவாமி திருக்கோயிலாகும். எழிலார்ந்த கற்றளியாகத் திகழும் இவ்வாலயம் சோழர்சிற்பக்கலையின் பெட்டகமாகும். உலகக் கலைவல்லோர் வியக்கும் ஒப்பரிய சிற்பங்கள் இங்குண்டு. இராமாயண மாகாவியம், சிவபுராணம் போன்றவை சிற்றுருவச் சிற்பங்களாக வடிக்கப்பெற்றுக் காட்சி நல்குகின்றன. சோழ அரசர், அரசியர் சிற்பங்களும் இங்குள்ளன.

குடந்தைக்காரோணம் என்பது மாமகக் குளத்தின் வடகரையில் உள்ள கோயிலாகும். இதனைக் காசிவிஸ்வநாதர் கோயிலென அழைப்பர். மகாசங்கார காலத்தில் ஆன்மாக்களை இறைவன் ஐக்கியமாக்கிக் கொண்ட தலம் காரோணம் எனக் கூறுவர். குடந்தைக் காரோண இறையவர் காசி விசுவநாதர் என்றும் தேவியார் விசாலாட்சி, அன்னபூரணி என்றும் அழைக்கப்பெறுகின்றனர். அமுதகலசம் வைத்திருந்த உறி சிவலிங்கமான தலமாக மான்மியம் உரைக்கின்றது. வியாழனும் சந்திரனும் வழிபட்ட தலமாகக் குடந்தைக் காரோணம் குறிக்கப்பெறுகின்றது.

குடந்தை நகரில் 14 தீர்த்தங்கள் புனிதமாகப் போற்றப்பெறுகின்றன. இவற்றுள் 7தீர்த்தங்கள் தடாகங்களாகும். மூன்று கிணறுகளாகும். கங்கையிற் புனிதமான காவிரித்துறைகள் நான்காகும். இவற்றுள் தலையாயதாகப் போற்றப்பெறுவது மாமகப்புட்கரணியே.



## மாமகத்திருக்குளமும் சோடச மண்டபங்களும்.

மகாமகத்திருக்குளம் என்ற பெயரோடு திகழும் இப்புட்கரணி 6.5 ஏக்கர் பரப்பளவில்

பதினாறு மண்டபங்கள், சிறுகோயில்கள் கொண்டு, நடுவில் 9 கிணறுகளையும் பெற்றுத் திகழ்கின்றது. பிரம்மதீர்த்தேசம், முகுந்தேசம், தனேசம், நிஷபேசம், பாணேசம், கோணேசம், பக்தேசம், பைரவேசம், அகத்தீசம், வியாசேசம், கங்காதரேசம், பிரம்மேசம், முத்ததீர்த்தேசம் முதலிய சிறிய சிவாலயங்கள் குளக்கரையை அலங்கரிக்கின்றன. வடமேற்குத் திசையில் மிகப்பெரிய துலாபுருஷ மண்டபம் உள்ளது. செவ்வப்ப நாயக்கர், அச்சுதப்பநாயக்கர், இரகுநாத நாயக்கர் ஆகிய முப்பெரும் தஞ்சை நாயக்கமன்னர்களுக்கு (பாட்டன், தந்தை, மகன்) குலகுருவாகவும், மதி அமைச்சராகவும் திகழ்ந்த கோவிந்த தீட்சிதரின் வழிகாட்டலோடு கி.பி. 1600-1632 வரை ஆட்சிபுரிந்த மாமன்னன் இரகுநாத நாயக்கன் கட்டுவித்ததே இன்று நாம் காணும் குளக்கரையும் 16 (சோடச) மகாதான மண்டபங்களும், சிறுகோயில்களும் ஆகும். துலாபுருஷ மண்டபத்தில்தான் இரகு நாதன் துலாதானம் நல்கியதாகத் தஞ்சை அரண்மனை நூலக ஏட்டுச்சுவடிகள் குறிக்கின்றன.

நிர்ணயஸிந்து எனும் சமஸ்க்ருதநூல் சோடச மகாதானங்கள் பற்றி விரிவாகக் குறிக்கின்றது. அவை கோதானம், பூமிதானம், படுக்கைதானம், (படுக்கை, விளக்கு, புஷ்பங்கள், பழம், ஆகியவற்றோடு) ஹிரண்யதானம் (தங்கம்); வெள்ளிதானம், தேர்தானம், கஜதானம் (யானை), அஸ்வதானம் (குதிரை), வஸ்திரதானம், தான்யதானம், ரத்தினதானம், வீடுதானம், கம்பளிதானம், கன்னியாதானம், அன்னதானம் (அறுசுவை உண்டி அளித்தல்), குடைதானம் என்பவை என விவரிக்கின்றது. இத்தகைய தானங்களை இப் பெருமன்னன் மாமகத் தீர்த்தமாடி ஒவ்வொரு மண்டபத்திலும் அமர்ந்து வழங்கியதை இப்பதினாறு மண்டபத்து விதானங்களில் உள்ள சிற்பக் காட்சிகள் வாயிலாக அறியலாம்.

## கங்கைகொண்ட கணபதியார்.

மாமக நன்னாளில் கங்கை நீர் குடந்தைப் புட்கரணியில் சங்கமிப்பது போன்று கங்கைக் கரைக்கலையும் காவிரிக்கரைக் குடந்தையில் சங்கமித்துள்ளது. இது வரலாற்று உண்மை. சோழப்பெரு மன்னர்களில் பெருவீரத்தால் வரலாறு படைத்தவன் மாமன்னன் இராஜராஜனின் மைந்தன் இராஜேந்திர

சோழனாவான். கங்கையும் கடாரமும் (மலேசியா நாடு) வென்றவன். சோழப் பெருமன்னர்கள் பிற நாடுகளை வெற்றி கொள்ளும்போது அப்பகுதியில் இருந்து வெற்றிச் சின்னமாகத் தெய்வத்திருமேனிகளை எடுத்துவந்து, சோழ நாட்டில் வைத்து வழிபடுவது அவர்தம் மரபாகும். இவ்வாறு கொணர்ந்த பல இறையுருவங்கள் கங்கைகொண்டசோழபுரம், திருலோக்கி, திருவாஞ்சியம், தாராசுரம், திருவையாறு போன்ற திருக்கோயில்களில் இன்றும் உள்ளன. இவ்வகையில் கங்கைக் கரையிலிருந்து இராஜேந்திர சோழனின் தளபதிகள் கொணர்ந்த கணபதியின் திருமேனி ஒன்று குடந்தைக்கீழ்க்கோட்டம் எனும் நாகேசுவரன் திருக்கோயில் கருவறை அர்த்தமண்டபத்தில் உள்ளது. இது மிகப் பெருமைக்குரிய வரலாற்றுச் செய்தியாகும்.

தற்போதைய வங்க தேசத்தைச் சோழர்களின் காலத்தில் ஆண்டவர்கள் பாலர்கள் எனும் அரச மரபினர் ஆவர். சோழர்களைப் போன்று அவர்கள் கலைத்துறைக்கு நற்பணி ஆற்றியவர்கள். பாலர்கள் படைத்த மிக அழகான கணபதியார் கற்சிற்பம் ஒன்று சோழப்படையைக் கவர்ந்தது. அக்கவர்ச்சி அத்திருமேனியை இங்குக் கொணரச் செய்தது. இதுமட்டுமன்றி, இதைப் பார்த்த சோழ நாட்டுச் சிற்பியொருவன் திருவானைக்காக் கோயிலில் குடந்தையில் உள்ள பாலர்களது கணபதியைப் போன்றே செப்புத் திருமேனி ஒன்று படைத்தான். இங்கு கங்கையாற்றுக் கலை காவிரியாற்றுக் கலையோடு சங்கமித்தது. இவ்வளவு சிறப்புகள் பெற்ற குடந்தை நாகேசுவரன் கோயிலில் உள்ள கங்கைகொண்ட கணபதியாரை மாமக நீராடி வழிபட்டால் நிச்சயம் மனங்குளிரும்.



## குடந்தையில் சூரியன் திருக்கோயில்

சூரியன் கும்பராசியில் அமர்ந்து, மக நன்னாளில், சிம்மராசியில் உள்ள குருவைப்பார்க்கும் புனித நேரமே மாமகம் ஆடும் நேரமாகும். அப்போது புனித நீராடிக் குருவின் அருள்பெறக் குடந்தை ஈசனைப் போற்றி வழிபடுவதோடு சூரியதேவனையும் வழிபடுதல் வேண்டும். இதற்கெனக் குடந்தையிலேயே சூரியனார்க்கு ஒரு திருக்கோயில் எடுத்தனர் நம் முன்னவர்கள். எழிலார்ந்த இத் திருக்கோயில் நாகேசுவரனார் திருக்கோயில் பிராகாரத்தின் வடகிழக்குப் பகுதியில் உள்ளது. சோழர்காலத்து இத்திருக்கோயிலில் ஆதவன் எழிலோடு நின்று அருள்பாலிக்கின்றார். மாமக நீராடி இக்கோயிலுக்கு வந்து கங்கைகொண்ட கணபதியாரையும், சூரியனையும் வழிபட்டால் நலம்பல விளையும்.

வடநாட்டில் கும்பமேளா, ஆந்திரத்தில் புஷ்கரம் போன்று தமிழகத்தின் மாமகப் பெருவிழா நிகழும் பிரஜோத்பத்தி ஆண்டு மாசித் திங்கள் 6 ஆம் நாள் (18-2-1992) செவ்வாய்க்கிழமை நிகழ்கிறது. சிங்கத்தில் குரு சந்திரனோடு அமரும் இப்புனித நாளில் மாமக நீராடிக் குடந்தைக் குழகனையும், குடந்தைக்கிடந்தானையும் போற்றி நலம்பெறுவோமாக!

மகா மகக் குளம்: நடுவே தெரிவது ஸ்ரீ காசி விச்வநாதர் ஸந்நிதி.

நன்றி: ஆனந்த விகடன்

# நவகன்னியரும் மகாமகமும்



**முனைவர் பா. இறையரசன்**

"வெளிநின்ற நின்திருமேனியைப்
பார்த்துஎன் விழியும்நெஞ்சம்
களிநின்ற வெள்ளம்கரை கண்டது
இல்லை; கருத்தினுள்ளே
தெளிந்ற ஞானம்திகழ் கின்றது
என்ன திருவுளமோ,
ஒளிநின்ற கோணங்கள் ஒன்பது
மேவி உறைபவளே!"

(அபிராமி அந்தாதி 19)

"உன் ஒருதுளி நீரே எமனிடமிருந்து மீட்கும்" என்று காளிதாசனும் "உன்னில் நான் ஆமையாய் மீனாய்ப் புழுவாய்ப் பிறந்தாலும் போதும்" என்று வால்மீகியும் புகழும் கங்கை பாவங்களைப் போக்கும் சிறப்பு உடையது. இத்தைய கங்கை, யமுனை ஆகியவற்றைவிடக் காவிரி உயர்ந்தது என்பதை,

"கங்கையங் கரைநாள் மூன்றும்
கௌதமைய முனை யாடி
அங்கதன் கரைநாள் ஐந்தும்
அமைந்துளார்க் கெய்தும் பேற்றில்
பொங்குகா விரிம ருங்கில்
போயொரு கணப்போதேனும்
தங்குவார்க் குரிய பேறே
த்லைமையாய்ச் சாற்றும் நூல்கள்"

என்று திருவாஞ்சியப் புராணம் கூறும். இத்தகைய கங்கை, காவிரி முதலிய ஒன்பது தீர்த்தங்களும் வந்து குடந்தையில் குளிக் கின்றனர் என்பது மகாமக நாளின் சிறப்பு ஆகும். இந்த ஒன்பது நதிகளின் உருவமைப்பாகக் குடந்தைக் காசிவிசுவநாதர் கோயிலில் ஒன்பது கன்னியரின் சிலைகள் உள்ளன. இவற்றைச் சப்தகன்னியர் என்றும் சிலர் குறிப்பர். உலகமெல்லாம் புரக்கும் அன்னை பராசக்தி சப்தமாதாக்களாகவும் சப்தகன்னிகளாகவும் விளங்குவதே போன்று நவமாதாக்களாகவும் நவகன்னிகளாகவும் நவகாளிகளாகவும் நவசக்திகளாகவும் பல் உருக்கொண்டு விளங்குகிறாள் அல்லவோ! இதேபோல் சப்தநதிகள் அல்லது சப்ததீர்த் தங்கள் என்னும் நதிகளும் நவநதிகளாகவும் நவதீர்த்தங்களாகவும் குறிக்கப்படுகின்றன எனலாம்.

"பூமருவும் கங்கைமுதல் புனிதமாம்
பெருந்தீர்த்தம்
மாமகந்தா னாடுதற்கு வந்துவழி
படுங்கோயில்"

(பெரியபுராணம், வ.வ. சருக்கம் 409)

என்று சேக்கிழாரும்,

"கங்கை, மாமகம் தோறும் வந்து
வந்துதற் படிந்தரோர் விட்டுப்
போமகம் போக மூழ்கும்
புனிதநீர்ப் பதியைக் காண்மின்"

(திருவிளையாடற்புராணம்,
அருச்சனைப் படலம் 25)

என்று பரஞ்சோதி முனிவரும் கங்கை முதலிய நதிகள் குடந்தை வந்து மூழ்குகின்றனர் என்பர்.

"கோதாவரி உறையும் குடமூக்கிலே"

"சாமியொடு சரச்சுவதியவள்
கோமியும் உறையும் குடமூக்கிலே"

"தாவிமுதற் காவிரிநல் யமுனை கங்கை
சரஸ்வதி பொற் றாமரைபுட்
கரணி தெண்ணீர்க்
கோவியொடு குமரிவரு தீர்த்தஞ் சூழ்ந்த
குடந்தைக்கீழ்க் கோட்டத்தெங்
கூத்த னாரே"

என்று அப்பர் பாடியுள்ளார்.

அப்பர்தம் தேவாரத்தில் கங்கை, யமுனை, சரசுவதி, காவிரி, கோதாவரி என்னும் ஐந்து நதிகளைக் குறிக்கின்றார். சொக்கப்ப நாவலர் இயற்றியுள்ள கும்பகோணப்புராணத்தில் மேற்குறித்த ஐந்து நதிகளுடன் நருமதை, துங்கபத்திரை, குமரி, சரயு ஆகிய நதிகளையும் சேர்த்து ஒன்பது நதிகள் குறிக்கப்படுகின்றன. துங்கபத்திரைக்குப் பதிலாகப் பாலாற்றை (பயோஷினி) பி.வி. ஜகதீச அய்யர் தென்னிந்தியத் திருவிழாக்கள் பற்றிய தம் ஆங்கில நூலில் கூறியுள்ளார். துங்கபத்திரை, குமரி ஆகியவற்றிற்குப் பதிலாகத் தாமிரவருணி, சிந்து என்று தமிழ்க் கலைக்களஞ்சியக் கட்டுரையாளரும் வைகை, சிந்து என்று பாஸ்கரத் தொண்டைமான் அவர்களும் கூறியுள்ளனர். குமரி என்பதைக் கிருஷ்ணா என்றும் சிலர் கூறுவர்.

சொக்கப்ப நாவலரின் கூற்றை ஏற்று நவகன்னியரையும் முறையே கங்கை, யமுனை, நருமதை, சரசுவதி, காவிரி, கோதாவரி, துங்கபத்திரை, குமரி, சரயு என்ற ஒன்பது நதிகள் என்று கொள்ளலாம்.

திருக்குடந்தைக் காசிவிசுவநாதர் ஆலயத்தில் உள்ள ஒன்பது நதிகளின் சிலைகளும் ஒன்றிற்கொன்று வேறு படுகின்றன. கங்கை நதியின் சிலை சங்கு சக்கரத்துடன் முதலாவதாக அமைந்துள்ளது. கங்கையும் சரசுவதியும் நான்கு கரங்களுடன் உள்ளனர். இச்சிலைகள் ஐந்திலிருந்து ஐந்தேகால் அடி உயரமுடையன; சரயு மட்டும் சற்றே உயரம் குறைந்துள்ளது. இச்சிலைகளிடையே குழைகள், கிரீடம் ஆகிய அணிகலன்களும் கண், மூக்கு, உதடு, மார்பகங்கள், இடுப்பு ஆகிய உறுப்புக்களின் அமைப்பும் வேறுபடுகின்றன. துங்க பத்திரையின் இடுப்பு தனித்தன்மை கொண்டது. குமரி, சரயு ஆகியோர்க்கு மார்புக் கச்சை இல்லை. நடுவில் காவிரி இருக்க, இருமருங்கும் நால்வர் நால்வராய்ப் பிற கன்னியரும் சமபாதங்களுடன் அதே நேரத்தில் காவிரி நடுநாயகமெனத் தெரியும்படிச் சற்றே நடுநோக்கித் திரும்பி அமைந்துள்ள பாங்கு வியக்கத்தக்கது. நடுவில் அமைந்து விளங்கும் காவிரியின் சிலையை வடிப்பதில் சிற்பி மிகுதியான கவனம் செலுத்தியுள்ளான். கிரீட மகுடம், உட்கழுத்துப்பொட்டு, தோள்சரம், கண்டிகை, சரம், வாகுவளையம், மார்பில் பூக்கச்சு, உதரபந்தம், வீரசன்னம், யாழமுகக் கச்சை, அரையாடையின் மென்கோடுகள் ஆகியன சிறப்பாகக் குறிப்பிடத் தக்கன. கூரிய கீழகண்ட மூக்கும் இடுப்புப் பகுதிகளின் வயிற்றுப் பகுதி வளைவுகளும் தமிழ்நாட்டுச் சிற்பச்சிறப்பின.

இந்நவகன்னியரும் உலகினரின் பாவம் போக்கும் தம்பணியைத் தொடர்ந்து செய்யத் திருக்குடமூக்கு என்னும் கும்பகோணத்தின் குளக்கரையில் தவம் புரிந்துகொண்டிருக் கிறார்கள். "கங்கையே முதல் தீர்த்தமாங் கடவுள் மாநதிகள்" என்று சேக்கிழாரால் போற்றப்பெறும் இந்நவ கன்னியர்க்கு ஆண்டுதோறும் மகநாளில் சிறப்புச் செய்துவருவது உலகுக்கு - குறிப்பாகத் தமிழ்நாட்டுக்கு - மழைவளமும் நல்கும்.



# குடமூக்கு ஒரு நோக்கு

முனைவர் சி. பாலசுப்பிரமணியன்



முத்தமிழும் முக்கனியும் முப்பாலும் தித்திக்கத் தேன்சுவை கூட்டித் தெவிட்டாத இன்பந்தரும் செந்தமிழ் வழங்கும் பைந்தமிழ் நன்னாடு நம்நாடு. பாவேந்தர் ஏடாள மூவேந்தர் நாடாளக் கோடாத செங்கோல் கண்டு வளங்கொண்டது தமிழகம்.

வானார்ந்த பொதியின் வளர்கின்ற மதியாக, மன்னிய மூவேந்தர்தம் மடிவளர்ந்த மகளாக, தேனார்ந்த தீஞ்சுவைசால் திருமாலின் குன்றம் தென்குமரி ஆயிடையே செங்கோல் கொண்ட செல்வியாக விளக்கமுற்றவள் செந்தமிழ்த்தாய்.

எத்திசைவாழ் மாந்தரும் முத்தமிழ்த் திறங்கொண்ட பக்தி மொழியென இசைத்துப் போற்றும் தமிழைத் தாய்மொழியாகக் கொண்ட தமிழ்மக்கள், காடு கெடுத்து நாடாக்கிக் கழனி வளங்கண்டவர்கள்; நகரம் அமைத்து நாடாண்டவர்கள். அறநெறியே பொருளீட்டி இன்பம் துய்த்து அதற்கென முப்பால் வகுத்து, அகம் ஐந்தாய்ப் புறம் ஏழாய்த் திணை வகுத்து இலக்கிய இலக்கணம் கண்டவர்கள் தமிழ்மக்கள்.

வேழவளம் படைத்த சேரர்நன்னாடு பொருநை ஆற்றால் வளம் கண்டது; முத்துவளம் படைத்த பாண்டியர்திருநாடு பொய்யாக் குலக்கொடி வையை ஆற்றால் பொன்விளைத்தது. இவை போன்றே சோற்று வளம் கொண்ட சோழர்வளநாடும் காவிரி ஆற்றுவளம் கண்டது.

மலைத்தலைய தலைக்காவிரி மலைத்தலம்விட்டு அலைக்கரம் விரித்து வயல்வளம் காண நயமுற நடந்து மேட்டூரிலே மேவி நிலை கொண்டு மெல்லென நடந்து மேற்றிசை ஒதுக்கி வெள்ளப் பெருக்கேற்கக் கொள்ளிடம் கண்டு, கல்லணை மேவிக் காவிரிப்பெருக்காய் வெண்ணாறு கண்டு அதில் வெட்டாற்றுப் பெருக்காய்ப் பன்னலம் பெருகிடப் பக்குவம் ஈந்து மருக்காடு காட்டும் திருக்காட்டுப் பள்ளியில் குடதிசையிருந்து குணதிசை நோக்கும் குடமுருட்டி கண்டு சிந்து பாடும் ஐந்து ஆறாகத் திருவையாற்றிலே தேங்குநலங் கண்டு வங்கக் கடல்வரை வளமுடன்நலம் பெருக்கி ஓடியது.

காவிரியால் வளம்சேர்ந்த சோழர்நாடு, காவிரி நாடாயிற்று; நாட்டை ஆண்டவன் காவிரி நாடன் ஆயினன். காவிரியால் வளம்பல பெற்ற சோழநாடு வளநாடாயிற்று; ஆண்டவன் வளவன் ஆனான். காவிரியால் பொன்னெனப் போற்றப்பெறும் நென்மணிப் பெருக்கத்தால் பொன்னி நாடாயிற்று; ஆண்டவன் பொன்னிநாடன் ஆனான்; காவிரியும் பொன்னிநதி ஆயிற்று.

சோறுவடித்த கஞ்சி யாறுபோலப் பரந்தொழுகும்நாடு சோழநாடு; ஒரு பிடி படியும் சிறிடம் எழுகளிறு புரக்கும் நாடு; சோழவள நாடு சோறுடைத்து என்றெல்லாம் பாவலராலும் நாவலராலும் பாராட்டுப் பெற்றது வளவர்நாடு.

சோழர்நாட்டுத் தலைநகராகப் பூம்புகார், காவிரிப் பூம்பட்டினமாகப் பொலிவு பெற்றிருந்த காலம் சிலப்பதிகார காலம். உறந்தை மாநகரும் அடுத்த நிலையில் சோழர் தலைநகராகச் சொந்தம் கொண்டாடிய நாளும் உண்டு. சோழநாட்டைப் புகார்ச் சோழரும் உறந்தைச்



சோழருமாகப் பிரித்தாண்ட காலமும் உண்டு. இவை யெல்லாம் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முந்திய சங்ககாலத்தில். அந்தக்காலம் தனித்தமிழ் ஆட்சி நிலை பெற்றிருந்த காலம்.

பாண்டிய மன்னனிடத்து வழக்குரைக்க வந்த கண்ணகி "வாயிலோயே வாயிலோயே" எனக் கோட்டை வாயிற்காவலனை விளிக்கின்றாள். வேலியெனக் கோட்டை கட்டி அதனுள் செல்ல வழியாக வாயில் அமைத்திருந்தனர்.

கோட்டைக்கு மட்டுமன்று; நாட்டுக்கும் வேலியிட்டு (எல்லை) அதற்கும் வாயில்கண்ட காலம் அது.

குடக்கு என்பதும் குணக்கு என்பதும் வடக்கு, தெற்கு என்பன போன்று திசைப்பெயர்களே. குணபுலம், குடபுலம், குணவாயில் குடவாயில் என்னும் இலக்கியச்சான்றுகள் இதனை உறுதிப்படுத்தும்.

நெஞ்சை அள்ளும் சிலப்பதிகாரம் தீட்டிய இளங்கோவடிகள் "குணவாயிற் கோட்டத்து அரசு துறந்திருந்த" என்று குறிக்கப் படுகின்றார். கோட்டம் என்பது கோயில்; கோட்டையென அமைந்த ஏதுவால் கோயில் கோட்டம் என்னும் வழக்குப் பெற்றது, கோ-வீற்றிருந்த இருப்பிடம் (கோ-அரசன், இறைவன்) கோயில் ஆயிற்று. 'கோயில் மன்னனைக் குறுகினள் சென்றுழி' என்னும் சிலப்பதிகாரத் தொடர் இதனை விளக்க அமையும்.

சோழநாட்டு ஆறுகளில் ஒன்றான குடமுருட்டியும் குடத்தை உருட்டிக்கொண்டு வந்த ஏதுவால் குடமுருட்டி எனவழங்கப் பெற்றது எனக் கதை ஒன்றும் கூறப்பெறுகிறது. அது பொருந்தா விளக்கம் எனக் கூறுபவரும் உளர். குடதிசையிலிருந்து குணதிசை நோக்கிப் பாய்ந்தோடும் ஏதுவாலேயே 'குடமுருட்டி' என்னும் பெயரை ஏற்றிருத்தல் வேண்டும் என்பர்.

'குடமூக்கு' என்னும் பெயரும் குடவாயில் என்ற பொருளில் அக்காலத்தே வழங்கப் பெற்றிருக்கலாமோ என எண்ணிப்பார்க்க இடமுண்டு. புகார்ச்சோழரும் உறையூர்ச் சோழரும் தத்தம் நாட்டுக்கு வேலி (எல்லை)யிட்ட போது, புகார்ச் சோழருக்கு அது மேற்கு வாயிலாக - குட வாயிலாக - குடமூக்காக இருந்திருக்கலாமோ என்றெல்லாம் எண்ணுதற்கும் வாய்ப்புண்டு. இவ்வாய்ப்பினைக் கற்றறிந்த சான்றோர் பக்கம் விட்டு விடலாம்.

புகாரும் உறந்தையும் பொன்னி நாட்டுத் தலைநகரங்களாய் அமைந்த காலங்கள் கடந்து தஞ்சை, தலைநகராகும் காலம் ஒன்று வந்தது; தஞ்சையைத் தொடர்ந்து குடமூக்கு என்னும் குடந்தையும் (கும்பகோணம்) பிற்காலச் சோழர்களுக்குத் தலைநகர் ஆயிற்று, பொன்னியாறும் (காவிரி) அரிசிலாறும் புதுப்புனலூட்டப் பொலிவு பெறுவது இக் கும்பகோணம்.

வேலி ஆயிரம் விளையுளைத் தரும் சோழவளநாட்டு மாவட்டங்களுள் தஞ்சை மாவட்டம் தனிச்சிறப்பு வாய்ந்தது எனக் கூறுவது பொருத்தமே ஆகும். நன்செய்வளத்தோடு நெஞ்சையள்ளும் கலைவளம் நிறைந்தது தஞ்சைமாவட்டம்; தண்புனல் கொழிக்கும் காவிரிக்கரையோரம்.

இம்மாவட்டத்தின் தலைநகராக விளக்க முறுவது தஞ்சாவூர். தண்செய் ஊர் என்பதே தஞ்சாவூர் எனவும் (தண்+செய்) தஞ்சை எனவும் மருவினவோ என எண்ணுதற்கு இடமுண்டு. இலக்கிய மேதைகள், இசை வல்லுநர்கள், கலைநலக்காவலர்கள் பலரும் தோன்றி வளர்ந்து வாழ்ந்து புகழ் பரப்பியது காவிரிக் கரையிலேதான்- காவிரிக்கரை தொடர்ந்த சோழ நாட்டிலே தான்.

இன்று மாவட்டத் தலைநகராக விளங்கும் தஞ்சையோ வெண்ணாறு, கல்லணைக்கால்வாய், வீரசோழ வடவாறு போன்றவற்றால் வளம்கொண்டு சிறப்பது. இன்றும் இங்குத் தஞ்சையை ஆண்ட மன்னர்களின் அரண்மனை வளாகத்தைக் கண்டுகளிக்கலாம். கண்ணுக் கெட்டிய தூரம் கற்பாறைகளே கிட்டாத தஞ்சையில் இராசராசசோழனால் ஆயிரம் ஆண்டுகட்குமுன்னர்க் கட்டப்பெற்ற பெரிய கோயிலைக் காணலாம். அதனை ஒட்டியுள்ள சிவகங்கைப் பூங்காவைச் சேர்ந்து மகிழலாம்.



பன்மொழிப்புலமையும் பாங்குறு கலை யுணர்வும் கொண்ட சரபோஜி மன்னரால் போற்றிப் பாதுகாக்கப் பெற்ற சரசுவதி மகால் நூலகம் வையகத்துப் பேரறிஞர்களெல்லாம் பாராட்டும் வாய்ப்பினைப் பெற்றிருப்பதைப் பார்த்தும் கேட்டும் மகிழலாம்.

முத்தமிழ்க் கலையிலும் வித்தகத்தன்மை பெற்ற மூதறிஞர் பலரும் தத்தம் பணியைத் தளர்ச்சியின்றிச் செய்துவக்கும் கலைக்கோயிலாகத் தஞ்சை வல்லம் சாலையில் விளக்கமுறும் தமிழ்ப் பல்கலைக் கழகத்தைக் காணலாம்.

பொன்மனச் செம்மல் புரட்சித் தலைவர் ஆட்சியில் ஆயிரம் ஏக்கர் நிலப்பரப்பில் வானுற உயர்ந்து வண்ணவிளக்கமைந்து தேனிமிர் சோலை சூழ உள்ள தமிழ்ப் பல்கலைக்கழகம் அமைந்த அந்தத் திருவிடத்தைக் கண்டு களிகூரலாம்.

தமிழ்மொழிக் கலைகளையெல்லாம் பிறமொழிகளில் பெயர்த்துத் தரணியெங்கும் தமிழின் புகழ் பரப்புவதிலும் பிறமொழிகளிலுள்ள கலைச்செல்வங்களை யெல்லாம் தமிழ்மொழியில் கொண்டுவந்து பெரும் புகழ் ஈட்டுவதிலும் தமிழ்ப் பல்கலைக்கழகம் தன்னிகரற்று விளங்குவதைக் கண்டும் கேட்டும் களிப்பு மிகக் கொள்ளலாம்.

மாவட்டத் தலைநகர் தஞ்சையைச் சுற்றிப்பார்த்த பின்னர்த் தஞ்சையிலிருந்து 40 கிலோ மீட்டர்த் தொலைவிலுள்ள கும்பகோணம் செல்லலாம்.

'கங்கை நதிப்புறத்துக் கோதுமைப்
பண்டம்
காவிரி வெற்றிலைக்கு மாறு
கொள்ளுவோம்'

என்று பாடிய பாரதியின் வாக்கில் வெளிப்பட்ட பக்குவச்சுவை கொண்ட அந்தக் கொழுந்து வெற்றிலைக்குப் பெயர் பொறித்த இடம் கும்பகோணம்.

பொன்னென ஒளிவீசி வண்ணவேலைப் பாடமைந்து பொலிவுறும் வெண்கலப் பாத்திரங்களுக்கு இருப்பிடமாகத் திகழ்வது கும்பகோணம்.

கும்பேசுவரர் கோயிலோடு அறுபதுக்கும் மேற்பட்ட கோயில்களைத் தன்னகத்தே கொண்டு தமிழகத்திலேயே கோயில் நகரம் என்னும் சிறப்பினைப் பெற்றிருப்பது கும்பகோணம்.

பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஒருமுறை பூக்கும் குறிஞ்சிமலரினைப் போலப் பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஒரு முறை வரும் மகாமகத்தைக் கொண்டாடி மகிழும் பேறு பெற்ற நகரம் கும்பகோணம்.

கங்கை, யமுனை, சரசுவதி, நருமதை, பயோடினி, சரயு, கோதாவிரி, காவிரி, குமரி ஆகிய ஒன்பது நதிகளும் நவகன்னியராக உருவெடுத்து வந்து திருவளர் செல்வம் செழிக்கச் செய்த நகரம் கும்பகோணம்.

அப்பரும் ஆளுடையபிள்ளையும் மெய்ப்புகழ் பாடும் தேவாரத் திருப்பாடல்களால் போற்றிப்பரவிய தலம் கும்பகோணம்.

இந்திர தீர்த்த முதலாக அறுபத்தாறுகோடி தீர்த்தம் ஈறாகப் பத்தொன்பது தீர்த்தங்களும் அமைந்த மகாமகக் குளத்தைப் பெற்றிருப்பது கும்பகோணம்.

இத்துணை நலங்களும் பெற்ற சித்திர வனப்புக் கொண்ட கும்பகோணம் இலக்கியங்களிலும் இடம் பெற்றுள்ளமையை நாம் அறிந்து இன்புறலாம்.

"பூமருவும் கங்கை முதல்
புனிதமாம் பெருந்தீர்த்தம்
மாமகந்தான் ஆடுதற்கு
வந்து வழிபடும் கோயில்"

என்று சேக்கிழார் பெருமான் மகாமகத்தையும் குடமூக்கிலுள்ள கோயிலையும் போற்றிப் புகழ்ந்து பாராட்டியுள்ளார். திருஞானசம்பந்தப் பெருமானோ,

'குரவிரி சோலை சூழ்ந்த குழகன்
குடமூக்கு'

"கூத்தரவங்கள் ஓவாக் குழகன்
குடமூக்கு"

"பாடலுடையான் குடமூக்கு"

"கொடிநெடு மாடமோங்கும் குழகன்
குடமூக்கு"

"குலைமலி தண்பலவின் பழம்வீழ்
குடமூக்கு"

என்றெல்லாம் தம் திருக்குடமூக்குப் பதிகத்தில் குடமூக்கின் வளத்தையும் நலத்தையும் பாராட்டுவதோடு இறைவன் மெய்ப்புகழைத் தம் பாடல்களில் பஞ்சமப் பண்ணால் பாடியுள்ளார். இங்கே கும்பகோணம் குடமூக்கு எனவே வழங்கப்பட்டிருக்கிறது.

தெய்வ மணம் கமழ நம் சிந்தையில் வீற்றிருக்கும் திருநாவுக்கரசராம் அப்பர் பெருமான்,

"கோவணத்துடையான் குடமூக்கு"
"கூத்தாடி உறையும் குடமூக்கு"

எனக் கும்பகோணத்தைக் குடமூக்கு எனவே பாடியுள்ளார். நவகன்னியரும் குடமூக்குத்தலத்துக்கு வந்து வரம் பல பெற்ற வரலாறுகள் அவர்தம் தேவாரப் பாடல்களிலே இடம் பெற்றுள்ளன.

விருத்தம் என்னும் ஓண்பாவில் உயர்கம்பனைப் போன்று பிற்காலத்தே விருத்தமென்னும் ஓண்பாவில் புகழ்க் கொடி நாட்டிய மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம்பிள்ளை அவர்கள் திருக்குடந்தைப் புராணம் பாடியுள்ளார்கள்.

தேவாரக்காலத்தில் குடமூக்கு எனவும் பிற்காலத்தே கும்பகோணம் எனவும் பெயர்பெற்ற இந்நகர் சங்ககாலத்தே 'குடந்தை' எனவும் குடந்தை வாயில் எனவும், குடவாயில் எனவும் வழங்கி வந்துள்ளதென்பதைக் கீழ்க்கண்ட சான்றுகளால் உணரலாம்.

குடவாயிற் கீரத்தனார்
குடவாயிற் கீரனக்கன்

போன்ற சங்ககாலப்புலவர்களின் பெயர்கள் அந்நகரைக் குடந்தை எனவே குறிப்பிடுவதாகக் கருதலாம். பண்டைக் காலத்தே ஊர்ப் பெயரோடு சான்றோர் பெயரைச் சார்த்திக் கூறல் மரபாகும்.

"கொற்றச் சோழர் குடந்தை வைத்த
நாடுதரு நிதியினுஞ் செறிய
அருங்கடிப் படுக்குவள்" (அகம்; 60)

சோழர் தம் கருவூலம் இங்கு இருந்ததைக் கூறுகிறது இவ்வடிகள். இதனால் சங்க காலத்திலேயே குடந்தை என்னும் இந்நகரம் புகார் போல உறையூர் போலத் தலைநகராக இருந்திருக்கலாமோ எனக் கருத இடமுண்டு.

"தண்குட வாயிலன்னோள்"
(அகம்; 44)

இந்நகரம் அழகும் பொலிவும் மிக்கது என்பதை இத்தொடர் உணர்த்துவதை அறியலாம்.

சங்க காலத்தில் கண்ணழகு பெற்ற பெண்ணின் நல்லாளுக்கு உவமையாக அமைந்த குடந்தை, கருவூலம் அமைந்திருந்த தலைநகராகக் காட்சியளித்த குடந்தை - குடமூக்கு எனப் பெயர்பெற்றது எப்போது?

"குடமூக்கே! முடமூக்கே!

என அப்பராலும் ஆளுடைய பிள்ளையாலும் பாடப் பெற்ற குடமூக்கு, கும்பகோணம் என மாறியது எப்போது?

சங்க இலக்கிய காலத்தே அம்மாநகரின் நிலையென்ன?

வரலாற்றுக் காலத்தில் அப்பெருநகரின் நிலையென்ன?

புராணக் காலத்தில் அந்தத் திருநகரின் நிலையென்ன? என்பனபோன்ற கருத்தாய்வு களைக் கல்வெட்டு, செப்பேடு ஆய்வாளர்களும் வரலாற்று அறிஞர்களும் இலக்கியப் பேரறிஞர்களும் கண்டு தெளிந்து நல்லுரை வழங்குவர் என நாம் எதிர் பார்ப்போமாக.

# 11 ஆண்டுகளில் மகாமகம்

புலவர் ப.வெ. நாகராசன்

மகாமகம் என்பது பொதுவாகப் பனிரெண்டு ஆண்டுகளுக்கு ஒருமுறை வர வேண்டியது. இந்த இருபதாம் நூற்றாண்டில் அவ்வாறு எட்டு மகாமகங்கள் வந்துள்ளன. அவை முறையே,

1) 6-3-1909 சனிக்கிழமை (கீலக மாசி 23)
2) 22-2-1921 செவ்வாய் (ரௌத்ரி மாசி 11)
3) 10-3-1933 வெள்ளி (ஆங்கீரஸ மாசி 27)
4) 26-2-1945 திங்கள் (தாரண மாசி 15)
5) 25-2-1956 (மன்மத மாசி 13)
6) 14-2-1968 புதன் (பிலவங்க மாசி 2)
7) 1-3-1980 சனி (சித்தார்த்தி மாசி 18)
8) 18-2-1992 செவ்வாய் (பிரஜோத்பத்தி மாசி 6) என்னும் தேதிகளில் வந்தன.

இவற்றுள் நான்காவது மகாமகம் 1945-ஆம் ஆண்டும் ஐந்தாவது 1956-ஆம் ஆண்டும் - அதாவது பதினோராவது மகாமகம் வந்துவிட்டது. இது எப்படி?

## மகாமகத்தைத் தீர்மானிக்கும் முறை

சூரியன் கும்ப ராசியிலும் (தமிழ் மாசி மாதம்) குரு சிங்க இராசியிலும் இருக்கும்போது வருகின்ற மக நட்சத்திர நாள் மகாமகம் ஆகும். மாசி மாதம் மக நட்சத்திரம் எனவே சந்திரன் சிங்கத்தில் இருப்பதும் அந்த இராசி சூரியன் இருக்கும் கும்பத்திற்கு ஏழாவது இராசி ஆதலால் அந்நாள் பௌர்ணமியாதலும் தானே பெறப்படும். சுருக்கமாக மாசி மாதத்தில் எப்போது சிங்க ராசியில் குரு சந்த்ரயோகம் ஏற்படுகிறதோ அப்போது மகாமகம் வருகிறது எனலாம்.

## தொடர்புடைய கோள்களின் இயக்கம்

சூரியன் பொதுவாக ஒரு ராசியில் ஒரு மாதம் இருக்கும்; சந்திரன் ஒரு இராசியில் இருப்பது சற்றேறக் குறைய இரண்டேகால் நாள் (54மணி நேரம்) ஆகும்; வியாழன் எனப்படும் குரு பொதுவாகஒருஇராசியில் ஒரு வருடம் இருக்கும். இது மிகத் துல்லியமான கணக்கு அல்ல; மாறுபடும். எனினும் தோராயமாகச் சரியானது.

## 1945-1957 க்கு இடையில் குருவின் இயக்கம்

1945 மாசியில் வந்த மகாமகம் அடுத்து 1957 மாசியில் தான் பொதுவாக எதிர் பார்க்கப்படும். ஆனால் 1957 மாசி மாதத்தில் குரு சிம்ம ராசியை விட்டுவிட்டு அடுத்ததாகிய கன்னிக்கு வந்துவிட்டது. 15-2-1956-இல் சிம்ம இராசிக்கு வந்த குரு அந்த இராசியில் ஒரு முழுவருடம் இருக்காமல் 28-10-56இலேயே (அதாவது ஐப்பசி 12-ஆம் தேதியே) அடுத்த இராசி யாகிய கன்னி இராசிக்குப் போய்விட்டது. இவ்வாறு வருவதை வானநூலார் அதிசாரம் (Accelerated motion of a planet from one sign to the next one) என்பர்.

இதனால் 1956 மாசியிலேயே குருவும் சந்திரனும் சிங்க ராசியில் கூடிவிட்டனர். எனவே அந்த ஆண்டே - பதினோரு ஆண்டுகளே இடைவெளி ஆகியிருந்த போதிலும் - மகாமகம் ஏற்பட்டுவிட்டது.



# குடந்தைக் கீழ்க் கோட்டம்

## (நாகேசுவரர் கோயில்)

அமரர் எஸ் . ஆர். பாலசுப்பிரமணியன்

காஞ்சிபுரத்தையும் உத்தரமேரூரையும் போலவே தஞ்சை மாவட்டத்தைச் சார்ந்த கும்பகோணமும் கோயில்கள் நிறைந்த பேரூராகும். இதனைக் குடமூக்கு என்று வழங்குவர். ஆழ்வார்களின் பாசுரங்களில் இது திருக்குடந்தை என்றே வழங்கப்படுகிறது. சர்வேசுவரன் பிரமனிடம் அமிர்தம் நிரப்பப் பெற்ற குடம் ஒன்றை ஒப்படைத்தான். படைத்தற் றொழிலுக்கு அடிப்படையாக உதவிய அக் குடத்தைப் பிரமன் மேருமலையில் பத்திரமாக வைத்திருந்தான். பெரிய பிரளயத்தின் போது அக்குடம் மிதந்து வெளியே வரலாயிற்று. வெள்ளம் வடிந்தபோது அக் குடம் திருக்குடந்தைக்கருகில் வந்து தங்கிவிட்டது. சிவபெருமான் குடத்தின் மீது அம்பு எய்யவே, அமிர்தம் வெளியே பெருகி வரலாயிற்று. பெருகி வெளிப்பட்ட அமிர்தத்திலிருந்து கும்பேசுவரர் தோன்றினார் என்று தலபுராணம் கூறுகிறது. கும்பேசுவரர் கோயிலே இங்குள்ள மிகப் பழங் கோயிலாகும். அமிர்த குடத்தின் நினைவால் இவ்வூர் திருக்குடமூக்கு என்று வழங்கப்படுவதாயிற்று.

கும்பேசுவரர் கோயிலுக்குக் கிழக்கில் அமைந்ததும் நாகராசனால் வழிபடப்பட்ட இறைவனை உடையதுமாகிய பழையகோயி லொன்று 'திருக்கீழ்க்கோட்டம்' எனவும் 'நாகேசுவரர் கோயில்' எனவும் வழங்கப்படுகிறது. பொன்னியாற்றின் நீர்வளம் பெற்ற குடந்தையின் கீழ்க் கோட்டத்திலமர்ந்த கூத்தனாரான நாகேசு வரருடைய பெருமையைத் திருநாவுக்கரசர் தம்முடைய தேவாரத் திருப்பதியங்களில் பாடியுள்ளார்.

இக் குடந்தையிலும் இதன் அருகிலும் மூன்று பெரும் போர்கள் நிகழ்ந்தன. தெள்ளாறெறிந்த நந்திவர்மன் குடமூக்கில் பாண்டியனிடம் தோற்றான். ஆனால் அவன் பாண்டியனை மீண்டும் குடந்தையின் அருகில் ஓடும் அரிசிலாற்றங்கரையிலும், குடந்தைக்குச் சில கல் தொலைவிலுள்ள திருப்புறம்பியம் (திருப்புறம்பயம்) என்னும் ஊரிலும் முறியடித்தான் என்று அறிகிறோம்.

இக் கோயிலிலுள்ள அம்மன் ஆலயத்தில் பாண்டிய மாறஞ்சடையனுடைய 8ஆம் ஆண்டுக் கல்வெட்டு காணப்படுகிறது. இம் மாறஞ்சடையன் என்ற பெயர் பாண்டிய வரகுணனையோ, பராந்தகன் நெடுஞ்சடை யனையோ குறிப்பதாகலாம். அது திருக்குடமூக்கிலுள்ள திருக்கீழ்க்கோட்டத்துப் பட்டாரருக்கு அப் பாண்டிய மன்னன் இரண்டு விளக்குகள் எரிப்பதற்காக 100 காசும், பாலுக்காக 138 பசுக்களும் நன்கொடை வழங்கிய செய்தியைக் குறிப்பிடுகிறது. எனவே, இக் கல்வெட்டு அம்மன் கோயிலைச் சார்ந்ததன்று.

பழைய இறைவன் கோயில் கல்வெட்டான இது அக்கோயில் புதுப்பிக்கப்பட்ட காலத்தில் பிற்பட்ட அம்மன் கோயிலில் மீண்டும் இணைக்கப் பட்டது போலும். இக் கோயிலில் அடைமொழிகள் இல்லாத பரகேசரிக் கல்வெட்டுகள் சிலவற்றையும், இராசகேசரிக் கல்வெட்டுகள் சிலவற்றையும் காணலாம். அவற்றுள் இராசகேசரி வர்மனுடைய 15ஆம் ஆண்டுக் கல்வெட்டொன்று முதல் ஆதித்தன் காலத்தது ஆகலாம். அது கலியன் மாணிக்கம் என்பான் கோயிலுக்கு ஆடுகள் வழங்கிய செய்தியையும், கோயிலுக்கு இரு குடமும், கடாரம் ஒன்றும் நன்கொடை யளித்த செய்தியையும் குறிப்பிடுகிறது.

முதற் பராந்தகனுடைய 27ஆம் ஆண்டிலிருந்து 40ஆம் ஆண்டு வரையில் சில கல்வெட்டுகள் உள்ளன. பரகேசரி வர்மன் என்ற பொதுவான கல்வெட்டும் முதற் பராந்தகன் காலத்ததாகலாம். இவை பெரும்பாலும் இக் கோயிலுக்கு விளக்கு எரிப்பதற்காக விடப்பட்ட நிவந்தங்களைப் பற்றியே அமைந்துள்ளன. தற்போது கோயிலின் வடகிழக்கு மூலையில் அமைந்திருக்கும் சூரியதேவருக்கு விளக்கு எரிக்கவும் சிதாரி புகைக்கவும் நிவந்தமாக விடப்பட்ட நிலக்கொடை ஒன்று இம் மன்னனுடைய 40ஆம் ஆண்டுக் கல்வெட்டில் குறிக்கப் பட்டுள்ளது. பராந்தகன் காலத்தது என்று உறுதியாக வரையறுக்கத்தக்க வகையில் அமைந்துள்ள இச் சூரியன் சிலை 9 ஆம் நூற்றாண்டைச் சார்ந்த மிக அழகிய சிலைகளுள் ஒன்றாகும்.



கண்டராதித்தனுக்கு உரியனவாகக் குறிப்பிடத்தக்க இராசகேசரிக் கல்வெட்டுகள் இரண்டு உள்ளன. முதற் கல்வெட்டு தஞ்சாவூர் வாசியான வீரசோழத் தெரிஞ்ச கைக்கோளரில் ஒருவர் திருவிளக்குக்கு வழங்கிய நன்கொடையைக் குறிப்பிடுகிறது. வீரசோழன் என்பது முதற் பராந்தகனின் விருதுப் பெயராகும்.

அடுத்த கல்வெட்டு பாண்டியப் படையின் செலவினங்களுக்காகத் திருக் குடமூக்குச் சபையாருக்கு 3000 கழஞ்சுப் பொன்னை மதுரைகொண்ட உடையாரான முதற் பராந்தகன் தண்டம் விதித்த செய்தியையும், உள்ளூர்ச் சபையார் அரிசிலாற்றில் தங்களுக்குச் சொந்தமாக இருந்த நிலங்கள் சிலவற்றைத் திருக்கீழ்க்கோட்டத்துப் பரமசுவாமியிடம் 500 கழஞ்சுப் பொன்னுக்கு விற்றுத் தண்டத்தின் ஒரு பகுதியைக் கட்டின செய்தியையும் குறிப்பிடுகிறது. முதற் பராந்தகன் முடிசூடிய காலத்தில் இவ்வூர்ச் சபையாரிடம் அறச் செயல்கள் செய்வதற்கு அபிஷேக தட்சிணையாக வழங்கிய நிலத்தின் ஒரு பகுதியே விற்கப்பட்டது என்பதும் இக் கல்வெட்டால் அறியப்படுகிறது.

பாண்டியன் முடித்தலைகொண்ட பரகேசரியான இரண்டாம் ஆதித்தனுடைய கல்வெட்டுகளில் ஆறு இங்குக் காணப் படுகிறது. 3ஆம் ஆண்டுக் கல்வெட்டொன்று திருக்கீழ்க் கோட்டத்துப் பெருமானடிகள் திருக்கோயிலில் ஐந்து சிவ யோகிகளுக்கும், வேதங்களில் வல்ல அறிஞர்கள் 20 பேர்களுக்கும் உணவிடுவதற் காகக் கோயில் மாவலி என்ற பராந்தக மூவேந்த வேளானிடம் திருக்குடந்தைச் சபையினர் நிலம் ஒன்றை விட்ட விவரத்தை விளம்புகிறது. அதே ஆண்டில் அதே பராந்தக மூவேந்த வேளான் திருக்குடமூக்கு ஊர்ச் சபையாரிடம் நிலம் ஒன்றை வாங்கிப் 'பிரபாகரருடைய மீமாம்சைத்' தத்துவத்தைச் சொற்பொழிவு செய்துவந்த ஆசிரியர் ஒருவருக்குப் பட்டவிருத்தியாக வழங்கினான். முதற் பராந்தகனுடைய மகனாரும் தக்கோலத்தில் இறந்தாருமான இராசாதித்தரான ஆனைமேல் துஞ்சிய தேவரின் தாயாரான உடைய பிராட்டியார் கிழான் அடிகளின் பணிப்பெண் ஒருத்தி திருக்கீழ்க்கோட்டத்துப் பரமேசுவரருக்கு விளக்கு ஒன்றை நன்கொடையாக வழங்கிய செய்தியை

நான்காம் ஆண்டுக் கல்வெட் டொன்று குறிப்பிடுகிறது. இதே பணிப்பெண் இதே ஆண்டில் 50 அந்தணர்களுக்கு உணவிடுவதற்காக நன்கொடையொன்று வழங்கியுள்ளாள். தஞ்சாவூர்ப் பழைய வேளத்தைச் சார்ந்த பணிமகள் ஒருத்தி ஒரு சிவயோகிக்கு உணவு இடுவதற்காகத் திருக்குடந்தைச் சபை யாரிடமிருந்து 85 கழஞ்சுப் பொன் கொடுத்து விலைக்கு வாங்கிய நிலத்தை நிவந்தமாக விட்ட செய்தியும் இரண்டாம் ஆதித்தன் காலத்துக் கல்வெட்டொன்றால் உணரப்படுகிறது.

உத்தமசோழனுடைய 4, 8, 13 ஆகிய ஆண்டுகளைச் சார்ந்த கல்வெட்டுகளும் இங்குக் காணப்படுகின்றன. முதல் இரண்டு கல்வெட்டுகளும் விளக்குகளுக்காக வைக்கப்பட்ட நன்கொடைகளைக் குறிப்பன ஆகும். 13ஆம் ஆண்டுக் கல்வெட்டு உத்தம சோழருடைய நம்பிராட்டியாரான வீரநாராயணியார் கோயிலுக்குப் பூமாலைகள் அமைத்துத் தருவதற்கு வைத்த நிலக்கொடை பற்றிக் குறிப்பிடுகிறது.

முதல் இராசராசனுடையதாகக் கருதப்படும் இராசகேசரியின் 5ஆம் ஆண்டுக் கல்வெட்டொன்றில் வீரசோழத் தெரிஞ்ச கைக்கோளர் அங்கத்தினனான தேவன் குப்பன் என்பான் தேவருக்கு 'வெள்ளித் திருமேனி' யொன்று அமைக்கச் செய்து, பாண்டியன் முடித்தலைகொண்ட பரகேசரியான இரண்டாம் ஆதித்தன் காலத்தில் தான், நன்கொடையாக அளித்திருந்த 70 ஈழக்காசின் வட்டியை கொண்டு இறைவனின் வெள்ளித் திருமேனிக்கு நாள்தோறும் மும்முறை நிவேதனம் வழங்க ஏற்பாடு செய்தான் என்ற செய்தி காணப்படுகிறது.

இக் கோயில் ஸ்ரீவிமானத்திலுள்ள செல்வப்பிரானுக்கு நிவேதனம் வழங்குவதற்கு உள்ளூர்ச் சபையாரால் நிலம் ஒன்று நிவந்தமாக விடப்பட்ட செய்தி முதல் இராசராசனின் 6ஆம் ஆண்டுக் கல்வெட்டொன்றால் அறியப்படுகிறது. இதனால் விமான தேவதைகளுக்கும் பூசனைகள் நிகழ்ந்த செய்தி உணரப்படும். எட்டாம் ஆண்டுக் கல்வெட்டொன்று உற்சவமூர்த்தியான சந்திரசேகர தேவருக்கும் பூசனை நிவேதனங்கள் முறையாக இருந்துவந்த செய்தியை வெளியிடுகிறது.

சூரியபகவான் இக் கோயிலில் எழுந்தருளியிருக்கும் இறைவனை வழிபட்டு விசுவகர்மாவின் சாபத்தால் தாம் இழந்த ஒளியை மீண்டும் பெற்றார் என்று தலபுராணம் கூறும். கதிரவன் பூமத்திய ரேகைக்கு நேராக இருக்கும் நாட்களில் காலைக் கதிரவனின் கிரணங்கள் இக்கோயில் இறைவன் திருமேனியில் படிகின்றன. எனவே, இதற்குப் பாஸ்கர க்ஷேத்திரம் என்பதும் பெயர். இக் கோயிலின் தலவிருட்சம் வில்வம். எனவே இது வில்வவனம் (வில்வாரண்யம்) எனவும் வழங்கப்படுகிறது. ஆதிசேடன் இங்குள்ள இறைவனை வழிபட்டு அவன் அருளால் இப் பூமியைத் தாங்கும் ஆற்றல் பெற்றானாதலின் இது நாகேசுவரர் கோயில் எனவும் வழங்கப்படுகிறது.

இது இருதளக் கற்றளி. இதன் சிகரம் வட்டமானது. கருவறை சதுரமானது. அதன் பக்கஅளவு 20 1/2 அடி. அதன் முப்புறங்களிலும் தேவகோஷ்டங்கள் உள. தெற்கில் தட்சிணா மூர்த்தியும் மேற்கில் அர்த்தநாரீசுவரரும், வடக்கில் பிரமனும், தேவகோஷ்டச் சிலைகளாகக் காட்சி யளிக்கின்றனர். அர்த்தமண்டப தேவ கோஷ்டங்களுக்கிடையே சிலைகள் நின்ற வடிவில் கண்கவர் வனப்பினவாகக் காட்சி யளிக்கின்றன. கருவறை அடித்தளத்தின் வெளிப்புறத்தில் காணப்படும் சிற்றுருவச் சிலைகளும் (panels of miniature sculptures) சிற்பக் கலையின் உயரிய நிலைக்கு எடுத்துக்காட்டாக உள்ளன.

அரைத்தூண்கள் கும்பங்களும் குழைவுகள் கொண்ட போதிகைகளும் உடையனவாகக் காணப்படுகின்றன. அவற்றின் இடையிடையே கொடிக்கருக்குகளைக் காணலாம்.

இது முற்பட்ட சோழர் காலத்துச் சிறந்த கோயில்களில் ஒன்றாகும். இதன் அமைப்பும் சிற்ப நுணுக்கங்களும் கலைக்கண்கொண்டு நோக்குவார்க்குத் தெவிட்டாத பெருவிருந்தாகும். இதனைப் பிற்காலத்தில் திருப்பணி செய்தவர்கள் கலைநுணுக்க உணர்வின்றிச் சிற்பங்களுக்குச் சாயம் பூசி வனப்பறச் செய்துவிட்ட செய்தி கலைஞர்கள் உள்ளத்தை நைவிப்பதாகும்.

– நன்றி – "முற்காலச்சோழர் கலையும் சிற்பங்களும்."

# இரகுநாதன் எடுத்த இராமன் கோயில்

## (குடந்தை இராமசாமி திருக்கோயில்)

முனைவர் இரா. நாகசாமி



படபடப்புடன் நின்ற தூதன் தன் மன்னனை நோக்கினான். வயிரம் பாய்ந்த சரீரம். வலிமை மிகுந்த தோள்கள். அகன்ற மார்பு. திண்மை மிகுந்த கால்கள். எதையும் எளிதில் செய்து முடிக்க முடியும் என்னும் உறுதியைப் பிரதிபலிக்கும் முகம். கரத்தில் தாங்கிய அந்த நீண்டவாள், அவன் சிறுவனாக இருக்கும்போதே போர்க் களங்களில் சுழன்று வெற்றி வாகை வாங்கித்தந்த வீரவாள். தன் முன் நிற்பவரின் உள்ளத்து உணர்ச்சியையும் உடன் அறியும் ஆற்றல் வாய்ந்த கண்கள். சமநிலையில் நின்று அறத்தை நிலை நிறுத்துவதே தம் பணி எனத் தோன்றும் அவற்றின் ஒளி.

தன் மன்னன் தஞ்சை ரகுநாதன் பிறந்ததிலிருந்து இப்பொழுது பெரும் வீரனாக நிற்பதுவரை உடனிருந்து கண்டவன் அத் தூதுவன். அவன் பிறந்தபோது அவன் தந்தை அச்சுதப்பன் கூறியது தூதுவன் காதில் இன்னும் ஒலித்துக் கொண்டிருந்தது.

'நான் பிறந்து என் பெற்றோர்களுக்கு எந்தப் புகழ் கொடுத்தேனோ அறியேன். ஆனால் இவன் பிறந்ததாலேயே நான் பெரும் புகழ் பெற்றேன்' என்று அச்சுதப்பன் கூறியது முற்றிலும் பொருந்தும்.

அச்சுதப்பன் அன்று தன்குழந்தையை விஜயரகுநாதன் என்று அன்போடு அழைத்து அளவளாவியது தூதன் கண்முன் தோன்றியது.

ரகுநாதன் சிறு குழந்தை. அப்பொழுதே அவனுக்குக் கல்வி கற்பிக்கத் தொடங்கினான் அச்சுதப்பன், 'இவன் சிறு குழந்தை ஆயிற்றே, இன்னும் இரண்டு ஆண்டுகளாவது செல்லட்டுமே!' என்றாள் அவன் தாய். அவளுக்கு அவ்வளவு விரைவில் தன் மகனைக் 'கல்விக்கு அனுப்ப விருப்பமில்லைதான். ஆனால் அச்சுதப்பன் தன் மகனின் சுறுசுறுப்பையும் புத்திக் கூர்மையையும் கண்டு தன் அமைச்சர் கோவிந்த தீக்ஷிதரிடம் கல்வி கற்க அனுப்பினான்.

ரத்தினங்கள் பதித்த பலகையில் அக் குழந்தை முதலில் எழுத ஆரம்பித்தது இப்பொழுதுதான் நடந்தது போல் தோன்றியது தூதனுக்கு. தன் மன்னனின் வளர்ச்சியில் ஆழ்ந்திருந்த தூதனுக்கு இப்பொழுது தோன்றியுள்ள நெருக்கடி ஒரு பெரும் மலை எனத் தோன்றியது.

### அந்த நெருக்கடி

ரகுநாதன் ஆழ்ந்த சிந்தனையில் முன்னும்

பின்னும் நடந்து கொண்டிருந்தான். அவன் எடுத்துவைக்கும் ஒவ்வொரு அடியும் அவன் மனதில் தோன்றும் எண்ண அலைகளாகத் தோற்றமளித்தன.

"மேலும் என்ன நடந்தது?" என்றான் மன்னன். தூதன் சொல்லத் தொடங்கினான்.

வேங்கடபதி மகாராயர் தன் கருத்துப்படிதான் நடப்பார் என்பதில் ஜக்கராயனுக்கு ஐயமே இல்லை. அவன் தங்கை வேங்கடபதியின் தேவி. அவள் அழகிலும் பேச்சிலும் சிரிப்பிலும் வேங்கடபதி எப்பொழுதும் மெய் மறந்து கிடப்பார். அவள் அருகே வந்து நின்றால் போதும், அவருக்கு வேறு எதுவும் உலகில் தேவை இல்லை. அவள் இன்றி ஒரு கணம்கூட அவரால் இருக்க முடியாது. அப் பெண்ணுக்குப் பிறந்த குழந்தைதான் அந்த மகவு' என்று கூறி, அம் மகனுக்கே வேங்கட பதி பட்டம் கட்ட வேண்டும் என்பது ஜக்கராயனின் விருப்பம். தன் தங்கைக்கு இதைத் தெளிவாகக் கூறியிருந்தான்.

அவள் மட்டும் என்ன சாதாரண மானவளா? ஏகசக்ராதிபதியான வேங்கடபதி யைத் தன் கடைக்கண்ணாலேயே வென்று விடும் ஆற்றல் படைத்தவள். அரசனிடத்தில் அக்குழந்தையைக் காட்டி 'இதோ என் வயிற்றில் உதித்த உங்கள் மகன். இவன் தானே பட்டத்துக் குரியவன்!' என்றாள்.

## அறமா, இன்பமா?

வேங்கடபதி குழந்தையைப் பார்த்தார். அப்பெண்ணின் முகத்தைப் பார்த்தார். அவளது அழகும் சிரிப்பும். . . . ! கண்ணை மூடிக் கொண்டார். பரதனுக்கு முடி சூட்ட வேண்டும் என்று கேட்ட கேகயன் மகள் போல், தான்இருப்பதாக நினைத்துக் கொண்டாள் அத் தேவி. வேங்கடபதியும் தசரதன் நிலையில்தான் இருந்தார். ஆவி போய் விடுமோ என்ற நிலைதான்.

அவளைப் பொறுத்த மட்டில் "உன் மகனுக்குத்தான் பட்டம்" என்று கூறி விட்டால் போதும்; துடித்துக் கொண்டிருந்தாள் அந்தப் பதிலுக்காக. ஆனால் அரசன் பேசவில்லை.



ஸ்ரீரங்கனையும் அமைச்சர்களையும் பிரதானிகளையும் கூட்டி வா என்றான் அரசன். அவன் குரலிலே ஒரு நடுக்கம். அனைவரும் வந்து நின்றனர். அரசன் கட்டிலில் படுத்திருந்தான். தன் அருகிலே அப்பெண்ணை அமர்த்திக் கொண்டான். அவள் மடியில் அக் குழந்தையும் இருந்தது. அவளை அன்போடு தடவிக் கொடுத்தான்.

அரசன் அருகில் நின்றுகொண்டிருந்த ஜக்கராயனின் முகம் மலர்ந்தது. அருகில் நின்றவர்கள் அறம் தழைக்குமா, இன்பம் தழைக்குமா என்று எண்ண வேண்டிய தேவையே இல்லை. அரசன் அருகில் அப் பெண் அமர்ந்திருப்பதே அவன் இன்பத்தில் நிறைந்துள்ளான் என்பது போல் இருந்தது. ஸ்ரீரங்கனை அருகில் அழைத்தான். ஒரு விநாடியில் முடிந்து விட்டது. யாரும் எதிர்பார்க்கவில்லை. தனது தலையிலிருந்த மணி மகுடத்தை ஸ்ரீரங்கன் தலையில் சூட்டிவிட்டான். அடுத்த கணம் வேங்கடபதி அரசன் இறந்தே விட்டான். அத் தேவியின் குழந்தைக்கு முடி கிட்ட வில்லை. ஸ்ரீரங்கனுக்கு முடி சூட்டி இறந்து விட்டான் அரசன்.

ஜக்கராயனின் கண்கள் நெருப்பைக் கக்கின. தன் திட்டம் சூழ்ச்சியெல்லாம் ஒரு கணத்தில் சிதறியதைக்கண்டபின் தன் தங்கையையும் குழந்தையையும் இழுத்துக் கொண்டு வெளியேறினான் ஜக்கராயன். மற்ற பிரதானிகள் எல்லாம் ஆவி பிரிந்த அரசன் வேங்கடபதியின் முகத்தைப் பார்த்தனர். அறத்துக்கே முதலிடம் கொடுத்த அம் மன்னன் தர்மமகாராஜன் தான். அந்தப் பெரும் சாந்தியில் மூழ்கியிருப்பது போல் தோற்றமளித்து அவன் முகம்.

## வந்தது ஆபத்து

காலம் சுழன்றது. ஒரு சில மாதங்கள் ஓடிவிட்டன. அதற்கிடையில் ஜக்கராயன் தனது மறு திட்டத்தில் வெற்றி பெற்றுவிட்டான்.

பல பிரதானிகளையும் தன்பக்கம் இழுத்துக்கொண்டு ஸ்ரீரங்கனையும் அவனது





தேவியரையும், மக்களையும் சிறையில் தள்ளினான்.

தன் தங்கையின் குழந்தையையே அரசன் என முடி சூட்டினான். தானே உண்மையில் ஆட்சியாளனாகத் திகழ்ந்தான். பலர் அவன் பக்கம் சேர்ந்தனர். இன்னும் ஒருவன்தான் அவன் பக்கம் சேரவில்லை. அவன்தான் யாசம நாயக்கன். அவனையும் தன்பக்கம் சேர்த்துக் கொள்ள முயன்று கொண்டிருந்தான்.

அந்தச் சமயத்தில் சிறையில் இருந்த ஸ்ரீரங்கன் தப்பித்துச் செல்ல முயற்சிக்கிறான் என்ற செய்தி எட்டியது. சிறைக் கதவுகள் வலுவாகப் பூட்டப்பட்டன: காவல் அதிகரித்தது. காவலர் கண்ணிலிருந்து ஏதும் தப்ப முடியாது என்ற நிலை. மிக மிகத் தேவை என்பவையே அனுமதிக்கப்பட்டன. உணவு எடுத்துச் செல்பவர்கள், நீர் கொடுப்பவர்கள், துணி வெளுப்பவர்கள் இவர்கள்தாம் சிறைச் சாலைக்குள் செல்ல முடியும். அதுவும் ஓடவோ, சண்டையிடவோ முடியாத அளவு வயது முதிர்ந்தவர்களே அனுமதிக்கப்பட்டனர். துணி மூட்டையைத் தாங்கிச் செல்ல முடியாத அந்த வண்ணானையும் உணவு அளிப்பவர்களையும் பார்த்துக் காவலர்கள் நகையாடுவார்கள்.

அந்நிலையில் திடீரென ஜக்கராயன் ஒருநாள் சிறைச்சாலை முன் தோன்றினான். காவலர் கதிகலங்கினர். 'இது எவ்வாறு நடந்தது?' என்று சீறினான் ஜக்கராயன். 'இங்கு எதுவும் நடக்கவில்லையே' என்றனர் சிறைக் காவலர். 'நாள்தோறும் துணி வெளுக்க வரும் வண்ணான்கூட நான்கு நாட்களாக வரவில்லையே' என்றனர். 'மடையர்களே' என்றான் ஜக்கராயன்.

அடுத்த கணம், பதில் கூறிய காவலர் தலை தரையில் உருண்டது. 'வண்ணானின் மூட்டையில் கட்டி, ஸ்ரீரங்கனின் மகன் ராமனை கடத்திச்சென்று விட்டான் அந்த யாசமன். பளு தாங்க முடியாமல் குனிந்து தாழ்ந்து நடந்த அந்த வண்ணான்தான் துணி மூட்டையில் கடத்திச் சென்றுவிட்டபின் நீங்கள் இங்கு காவல் காத்து நிற்கிறீர்கள்!' என்று கத்திய ஜக்கராயனின் சொல்லில் தீப் பறந்தது.

## கொன்றே தீர்த்தான்

உள்ளே நுழைந்தான் ஜக்கராயன். மறுகணம் அங்கே அலறல் சத்தம்தான் கேட்டது. விஜயநகரச் சக்கரவர்த்தி ஸ்ரீரங்கராயர் சிறையில் துண்டு துண்டாகக் கிடந்தார். அவர் மட்டுமல்ல. அவர் குடும்பமே துண்டுதுண்டாக இரத்த வெள்ளத்தில் மிதந்தது. 'இனி அந்த ஒரு சிறுவனால் என்ன முடியும் என்பதையும் பார்த்துவிடுகிறேன்' என்று உறுமிக் கொண்டே ஜக்கராயன் சிறையிலிருந்து வெளியே போந்தான்.

இந் நிகழ்ச்சிகளைத் தூதன் ரகுநாதனிடம் கூறும்போது அவன் முக்மும் கண்களும், தோள்களும் 'தான் அங்கு இல்லையே' என்று கூறத் துடிப்பவைபோல் காட்சியளித்தன.

தூதன் தொடர்ந்தான். ஜக்கராயனின் கொடுமையையும், அவன் பக்கம் சேர்ந்திருந்த பிரதானிகளின் எண்ணிக்கையையும் படை பலத்தையும் எதிர்த்து நிற்க எவரால் முடியும் என்ற நிலையிலும் நன்றி உள்ளத்தோடு, அஞ்சா நெஞ்சத்தோடு எழுந்தான் யாசமநாயக்கன். 'ஸ்ரீரங்கராயனின் மகன் சிறுவன் ராமனே விஜயநகரப் பேரரசன்' என்று கூறி, ஒரு சிறு படையுடன் போர் முரசு கொட்டினான். இப்பொழுது அங்கே பெரும் போர் நடந்து கொண்டிருக்கிறது. யார் வெற்றி பெறுவர் என்று சொல்ல இயலவில்லை. ஆனால் ஜக்கராயனுக்கு உதவியாக செஞ்சி நாயக்கனும், மதுரை நாயக்கனும் நிற்பார்கள் போல் தோன்றுகிறது" என்றான் தூதன். அதைக்கூறி முடிக்கும் முன்னர் மற்றொரு தூதன் ரகுநாதன்முன் ஓடி வந்தான்.

"அரசே, சோழகன் நமது நாட்டில் புகுந்து கொள்ளையிடுகிறான்" என்றான்.

## முதலைக்கு இட்ட ஆணை

'யார் இந்தச் சோழகன்?' கொள்ளிட ஆறு கடலில் சேருமிடத்து இருந்த தேவி கோட்டையின் தலைவனான அவன் கொடுமையின் அவதாரம்!



அவன் தனது ஆற்றில் பல முதலைகளை வளர்த்து விட்டிருக்கிறான். தன் நாட்டு மக்களைக் கடிக்கக்கூடாது. பிற நாட்டு மக்களையே கடித்துக் குதறவேண்டும் என்பது அவற்றிற்கு அவன் இட்ட கட்டளை. அவற்றில் ஒரு முதலை அவன் நாட்டு ஆள் ஒருவனைக் கடித்துவிட்டதாம். ஆதலின் அதைச் சங்கிலியில் கட்டி வெளியே இழுத்து வந்து வருவோர் போவோர் எல்லாரும் அதைக் கல்லால் அடித்துக் கொல்வதை வேடிக்கை பார்த்தவன்.

'அக் கொடூரமானவன் இப்பொழுது நம் நாட்டு எல்லையில் புகுந்து நம் மக்களைக் கடத்திச் செல்கிறான். அவர்களைச் சாக்கில் கட்டி, பாறைக் கற்களைக் கொண்டு அடித்துக் குற்றுயிராக்கி முதலைகளுக்கு இரையாக்குகிறான்' என்று தூதன் சொல்லி முடிக்கவும் ரகுநாதன் பாய்ந்து வெளிப் போந்து வாயிலில் இருந்த குதிரையில் ஏறி உருவிய வாளுடன் தீப்பொறி பறக்கும் விழியுடன் தன் நாட்டு மக்களைக் காக்கத் தனியொருவனாகவே கிளம்பி விட்டான். அது கண்டு அவனது படைத் தலைவர்களும், படை வீரர்களும் பின் விரைந்தனர்.

வாணிகர்களாக வந்து சூழ்ச்சி செய்யத் தொடங்கிய போர்த்துகீசியர் சோழகனுக்கு உதவினர். கடுமையான போர். ரகுநாதன் தானே முன்னின்று போரை நடத்தினான். தேவிக் கோட்டை ரகுநாதனின் ஆற்றலுக்கு அடிபணிந்தது. சோழகன் உயிரோடு பிடிக்கப்பட்டான். ரகுநாதன் அவன் தலையைச் சிதைக்கவில்லை. சிறையில் தள்ளினான். ரகுநாதன் பெற்ற பெரும் வெற்றி அது.

அப்போர் அதோடு முடிந்து விடவில்லை. போர்த்துகீசியர்கள் யாழ்ப்பாணத்தைத் தங்களது இடமாகக் கொண்டு கடல்வழியில் தொல்லை கொடுக்கத் தொடங்கினர்.

## யாழ்ப்பாணத்தில் ஆபத்து

ரகுநாதன் தேவிகோட்டையிலிருந்து நேரே யாழ்ப்பாணத்துக்குப் படை நடத்திச் சென்றான். அவனது கலங்கள் அவனது படைகளை ஏற்றிக்கொண்டு கடல்மிசைச் சென்றன. ரகுநாதனே இப்படையையும் நடத்திச் சென்றான்.

போர்த்துகீசியரின் கடல்வலி உச்ச நிலையிலிருந்த காலம் அது. ரகுநாதனின் நெஞ்சின் உரமும், வீரமும் அவனுக்கு உறுதுணையாய் நின்றன. பல இடர்களுக்குமிடையில் அவனது கடற்படை முன்னேறியது. போர்த்துகீசியர் படை சிதறி ஓடியது. வலிமை மிகுந்த மாற்றான் படையை, நவீன சாதனங்கள் கொண்டு போரிட்ட மேலை நாட்டுப் படையைத் தூளாக்கி வெற்றி கொண்ட தமிழ்ப் பேரரசன் ரகுநாதன்.

வெற்றிமாலை புனைந்து தமிழகம் திரும்பிய அம் மன்னனுக்குத் திடுக்கிடும் செய்தி ஒன்று காத்திருந்தது.

விஜயநகரப் பேரரசுக்காக நடக்கும் போர் மிகவும் பெரிதாகி நாட்டையே கலக்கிக் கொண்டிருந்தது. யாசம நாயக்கனுக்கும் ஜக்கராயனுக்கும் நடந்த போரில் யாசமன் கை சற்று ஓங்கியது. ஆதலின் ஜக்கராயன் தென்னாடு நோக்கி வந்தான். மதுரை, திருநெல்வேலி, செஞ்சி அரசர்கள் அனைவரும் ஜக்கராயனுடன் சேர்ந்து எண்ணற்கரிய பெரும் படையைத் திரட்டினர். திருச்சிராப் பள்ளியிலிருந்து அவர்கள் தங்களது போர் ஆயத்தங்களைச் செய்தனர்.

அவர்களை முறியடிக்க யாசமநாயக்கன் தென்னாடு வந்து கொண்டிருந்தான். தன்னுடன் ஸ்ரீரங்கன் மகன் சிறுவன் ராமனையும் அழைத்து வந்து கொண்டிருந்தான். யாசமனின் ஒரே புகலிடம் தஞ்சை நாயக்கன் ரகுநாதனே. இவனோடு இணைந்துவிட்டால் போரின் இறுதியைக் கண்டுவிடலாம். யாழ்ப் பாணத்தில் வெற்றி சூடி வருகிற ரகுநாதன் விஜயநகரத்தில் யார் முறைப்படி முடி சூட வேண்டுமோ அவர் பக்கம்தான் நிற்பான் என்பது யாசமனின் உறுதி.

## கல்லணை புரண்டது

ஜக்கராயனும், அவன் உடன் சேர்ந்த மற்றோரும் ஒரு சூழ்ச்சி செய்தனர். ரகுநாதன் படை யாசமன் படையோடு சேர முடியாமல்



தடுத்துவிடவேண்டும். பின்னர் இருவரையுமே தனித்தனியாகத் தங்கள் பெரும் படையால் வென்றுவிடலாம். இதற்கு ஒரு வழி காவிரியாற்றின் குறுக்கே உள்ள கல்லணையைத் தகர்த்தெறிந்தால் வெள்ளப் பெருக்கெடுத்தோடும்; இரு படையும் சேர இயலாது என்று சூழ்ச்சி செய்தனர். இதை எண்ணினார்களோ இல்லையோ அடுத்த நிமிடமே கல்லணை இடிக்கப்பட்டது. மடமடவென்று வெள்ளம் கரை புரண்டு ஓடியது.

இந்தச் செய்திதான் யாழ்ப் பாணத்திலிருந்து வெற்றியோடு திரும்பிய ரகுநாதனுக்குக் கிடைத்தது. ரகுநாதனின் கோபமும் கரை புரண்டது. அவன் ஒரு வீர சபதம் எடுத்தான். 'யார் காவிரியாற்று அணையை உடைத்தார்களோ அவர்களது தலையைக் கொண்டே மீண்டும் அவ்வணையைக் கட்டுவேன்' என்ற பயங்கரமான சபதம் செய்தான். ரகுநாதன் வெறும் பேச்சாளியல்ல; செய்தே விடுவான் என்பதும் தெரியும்.

ஜக்கராயனின் சூழ்ச்சி பலிக்கவில்லை. ரகுநாத நாயக்கன், யாசமனை ஆதரவோடு



அணைத்தான். ராமராயனுக்கு மூடி சூட்டாது நில்லேன் என்று அச் சிறுவனுக்குப் புகலிடம் அளித்தான். இரு படைகளையும் ஒன்று சேர்த்தான். தஞ்சையிலிருந்து கிளம்பிய படை திருக்காட்டுப்பள்ளி வழியாக முன்னேறியது. முன்னின்று நடத்திச் சென்றவன் ரகுநாத நாயக்கன். அவனது அமைச்சர் கோவிந்த தீக்ஷிதர் நாட்டுக் காரியங்களைக் கவனித்துக் கொண்டார். ரகுநாத நாயக்கன் தினந்தோறும் அமைச்சருக்குத் தனது படையின் முன்னேற்றம் குறித்து ஓலை அனுப்பினான், நாள் குறிப்புப் போல.

## தலைகள் உருண்டன

பெரும் வெள்ளமும் பெரும் வெள்ளமும் கலப்பதுபோலவும் பெருங்கடலும் பெருங்கடலும் கலப்பது போலவும், ஜக்கராயன் படையும் ரகுநாதன் படையும் திருச்சிக்கு அருகில் தொப்பூர் என்ற இடத்தில் மோதின. தமிழகமே அதுவரை கண்டிராத பெரும் போர் அது. பல்லாயிரக் கணக்கான வீரர்கள் மாண்டு மடிந்த போர்.

வெற்றிமங்கை யாரைத் தழுவுவாள் என்று அறிய இயலாத அந்த ரண களத்தில் ஜக்கராயனின் தலையைத் துண்டித்துத் தரையில் உருண்டோடச் செய்தான் விஜய ரகுநாதன். மதுரை,செஞ்சி, மற்ற அரசர்கள் எல்லாரும் திரும்பினால் நாமும் வீழ்வோம் என்று திரும்பிக்கூடப் பாராது ஓட்டம் எடுத்தனர். அறத்தின் முன்னர் அறமல்லாதது எப்படி ஓடும் என்பதற்கு அது எடுத்துக்காட்டாகத் திகழ்ந்தது.

## ராமனுக்குப் பட்டாபிசேகம்

யாசமனோடும் சிறுவன் ராமராய னோடும் கும்பகோணம் அடைந்த ரகுநாதன் ராமராயனுக்கு அங்குப் பட்டாபிசேகம் செய்து களித்தான். அந்த ராம பட்டாபிஷேகம் அறத்தின் மூர்த்திக்கு செய்த பட்டாபிஷேக மாகத் தோற்றமளித்தது. மானுடம் பெற்ற வெற்றி யேயாயினும் தெய்வத்தின் அருளால் பெற்ற வெற்றியே எனக் கருதினான் இரகுநாதன்.

## ராமகதை என்னும் அமுதம்

ரகுநாதனிடத்தில் ஒரு பண்பு உண்டு. அப் பண்பு அறத்தின்பாற் பட்டது. 'அறவழி



நிற்பதே குறிக்கோள்' என அவன் கருதியமைக்குக் காரணம் இந்தியப் பண்பின் உயிர்த் துடிப்பான இராமகாதை என்னும் அமுதத்தில் இவன் என்றும் திளைத்திருந்ததுதான்.

அயோத்தி அண்ணல், அறத்தின் மூர்த்தி இராமனது காதையைத் தினந்தோறும், ஏன் எப்பொழுதுமே கேட்டுக் கொண்டிருப்பதில் அவனுக்குப் பேரின்பம். இராம காதை எங்கெல்லாம் பேசப்படுகிறதோ, அங்கெல்லாம் உச்சி சேர்த்திய கரத்தனாகக் கண்ணீர் வெள்ளம் எனப் பெருக்கெடுத்து ஓட, பக்திப் பரவசத்தில் நிற்கும் அஞ்சனைக்குமரன் என அவன் திளைப்பான். "அநவரத ராமகாதாம்ருத சேவகன்" என்று தன்னைக் கூறிக்கொள்கிறான் ரகுநாதன்.

அன்று, அறம் வளர்த்த நம்பிக்கு பட்டாபிஷேகம் செய்ய அரும் துணை நின்றவன் அனுமன். இன்று விஜயநகர அரசன் இராமன் பட்டாபிஷேகத்திற்குக் காரணமாய்த் திகழ்ந்தவன் இவன். இந்த எண்ணம் இரகுநாதன் மனத்திலும் திகழ்ந்திருக்க வேண்டும்.

அதே இடத்தில் கும்பகோணத்தில் அயோத்தி இராமனுக்கு ஒரு பெருங்கோயில் எடுப்பித்தான் விஜய ரகுநாதன். அது இன்றும் அவன் பெற்ற வெற்றியின் மலராகத் திகழ்கிறது. அக் கோயிலினுள்ளே அண்ணல் இராமன் அறத்தை, பரம தத்துவத்தை எடுத்துரைக்கும் ஆசானாகத் திகழ்கிறான். ஆம்! கோதண்ட ராமனாக இல்லை; பட்டாபிஷேகம் புனைந்த இராமனாக இல்லை; இவை அனைத்தும் இறுதியில் அறத்தின் உருவகமே என்னும் தத்துவத்தை எடுத்துரைக்கும் பரப் பிரும்மமாகத் திகழ்கிறான்.

அவரையும் அவரது அருகில் அருள் பாலித்து அமர்ந்திருக்கும் மிதிலைச் செல்வியையும், விநயமே உருவமாக நிற்கும் இளவல் இலக்குவனையும், கொற்றக்குடை ஏந்தி நிற்கும் பரதனையும், வெண்கவரி வீசும் சத்ருக்னனையும் ஆயிரங்கண் கொண்டு காணினும் ஆற்றலவே என்பது உண்மை. அது மட்டுமா? இராகவனது கதையை எடுத்துரைக்க வேண்டுமெனின் அனுமன் இன்றேல் இயலுமோ?

அனுமனே ஓலைச் சுவடி கொண்டு எதிரில் அமர்ந்து வாசிப்பதோடன்றி, யாழ் இசைப்பவனாகவும் படைக்கப் பட்டுள்ள பாங்கை அநவரதமும் கண்டு களிக்கலாம். இவ் வருங்கோயிலில் பல பட்டாபிஷேகக் காட்சிகளைச் சிற்பங்களாகப் படைத்து மகிழ்ந்துள்ளார் இரகுநாதன். சுக்ரீவ பட்டாபிஷேகம், வீடண பட்டாபிஷேகம் எனப் பல உள்ளன.

தஞ்சை நாயக்க மன்னர்களிலேயே சிறந்த இந்த இர்குநாத நாயக்கன் இசையில் பெரும் ஈடுபாடு கொண்டவன். தானே இசை நூல்களை இயற்றியவன். இரகுநாதேந்திர வீணை என்ற ஒரு புது வீணையையே உண்டாக்கிக் களித்தவன். அவன் இசையில் கொண்ட வல்லமையை எல்லாம் பிரதிபலிக்கின்றன இராமசாமி கோயிற் சிற்பங்கள்.

சேர மன்னர்களில் செங்குட்டுவன் எவ்வாறோ, சோழர்களில் இராஜராஜப் பெருந்தகை எவ்வாறோ, பல்லவர்களில் இராஜசிம்மன் எவ்வாறோ, பாண்டியர்களில் பராந்தக நெடுஞ்சடையன் எவ்வாறோ, விஜயநகர அரசர்களில் கிருஷ்ணதேவராயன் எவ்வாறோ, மதுரை நாயக்கர்களிள் திருமலை நாயக்கர் எவ்வாறோ அவ்வாறு தஞ்சை நாயக்கர்களில் வானளாவும் புகழ் பெற்ற வீரனாகத் திகழ்ந்தவன் விஜய ரகுநாத நாயக்கன்.

கி.பி. 1600 முதல் 1630 வரையில் ஆண்ட அம் மன்னன் தஞ்சை மாவட்டத்தில் பல பெருங் கோயில்களுக்குச் செய்துள்ள கலைப் பணி ஈடு இணையற்றது. இவை யனைத்துக்கும் முடி சூட்டியதுபோல் திகழ்வது கும்பகோணம் ராமசாமி கோயில்.

இராமனுக்கு முடி சூட்டியபோது அனைத்து மக்களும் தங்களுக்கே முடி சூட்டப்படுவதாக நினைந்து மகிழ்ந்தனராம். அதுபோல் விஜய ரகுநாதன் தஞ்சை நாயக்கர்' கலைக்கே இங்கு முடி சூட்டியிருக்கிறான். அவ்வளவு சிறந்த மன்னன் இக் கோயிலில் தன் தேவிமார் சூழக் கரம் கூப்பி நிற்பது சிற்பமாக உள்ளது.

இக் கோயிலைப் பார்த்திருக்கிறீர்களா? இல்லையேல் இன்றே சென்று பாருங்கள். அங்கே அவ்வீரன் விஜய ரகுநாதனைப் பார்ப்பீர்கள். பண்பின் சிகரமாம் அறத்தின் நாயகனையும் பார்ப்பீர்கள்.

– நன்றி – கல்லும் சொல்லும்.




"சார்ங்கம் வளைய வலிக்கும் தடக்கைச் சதுரன்"

(நாச்சியார் திருமொழி 5_8)

"சங்கவண்ண மன்னமேனி சார்ங்க பாணியல்லையே"

(திருச்சந்த விருத்தம் 15)

ஆண்டாள் குறிப்பிடும் அத்தடக்கைச் சதுரன், பாம்பணையில் பள்ளிகொண்ட பெருமாளாகக் குடந்தையில் அருள் பாலிக்கின்றான். திருக்குடமூக்கு என்றும் பொற்றாமரைப் புட்கரணி என்றும் திருநாவுக்கரசு சுவாமிகள் குறிப்பிடும் கும்பேசுவரர் திருக்கோயில், பொற்றாமரைத் திருக்குளம் ஆகியவற்றிக்கு கிழக்காக அமைந்துள்ளதே சார்ங்கபாணி திருக்கோயிலாகும். கும்பகோணத்தில் உள்ள கோபுரங்களிலேயே மிக உயர்ந்த திருக்கோபுரத்தைப் பெற்றுத் திகழ்கின்றது. பெரியாழ்வார், ஆண்டாள், திருமழிசை யாழ்வார், திருமங்கை ஆழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார், நம்மாழ்வார் ஆகிய ஆழ்வார்கள் 51 பாசுரங்களை இத் திருக்கோயிலில் பாடியுள்ளனர்.



"குடந்தைக் கிடந்த எம்கோவே குருக்கத்திப் பூச்சூட்ட வாராய்", என்று பெரியாழ்வாரும், "குடந்தைக் கிடந்த குடமாடீ, நீலார் தண்ணந் துழாய்கொண்டு என் நெறிமென் குழல்மேல் சூட்டீரே" என்று ஆண்டாளும், "காவிரிக்கரைக் குடந்தையுள் கிடந்தவாறு எழுந்திருந்து பேசு

வாழி கேசனே" என்று திருமழிசையாரும், "தாராளன் தண்குடந்தை நகராளன்" என்று திருமங்கையாழ்வாரும், "ஆயிரவாய்ப் பாம்பணைமேல் சேர்ந்தாய் குடமூக்கின் கோயிலாக் கொண்டு" என்று பூதத்தாழ்வாரும், "குடந்தை வேங்கடம் நேர்ந்த என் சிந்தை நிறை விசும்பு", என பேயாழ்வாரும், "குடந்தைக் கிடந்த மாமாயா" என்று நம்மாழ்வாரும் குறிப்பிடும்



பாசுரவரிகளால் இவ்வூர் குடந்தை என்றும், குடமூக்கென்றும் கி. பி. 8ஆம் நூற்றாண்டில் குறிக்கப்பெற்றதை அறிகிறோம். மேலும் இத்திருக்கோயிலில் கிடந்த கோலத்தில்தான் மூலவராகப் பெருமான் அன்று முதல் இன்றுவரை அருள்பாலிக்கிறார் என்பதையும் அறிகிறோம்.

மூலவராக ஆராவமுதன் என்று திருநாமத்தோடு பள்ளிகொண்ட பெருமாள் இருக்க உற்சவர் செப்புத்திருமேனி வடிவில் நின்றகோலத்தில் இங்கு அருள்மழை பொழிகின்றார். அவரது கையில் நீங்காமல் இருப்பது சார்ங்கம் எனப்படும் விஷ்ணு தனுசு (வில்). இதனால் தான் இவர் சார்ங்கபாணி என அழைக்கப்பெறுகிறார். திருமகளும் புவிமகளும் உடனுறைய விள்ங்கும் இப்பெருமாளின் கருவறைக்குத் தென்புறம் தாயார் சன்னதி உள்ளது. தாயாரின் திருநாமம் கோமளவல்லி என்பதாகும்.

பள்ளிகொண்ட பெருமானின் கருவறை பிற்காலச் சோழர்கலையின் சிறப்புக் கருவூலமாகத் திகழ்கின்றது. இது ஒரு தேராகவே திகழ்கிறது. யானைகள் இழுக்க, தேர்க்கால்கள் சுழல, குடந்தையில் பவனி வரும் இரதமாக விளங்குகின்றது. கருவறையின் முகப்பில் அழகிய வேலைப்பாடமைந்த பலகணிகளும் தேவகோஷ்டங்களில் திருமாலின் பல்வேறு கோலங்களும் அழகுக்கு அழகு சேர்க்கின்றன.

கருவறை வாயில்கள் பக்கவாட்டில் எழில்மிகு படிகளோடு திகழ்கின்றன. அர்த்தமண்டபத்தின் அமைப்பும், அகலமான கருவறையும் சோழர்திறம் பேசுகின்றன. படம் விரித்த ஐந்தலை அரவின் மீது பெருமாள் நீண்டு படுத்துள்ளார். பின் சுவரில் தேவர்கள் நின்று பெருமாளைப் போற்றுகின்றனர். பெருமாளின் திருப் பாதங்களுக்கு எதிரே ஏழு நதிப்பெண்கள் கற்சிற்பங்கள் வடிக்கப் பெற்றுள்ளன. குடந்தை நகரில் எல்லா நதிகளும் உறைவதை அப்பரின் தேவாரப்பாடல்களிலும் காண்கிறோம். இங்கும் அப்பெண்கள் குடந்தைக் கிடந்த கோமானைப் போற்றிப் பரவுவதைக் காண்கிறோம். மாமகப் பெருவிழாவின் ஓர் அங்கமாக இங்கு மாலோடு நதி மங்கையர் எழுவரையும் தரிசிக்கும் பேறும் நமக்குக் கிட்டும்.

கவினுறு இக் கற்றளியைத் தோற்றுவித்த மூன்றாம் குலோத்துங்கன் இக் கருவறையின் பின்புற மண்டபத்தில் மார்பில் உடைவாளை அணைத்தவண்ணம், கூப்பியகரங்களோடு மாலவன் புகழ்பாடி நிற்பதைக் காணலாம். இப் படிமம் பாங்குறு கற்சிலையாகும்.

நெடிதுயர்ந்த கிழக்குக் கோபுரம் விஜயநகரப் பேரரசர்களால் எடுக்கப் பெற்றது. இக்கோபுரத்திற்கு மேலும் அழகு சேர்ப்பது ஆடற்கலையின் கரண சிற்பங்களாகும். கி. பி. 15 ஆம் நூற்றாண்டில் இக்கோபுரம் கட்ட முனைந்தபோது அருகே இருந்த இடிபாடுற்ற ஒரு கற்றளியின் கற்களை உபயோகித்துள்ளனர். அது முற்றிலுமாகச் சிதைந்த சிவாலயத்தின் ஒருபகுதியே. கோபுரம் எடுத்த சிற்பி அச்சிற்பங்களை அழிக்கவோ, ஒதுக்கவோ செய்யாமல் அற்புதமாக இக் கோபுரத்தில் இடம் பெறுமாறு செய்துள்ளான். இதனால் பல கரண முத்திரைகளின் பாங்குறு வடிவங்களை நாம் காண்பதோடு, சிவபெருமான் மற்றும் தேவியின் பல்வேறு நிலைகளையும் காண்கிறோம். ஒவ்வொரு ஆடல் சிற்பத்தின் கீழும் சோழர்கால எழுத்துக்களில் கரணங்களின் பெயர்கள்

கல்வெட்டாகவும் இடம்பெற்றுள்ளது உள்ளத்தைக் கொள்ளை கொள்கின்றது.

கற்சிற்பங்கள் போன்றே இத் திருக்கோயிலில் இடம்பெற்றுள்ள செப்புத் திருமேனிகளும் சோழர் கலையின் திறம் உரைக்கின்றன. குடந்தைக் கிடந்தானின் இத் திருக்கோயில் நெஞ்சம் விட்டகலாத கலைக் கூடம் மட்டுமன்று; உயிர்கள் உய்ய அருள் சுரக்கும் அமுத சுரபியுமாகும்.

## சார்ங்கபாணியா சாரங்கபாணியா?

சார்ங்கம் என்ற சொல் திருமாலின் வில்லுக்குரிய சிறப்புப்பெயர். "இனியதோர் சார்ங்கம் மால்வில்" எனச் சூடாமணி நிகண்டும், "சார்ங்கம் விண்டுவில்" என நாமதீப நிகண்டும் தெளிவாக்குகின்றன. பாணி என்பது





கரத்தில் ஏந்தியவன் எனப் பொருள் தரும். எனவே சார்ங்கபாணி என்பதற்குச் சார்ங்கம் என்னும் தெய்வீகவில்லை ஏந்தியவன் என்பது பொருள்.

சாரங்கம் என்பது பலபொருள்களை உடைய ஒருசொல். "சாரங்கம் மானும் வண்டும் சாதகப் புள்ளும் ஆமே" என்பது சூடாமணி. சாரங்கபாணி என்றால் மானை ஏந்திய சிவபிரான் எனக் கொள்ளலாம். இத்தொடர் நேராகத் திருமாலைக் குறிக்காது.

பொதுமக்கள் இவ்வேற்றுமையை உணராமல் சாரங்கபாணி எனத் திருமாலை வழங்கத் தொடங்கிவிட்டனர். சார்ங்கபாணி என்னும் பெயர் உச்சரிக்க எளிமையாக இல்லாததே இதற்குக் காரணம். உலக வழக்கு இப்படி மாறிய உடனே நிகண்டு ஆசிரியர்களும் சாரங்கபாணி என்ற சொல்லுக்கே திருமால் எனக் கூறிவிட்டனர். 17-ஆம் நூற்றாண்டில் தோன்றிய பாரதிதீப நிகண்டிலேயே, "விண்டு நராந்தகன் சாரங்கபாணியன் வெற்பெடுத் தோன்" என இப்பெயர் இடம்பெற்றுவிட்டது. பின்னால் வந்த அகராதிகளில் எல்லாம் சாரங்கம் என்ற சொல்லிற்குத் திருமாலின் வில் என்ற பொருள் ஏறிவிட்டது. இலக்கியத்தில் பேச்சுமொழியின் செல்வாக்கிற்கு இது ஒரு சிறந்த உதாரணம் ஆகும்.

சேங்கனூர் – திருவாய்ப்பாடி. (ஸ்ரீ சண்டேச்வரர்)



நன்றி: ஆனந்தவிகடன்

# மகாமகமா? வாருங்கள்! வாருங்கள்!

புலவர் சி. இளங்கோவன்

கும்பகோணம் செல்வதற்காகத் தஞ்சை வந்தேன்; ஒரேகூட்டமாக இருக்கிறது.

அப்படியா? நானும் குடமூக்குக்குத்தான் செல்கின்றேன்; என்னுடன் நீங்களும் வரலாம்.

என்ன குடமூக்கா?

உங்களுக்குத் தெரியாதா? அப்பரும் ஆளுடைய பிள்ளையாரும் கும்பகோணத்தைக் குடமூக்கு என்றுதான் பாடியிருக்கிறார்கள், இரண்டும் ஒன்றுதான்.

'குடந்தை' என்றாலும் கும்பகோணம் தானோ? குடவாயில் என்றாலும் . . . .

ஆமாம்! ஆமாம்! இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னே இந்த ஊர் குடந்தை எனறுதான் அழைக்கப்பெற்றது. அழகுமிக்க நங்கைக்குப் புலவர்கள் இந்த ஊரை உவமையாகக் கூடச் சொல்லியிருக்கிறார்கள்.

ஊர்ப்பெயர் இருக்கட்டும்; இப்போது கும்பகோணம் இல்லை! இல்லை! குடந்தைக்கு வந்து விட்டோம். இனி என்ன செய்வது?

என்ன செய்வதா?

முதலில் தீர்த்தங்களுக்குச் செல்வோம்; நீராடுவோம். "புறந்தூய்மை நீரால் அமையும்" என்று திருவள்ளுவர் சொல்லியிருக்கிறாரே!

அவ்வளவுதானோ? அதற்கு இங்கு வருவானேன்! எங்கள் ஊரில் ஆறு இல்லையா? குளம் இல்லையா? அங்கேயே குளிக்கலாமே!

அங்கே நீராடுவதற்கும் இங்கே நீராடுவதற்கும் எவ்வளவோ வேறுபாடு உண்டு. அங்கே உடல் அழுக்கு மட்டுந்தான் போகும்; இங்கே மனத்துள்ள மாசுகள் எல்லாம் மறைந்து ஒழியும்.

இதோ பாருங்கள்!

துன்பம் நீங்கி இன்பம் கைகூட வேண்டுமா? இதோ 66 கோடி தீர்த்தம்; இங்கே நீராடுவோம்.

களிப்புமிகத்தரும் கயிலைப்பதவி வேண்டுமா? கங்கை தீர்த்தத்தில் நீராடுவோம்.

நம் முன்னோர்களைப் பாவக் குழியி லிருந்து கரையேற்ற வேண்டுமா? பிரம தீர்த்தத்தில் நீராடுவோம்.

பொன்னும் பொருளும் கைகூட வேண்டுமா? யமுனை தீர்த்தத்தில் மூழ்கலாம்.

செல்வங்களுள் சிறந்த செல்வமாகிய கல்விச் செல்வத்தைப் பெறவேண்டுமா? சிந்து தீர்த்தத்தில் சென்று நீராடுவோம்.

பேறு பதினாறாகப் பெருஞ்செல்வங்கள் அனைத்தையும் பெறவேண்டுமா? குபேரன் தீர்த்தத்தில் குளித்துப் பயன் பெறுவோம்.

உள்ளத்தில் வலிவும் உடலில் பொலிவும் பெறவேண்டுமா? நருமதைத்



**தீர்த்தத்தை** நாடிச் சென்று நீராடுவோம்.

சிந்தைமணக்கச் சிவனடியைச் சேர வேண்டுமா? **ஈசான்யன் தீர்த்தத்தில்** மூழ்குவோம்! வாருங்கள்!

மோனநிலைதரும் ஞானம் பெற வேண்டுமா? **சரசுவதி தீர்த்தத்தில்** மூழ்கிப் பெறலாம்.

**இந்திரன்தீர்த்தம்,** வான்உலக வாழ்வை அளிக்கும்; விருப்பத்தை நிறைவேற்றுவது **கோதாவிரி தீர்த்தம்.**

**அக்கினி தீர்த்தத்தில்** மூழ்கி எழுந்தால் பிரம ஹத்தி விலகும்.

அறம், பொருள், இன்பம், வீடு என்னும் புருஷார்த்தங்களைப் பெறவிரும்புபவர்_ விரும்பாதவர்கள் யாரிருக்கிறார்கள்? யாராயிருந்தாலும் **காவிரி தீர்த்தத்தில்** மூழ்கினால் தானே நால்வகை உறுதிப் பொருள்களைப் பெற முடியும்?

கூற்றுவனுக்கு அஞ்சாதவர் யார்? அந்தப் பயம் இன்றி வாழவேண்டுமென்றால் **யமன் தீர்த்தத்தில்** நீராடுவோம்.

**கன்னியாகுமரி தீர்த்தத்தில்** நீராடினால் அசுவமேதபயன் கிடைக்கும்.

பூதபயமா? பிரேதபயமா? பைசாச பயமா? கவலையே படவேண்டாம். **நிருதி தீர்த்தத்தில்** நீராடினால் அச்சம் தீரும்; அவலம் குறையும்.

தாமிரபரணி தீர்த்தத்தில் தலைமூழ்கி எழுந்தால், கோலோகம் பெறலாம். **வருணன் தீர்த்தமோ** வாழ்நாளைப் பெருக்கும்.

மனக்கவலை தீர்க்கும் **சரயு தீர்த்தமும்** பிணிகளைப் போக்கும் **வாயு தீர்த்தமும்** இங்கே உண்டு பார்த்தீர்களா?

இருபது தீர்த்தங்கள் எண்ணற்ற பலன்களை நமக்கு நல்கும்; வாரும்ய்யா நீராடி மகிழலாம்.

நாற்பது இலட்சம் மக்கள் கூடும்

இடத்தில் நாம் நிற்கவாவது இடம் கிடைக்குமோ? நடந்து சென்று இருபது தீர்த்தங்களில் நீராடுவது நடக்கக் கூடிய காரியமா?

நாம் ஏன் நடக்க வேண்டும்? மக்கள் வெள்ளம் தள்ளிக்கொண்டே சென்று எல்லாத் தீர்த்தங்களிலும் நீராடச் செய்து விடும். கவலையேபட வேண்டாம்; வாரும்.

இப்படி ஒரே நாளில் தான் எல்லாரும் கூடவேண்டுமா? கூட்டமில்லாத நாளில் வந்து தீர்த்தமாடினால் என்ன?

என்னய்யா புரியாமல் பேசுகின்றீர்! குரு இருக்கிறானே, அவன் ஒவ்வொரு இராசியிலும் ஒவ்வோர் ஆண்டாக 12 இராசிகளில் சுற்றிவருவதற்குப் பன்னிரண்டு ஆண்டுகள் ஆகின்றன. இப்படிச் சுற்றி வரும் போது சந்திரனும் குருவும் ஒன்று சேர்ந்து சூரியனது ஆட்சி வீடாகிய சிம்மத்தில் இருக்க சிம்மராசிக்கு ஏழாவது வீடாகிய கும்பத்தில் சூரியன் இருந்து கொண்டு, அங்கிருந்து தமக்கு ஏழாவது வீடாகிய சிம்மராசியில் குருவையும் சந்திரனையும் நேராகப் பார்க்கிற நாள் இருக்கிறதே! அதுதான் மகாமகம்.

மகாமகம் என்ன? நாள்தோறும் வருவதா என்ன? 12 ஆண்டுகளுக்கு ஒருமுறை குறிஞ்சிமலர் போல. . . அது கூட பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஒருமுறைதான் பூக்கும்; புதுமணம் வீசும். அதனால் வங்கக்கடலென மக்கள் வெள்ளம் இங்கே கூடியிருக்கிறது. புரிகிறதா?

புரிகிறது! புரிகிறது!

இருபது தீர்த்தங்கள் இவற்றிற்கு இத்துணை மகிமை எப்படி ஐயா வந்தது?

என்னய்யா இது! இருபது தீர்த்தங்களும் இருக்கின்ற தலத்தின் பெருமை உமக்குத் தெரியாதோ?

"கங்கையிற் புனிதமாய காவிரி"



என்று கம்பன் பாடியிருக்கின்றானே!

அந்தக் காவிரிப்புனலால் கவினுற்று விளங்குவது கும்பகோணம் ஆயிற்றே!

குடமூக்கே! குடமூக்கே! என்பீராகில்
கொடுவினைகள் தீர்த்தானைக்
குறுகலாமே

என அப்பரால் பாடப்பெற்ற புண்ணியத் திருத்தலமாயிற்றே அது.

"பொடியணி மேனிமூட வுரிகொண்டவன்
புன்சடையான்
கொடிநெடு மாடமோங்கும் குழகன்
குடமூக்கிடமா
இடிபடு வானமேத்த இருந்தானவ
னெம்மிறையே"

எனத் திருஞானசம்பந்தரால் பாடப்பெற்ற தலமாயிற்றே.

சேக்கிழார் பெருமான் போற்றிப் புகழ்ந்த திருத்தலமாயிற்றே கும்பகோணம்.

மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளையால் திருக்குடந்தைப் புராணம் கொண்ட திருத்தலமாயிற்றே கும்பகோணம்.

பெருமையும் புகழும் பெற்று பிறைமுடிப் பெம்மான் குடிகொண்ட தலத்துத் தீர்த்தங்களும் வரந்தரும்; வலம்தரும் என்பதை நீர் அறியீரா?

ஆமாம்! ஆமாம்! நான்கூட ஒன்று கேள்விப்பட்டேன்.

அஃது என்ன ஐயா? நீர் கூட ஒன்று கேள்விப்பட்டீர்! நவகன்னியரைப்பற்றியா?

ஆமாம்! ஆமாம்!

புண்ணியநதிகள் எனப் போற்றப்பெறுவன ஒன்பது நதிகள்; உமக்குத் தெரியுமோ?

கங்கை, யமுனை, சரசுவதி நருமதை, காவேரி, சிந்து, கோதாவிரி, சரயு, தாமிரபரணி இந்த ஒன்பது நதிகளும் நவகன்னியராக உருவெடுத்து சிவபெருமானிடம் சென்றன.

சிவபெருமானை வணங்கி "ஐயனே! மங்கைக்குச் சூதகமானால் கங்கையில் நீராடலாம்; கங்கைக்கே சூதகமானால் எங்கே நீராடுவது? இப்படித்தேவர் பெருமகன் திருவாய் மலர்ந்தருளியிருக்கிறார். எங்களது நீரில் பலரும் நீராடித் தங்கள் தங்கள் பாவங்களைப் போக்கிக் கொள்கிறார்கள். அப்பாவங்களைத் தாங்குபவர்கள் நாங்கள். இவ்வகையில் நாங்கள் அடைந்த பாவங்களைப் போக்கிக் கொள்ள வழிகாட்டுவீராக" என வேண்டிக் கொண்டார்கள்.

சிவபெருமான், "கன்னியரே! கலங்காதீர்! நீவிர் எல்லாரும் காசிக்குவாரீர்! அங்கிருந்து உம்மை தெற்கே அழைத்துச் செல்வோம்"





எனக்கூறி காசிக்கு வந்த நவகன்னியரைக் குடமூக்குத் தலத்திற்கு அழைத்துவந்து மகாமகக் குளத்தில் நீராடச் செய்தார். நவகன்னியரும் மகாமகக்குளத்தில் நீராடித் தங்களைப் புனிதப்படுத்திக் கொண்டார்கள்.

தங்களைப் புனிதப்படுத்திய மகாமகத் தீர்த்தத்திற்கு நன்றிக்கடன் ஆற்ற வேண்டாமா?

நவகன்னியர் என்னதான் செய்தார்கள்?

சிவபெருமான் ஆணைக்கேற்பத் தங்கள் புனிதத் தெய்வ ஆற்றலை இத்தீர்த்தத்தில் செலுத்தினார்கள்.

அப்படியா? அதனால்தான் இந்தத் தீர்த்தத்திற்கு இத்துணை மகிமையா?

ஆமாம்! ஆமாம்!

நல்லது. புண்ணியத்தலத்தில் நம் கால்பட்டுப் புனிதமடைந்து விட்டன.

இருபது தீர்த்தங்களிலும் நீராடி இன்னல்களை யெல்லாம் போக்கிக் கொண்டோம். இனிப் புறப்படலாமா?

என்னய்யா சொல்கிறீர்? தலத்தற்கு வந்தோம்; தீர்த்தமாடினோம்; மூர்த்திகளை வணங்கவேண்டாமா?

எனக்கு எள்போடக்கூட இடம் கிட்டாத இந்த மாபெரும் மகாமகக் கூட்டத்தைப் பார்த்தவுடனே மதியும் மயங்கிவிட்டது. வாரும்! வாரும்! மூர்த்திகளை வணங்குவோம். வாரும்! வாரும்! தீர்த்தம், தலம், மூர்த்தி ஆயிற்றே!

இதோ பாரும்! கும்பேசுவரர் கோயிலின் இராசகோபுரம்! கைகூப்பி வணங்குவோம்.

வன்னிமரத்து அடியில் **விநாயகப் பெருமான்**; வணங்குவோம்.

தெற்குப்பிரகாரத்தின் மேற்குக் கோடியில் ஆதிவிநாயகரைக்கண்டு வணங்குவோம்.

இதோ **மங்களாம்பிகை சந்நிதி**; மங்களத்தை அருளும் மங்களாம்பிகையை வணங்கி வரம்பல பெறுவோம்.

நின்று பார்க்க நேரமில்லை; அவ்வளவு நெருக்கமாக வருகிறது மக்கள் வெள்ளம். நடந்து கொண்டே வணங்கிச் செல்வோம்.

ஆமாம்! கூப்பிய கரங்கள் குவிந்தபடியே இருக்கட்டும்.

**இதோ கும்ப முனிவர்**
**இதோ குமரப்பர் சந்நிதி**

இங்கே பாரும் **ஆதிலிங்கம்!** முற்ற **வெளிவிநாயகர்; பாலதண்டாயுதபாணி.**

அதோ **இலட்சும நாராயணப்பெருமாள்,** கொடிமரம், உள்ளே பலிபீடம், நந்திதேவர் மந்திரம் சொல்லி மனத்திலே வணங்கும்.

இங்கே பாரும்! நாகர் திருவுருவங்களோடு வல்லபை கணபதி-நவக்கிரகங்கள்.

அறுபத்து மூவரின் உற்சவத் திருமேனி களைப் பார்த்தீரா?

ஒவ்வொன்றையும் உமக்குக் காட்டிக் கொண்டிருக்க முடியாது; வணங்கிக் கொண்டேவாரும்! கும்பேசுவரரை வணங்கு வோம்! கோடி கோடி புண்ணியம் பெறுவோம்.

குடந்தை, குடவாயில், குடமூக்கு, கும்பகோணம் எனப் பெயர் பெற்ற இவ்வூரில் தான் எத்தனை எத்தனை கோயில்கள் பார்த்தீரா?

எத்தனை கோயில்கள்? பெயர் சொல்ல நேரமில்லை.

கோயில்கள் நிறைந்த ஊர் கும்பகோணம் தான். எனக்குத் தெரிந்தவை ஐம்பத்தொன்பது கோயில்கள்; இன்னம் எத்தனை இருக்குமோ? அகர வரிசைப்படி காட்டிக் கொண்டே வருகிறேன். வணங்கிக்கொண்டே வாரும்!

எப்படி அய்யா வணங்கிக் கொண்டே வருகிறது?

திருஞானசம்பந்தர் தேவாரம் இருக்கிறது

திருநாவுக்கரசுநாயனார் தேவாரம் இருக்கிறது
பெரியாழ்வார், ஆண்டாள், திருமழிசை ஆழ்வார்,
திருமங்கையாழ்வார்,பேயாழ்வார், பூதத்தாழ்வார்

இவர்கள் பாசுரங்கள் இருக்கின்றன.

பாடிக்கொண்டே வாரும்! நான் சுவாமிகள் வீற்றிருக்கின்ற 'கோயில்களின் பெயர்களைச் சொல்லிக் கொண்டே வருகிறேன்.

அம்புஜவல்லித் தாயார் கோயில்
அனுமார் கோயில்
ஆஞ்சநேயர் கோயில்
ஆதி கம்பட்ட விசுவநாதர் கோயில்
ஆதி கும்பேசுவரர்கோயில்
ஆண்டவப்பிள்ளையார் கோயில்
ஆயத்துறை விநாயகர் கோயில்
இரும்பையாடித் தருமராசர் கோயில்
இராசேந்திரபிள்ளையார் கோயில்
இராசகோபாலசுவாமி கோயில்
உச்சிப்பிள்ளையார் கோயில்
உடையவர் சந்நிதிக் கோயில்
எல்லையம்மன் கோயில்
ஏகதயோகீந்தர சுவாமிகள் கோயில்
கரும்பாயிரம்பிள்ளையார் கோயில்
கற்பக விநாயகர் கோயில்
கன்னிகா பரமேஸ்வரி கோயில்
காசி விசுவநாதர் கோயில்
காளகஸ்தீசுவரர் கோயில்
காளியம்மன் கோயில்
குமரன் கோயில்
கூத்தாழ்வார் கோயில்
கோடியம்மன் கோயில்
கௌதமேசுவரர் கோயில்
சக்கரபாணி கோயில்
சஞ்சீவி ராயசுவாமி கோயில்
சரநாராயணப்பெருமாள் கோயில்
சாரங்கபாணி சுவாமி கோயில்
சித்திவிநாயகர் கோயில்
சீரட்ட விநாயகர் கோயில்
சுந்தரமூர்த்தி விநாயகர் கோயில்
சுப்பிரமணியசுவாமி கோயில்
செகநாதபிள்ளையார் கோயில்
சோமநாதர் கோயில்
சோமேசுவரர் கோயில்
திரௌபதியம்மன் கோயில்
படைவெட்டிமாரியம்மன் கோயில்
பட்டாபி ராமசாமி கோயில்
பகவத் விநாயகர் கோயில்
பாண்டுரங்கசாமி கோயில்



பாடகச்சேரி இராமலிங்கசாமி கோயில்
பிரளயம் காத்த விநாயகர் கோயில்
பிரசன்னவெங்கடாசலபதி கோயில்
பொய்யாத பிள்ளையார் கோயில்
யானையடி அய்யனார் கோயில்
வட்டிப்பிள்ளையார் கோயில்
வராகப்பெருமாள் கோயில்
விசுவநாத சுவாமி கோயில்

ஐயா, தீர்த்தம், மூர்த்தி, தலம் என்பார்களே! தலத்திலே நம் பாதங்கள் பட்டன; தீர்த்தங்களிலே நம் உடல்கள் நீராடின; மூர்த்திகளையெல்லாம் கண்டு வணங்கினோம்.

இனிநல்லது நடக்கும்; நாம்புறப்படலாமா? கொஞ்சம் பொறுத்துக் கொள்ளும்! கும்பகோணம் கொழுந்து வெற்றிலை; நெய்யில் வறுத்த மையெனக் கரையும் சீவல்பாக்கும் இரண்டுக்கும் பெயர்பெற்ற இடம் இந்த ஊர்; வாங்கி வாய் மணக்கச் சுவைத்துச்செல்வோம்!

புனிதத்தலத்துக்கு வந்திருக்கின்றோம்; நினைவுப் பரிசாக எதையாவது வாங்கிச் செல்ல வேண்டாமா?

ஆமாம்! கண்கவர் வெண்கலப் பாத்திரங்கள் இங்குத்தான் கிடைக்கும். வாங்கிச் செல்லலாம்! வாருங்கள்!

மகாமகத்திற்கு நாற்பது இலட்சம் மக்கள் கூடுவார்கள் என்று சொன்னார்கள். இங்கே பார்த்தால் அறுபது இலட்சம் கூடியிருப்பார்கள் போலிருக்கிறதே.

இத்துணைக் கூட்டத்தையும் எந்தவிதச் சேதமும் இன்றி எப்படித்தான்

சமாளித்தார்களோ? என்ன இப்படிக் கேட்கிறீர்?

பொன்மனச் செம்மல் புரட்சித் தலைவரின் ஆட்சியாயிற்றே! தமிழக முதல்வர் பொறுப்பை ஏற்றிருப்பவர் புரட்சித்தலைவி டாக்டர் செல்வி ஜெயலலிதா அவர்களாயிற்றே!







கோடிகோடியாகப் பொருளைக்கொட்டிக் கொடுத்தார்கள். தஞ்சை மாவட்ட ஆட்சித்தலைவர் மதிப்புறு தி. சண்முக ராஜேஸ்வரன் இ. ஆ. ப அவர்களும் அவரைச் சார்ந்த அலுவலர்களும் தத்தம் நிருவாகத் திறமையைக் காட்டியிருக்கிறார்கள்.

பக்தகோடிகளைப் பாதுகாத்து வழியனுப்பிவைத்த பெருமை அவர்களைத் தானே சேரும்.

எல்லாருடனும் சேர்ந்து நாமும் நம் நன்றியைத் தெரிவித்துக்கொள்வோம்.

மீண்டும் வருவோம்!

எப்போது?

இன்னும் பன்னிரண்டு ஆண்டுகளுக்குப் பின்னர்.

அது வரை . . . .

நாம் இருப்போம்; கும்பேசுவரர் அதுவரை நமக்கு வையக வாழ்வை வளமாகத் தருவார்.

தலம்நோக்கி வணங்குமய்யா! தஞ்சைக்குச் செல்வோம்.

அங்கே தமிழ்ப் பல்கலைக்கழகம் இருக்கிறது; சரசுவதிமகால் இருக்கிறது; அரண்மனைவளாகம் இருக்கிறது. பெரியகோயில் இருக்கிறது. . . .



# மன்னர் குல மணிவிளக்கு

குடவாயில் பாலசுப்பிரமணியன் எம். ஏ.

திருநாவுக்கரசரின் தமக்கையார் திலகவதி யாருக்கு அவர் தம் பெற்றோர்கள் நிச்சயித்த கலிப்பகையார் என்ற மணாளன் திருமணத்திற்கு முன்பு போர்மேற் சென்றபோது வீர மரணம் அடைந்தார். இது கேட்ட திலகவதியார் உடன் உயிர்நீக்க முனைந்தபோது தம்பியார் நாவுக்கரசரின் வேண்டுகோளுக்காக, உயிர் வாழ்ந்து தவ வாழ்வு மேற்கொண்டார். நிச்சயித்த மணாளன் மாண்டதற்காக மண வாழ்வைத் துறந்து வரலாறு படைத்தார். இது நடந்தது கி.பி.7ஆம் நூற்றாண்டில். இதே தமிழகத்தில் 19ஆம் நூற்றாண்டில் மீண்டுமோர் திலகவதி பிறந்தாள். ஆம்! அவள் சோழ நாட்டில் திருவிடைமருதூரில் பிறந்தாள்! வாழ்ந்தாள்! மண வாழ்வையே தியாகம் செய்தாள்! தீபமேந்திய திருவிளக்காக இன்றும் நிற்கிறாள். இம் மாதர்குல மணிவிளக்கை நாமும்தான் காண்போம் வாருங்கள்.

திருவிடைமருதூர் மகாலிங்க சுவாமித் திருக்கோயிலுக்குச் செல்வோம். மகாலிங்கப் பெருமான் திருமுன் நின்று தலை தாழ்ந்து வணங்குவோம். கயிலைநாதன் அருள்பெற்று அங்கு நின்றவண்ணமே சற்று தலையைத் திருப்புவோம். நாம் நிற்கும் இடத்திலேயே அற்புதப்பாவை விளக்கு ஒன்று நிற்கும். அது ஏந்தியுள்ள தீபம் மகாலிங்கர் சன்னதிக்கே ஒளி வழங்கும்.

ஆகா! அந்த ஒளி ஏந்தியுள்ள பாவைதான் எத்தனை அழகு! அவள் அணிந்துள்ள நகைகள்தான் எத்தனை எத்தனையோ! தலையிலோ சூரியபிறை, சந்திர பிறை, புல்லகம், கொய்யகம், அளகசூடம், நெற்றிச்சூடி, ஜடபில்லை, ஜடநாகம், காதிலோ ஜிமிக்கிகள் தாங்கிய குண்டலங்கள், கழுத்திலோ முத்தாரம், காறை, சவடி, புஜத்திலோ, தோள்வளை, சூடகம், கடகவளை, கையிலோ முத்து வளையல்கள், இடுப்பிலோ உடைதாரம், காலிலோ சுவின்மிகு காப்புகள், விரல்களில் மெட்டிகள், வேலைப்பாடமைந்த புடவையின் எழில்தான் எத்தனை கம்பீரம். தோளில் கிளியொன்று அமர்ந்து இருக்கத் தீப விளக்கை ஏந்தி நிற்கிறாள் இவ் வெழிலரசி.

1.20 மீட்டர் உயரத்துடன் பித்தளையால் வடிக்கப்பெற்ற இப்பாவை விளக்கின் பீடத்தில் ஏதோ சில தமிழ் எழுத்துக்கள் வெட்டப்பட்டுள்ளதே! அருகில் சென்று குனிந்துதான் படிப்போமே.

"சாலிவாகன சகாப்தம் 1775 பிரமாதீச வருசம் ஆனி மாதம் 22ந் தேதி சோமவாரம் மத்யாற்ஜுனம் ஸ்ரீ மகாலிங்கசுவாமி சன்னி தானத்தில் ஸ்ரீபிரதாபசிம்ம மகாராஜா அவர்களுடைய அம்மான் பொன் ஒருத்தருக்கொருத்தர் மனசினாலே . வரிக்கப் பட்ட பாரியை ஆகிய அம்முனு அம்மனி அவர்கள் லட்சதீபம் உத்தியாபனம் பன்னினத்துக்காக தன்னுடைய சுவரூபமாகிய தீபம் பிறதிமாஸ்தாபன தர்மத்தை நிரந்தரமாயி நடப்பித்துக் கொண்டு வருபவர்கள் சிவதறும் பலத்தை அடைய்வார்கள். நிருத்து கண்டசேர் 411 3/4. வார்ப்பு வேலை கன்னார அரியபுத்திர பத்தர்" - என்றல்லவா எழுதப்பெற்றுள்ளது.

4-7-1853ல் பிரதாபசிம்ம மகாராஜாவுடைய மாமன் மகள் அம்முனு அம்மனி தன்னுடைய சுயரூபத்தை இப் பாவைவிளக்காகச் செய்வித்து அத்துடன் லட்ச தீபங்களை ஏற்றி



மகாலிங்கசுவாமி சன்னதியில் அர்ப்பணித்ததாக அல்லவா எழுதப்பெற்றுள்ளது. அற்புதமான இப் பாவைவிளக்கு அம்முனு அம்மினி என்கிற மராத்திய அரசகுலப் பெண்ணொருத்தியின் உருவச்சிலை யல்லவா? அப் பெண்ணின் வரலாறுதான் என்ன..?

பிரதாபசிம்ம மகாராஜா அவர்களுடைய அம்மான் பெண் ஒருத்தருக்கொருத்தர் மனசினாலே வரிக்கப்பட்ட பாரியை ஆகிய அம்முனு அம்மணி"என்றல்லவா எழுதப் பெற்றுள்ளது. ஓகோ! திருவிடைமருதூர் ராஜா பிரதாபசிம்மனின் மாமன் மகளாகிய இந்தப் பெண்ணும் பிரதாபசிம்மனும் நெருங்கிக் காதலித்திருக்கிறார்கள் போலும். அக் காதல் நிறைவேற அப்பெண் மகாலிங்க சுவாமியை வேண்டி இருந்திருப்பாள். தன் பிரார்த்தனை பலித்திருக்கும். லட்ச தீபமும் ஏற்றி மகிழ்ந்திருப்பாள் போலும்..! அப்படி இருந்திருப்பின் மனசினாலே வரிக்கப்பட்ட பாரியை (மனைவி)" என்று ஏன் எழுத வேண்டும். உண்மையிலேயே பாரியை ஆகவில்லையா? சற்றுச் சிந்தனையோடு நிற்கும்போது அப் பாவை விளக்கு பாடும் சோககீதம் எங்கோ தொலைவில் கேட்கிறதே..!

இவ் வெழிலுருவாம் பாவைக்கு இத்தனைச் சோகமா..? மீண்டும் ஒரு திலகவதியாகவல்லவா வாழ்ந்து இருக்கிறாள். மணமேடையே காணாமல் கைமை நோன்பா?நினைக்கவே நெஞ்சம் கலங்குகிறதே.

கி.பி. 1787இல் தஞ்சை அரசுகட்டிலில் அமர்ந்து ஆட்சி புரிந்தவர் அமரசிம்மன் என்ற மன்னர். பின்னர் 1798இல் ஆங்கிலேயக் கிழக்கிந்தியக் கம்பெனியார் ஸ்வார்ட்ஸ் என்ற பாதிரியார் மூலம் சரபோஜி என்ற இளைஞரை பகடைக்காயாக உருவாக்கித் தஞ்சை அரசியலில் விளையாடத் துவங்கினர். மன்னர் குடும்பத்தில் குழப்பங்கள் விளைந்தன. இது ஆங்கிலேயருக்கு ஆதாயமாக ஆயிற்று. நாட்டின் வருவாயில் ஐந்தில் நான்கைக் கம்பெனியார் கோரினர். பிரதாபசிம்மன் மறுத்தார். கம்பெனியாரைக் கடுமையாக எதிர்த்தார். தபோநிதி குமரகுருபர சுவாமிகள் போன்றோர் துணையுடன் மராத்திய மாநில மன்னர்களுடன் தொடர்பு கொண்டு வெள்ளையரை வெளியேற்றப் பல திட்டங்களில் முனைந்தார். தன் நாட்டை அன்னியனுக்கு அடிமைப்படுத்தாத அமர சிம்மனைக் கம்பெனியார் வஞ்சகமாக அரசு கட்டிலிலிருந்து இறக்கினர். பொம்மை ராஜாவாகச் சரபோஜியை அமர்த்தினர். நாடிழந்த அமரசிம்மன் திருவிடைமருதூரில் தனக்கென மாளிகை அமைத்துக் கொண்டு வாழ்ந்தார். இத் தன்மானச் சிங்கத்தின் மகனே பிரதாபசிம்மன்.

பிரதாபசிம்மன் யமுனாபாய் சாயேப் என்பவரை முதல் மனைவியாகவும், சகவர் பாய பாயிசாயேப் என்பவரை இரண்டாம் மனைவியாகவும் திருமணம் செய்து கொண்டார். இவர்களுக்குக் குழந்தைப்பேறு இல்லாமையால் தமது அம்மான் கோவிந்தராவ் காடே சாகிப் என்பவரின் மகளாகிய அம்முனு பாயிசாகேப் என்பவரை மனம் விரும்பித் தன் துணைவி யாக்கிக் கொள்ள விழைந்தார். அம்முனு பாயிசாகேப்பும் பிரதாபசிம்மன்மீது அளவிலாக் காதல் கொண்டு மணாளனாகக் கொள்ள மிகவும் விரும்பினாள். பெரியோர்கள் இவர் களுக்குத் திருமணமும் நிச்சயம் செய்தனர். ஆனால், திருமணத்திற்கு முன்பு உடல்நலம் குன்றிய பிரதாபசிம்மன் கி.பி.1849ம் ஆண்டு ஜனவரித் திங்கள் பதினேழாம் நாள் (கீலக ஆண்டு தை மாதம் ஆறாம் நாள்) இம் மண்ணுலக வாழ்வை நீத்தார்.

பிரதாபசிம்மன்மீது அளவிலாக் காதல் கொண்டு திகழ்ந்த அம்முனு அம்மனி நிச்சயிக்கப்பெற்ற தமது மணவிழாவிற்கு முன்பே தனது காதல் மாய்ந்ததைத் தன் கணவன் மாய்ந்ததாகவே கருதினாள். உடன் அரசகுல வழக்கப்படி உயர்ந்த ஆடை அலங்காரங்களைத் துறந்து, தனது கழல் களை உடைத்து, பல்லுக்குத் தாச்சினாப் பொடி பூசிக்கொண்டு (இது முகமதிய வழக்கம். இப் பொடி பூசுவதால் பற்கள் கருத்து அழகுக் கோலம் அழியும்) கைம்மை நோன்பு மேற்கொண்டாள்.

கைம்மை பூண்ட அம்முனு அம்மனி நான்காண்டுகள் கழித்துத் (கி.பி.1853ல்) திருவிடைமருதூர் திருக்கோயிலில் பிரதாப சிம்மன் நினைவாக லட்ச தீபம் ஏற்றுவித்தாள். அப்போது அவ்விளக்குகளில் ஒரு விளக்காகத்



தனது உருவத்தையே பாவை விளக்காக்கி, அத் திருக்கோயிலுக்கு அர்ப்பணித்தாள்.

அதன் பீடத்தில் தனது காதலையும், பின் தன்னைப் பிரதாபசிம்மனின் மனைவி யாகவே கருதியதையும் ("மனசினாலே வரிக்கப்பட்ட பாரியை") தமிழில் பொறிக்கச் செய்தாள். சோகமான வரலாற்றுப் பின்னணியில் வடிக்கப்பட்ட இப் பாவை விளக்கு அம்முனு அம்மனி தியாகம்செய்த சுமங்கலி வடிவிலேயே உள்ளது. இச் சோகக் காவியம் ஓலைச்சுவடியில் எழுதப் பெற்றிருப்பதை அறிகிறோம். தஞ்சைத் தரணியை பரங்கியர்க்கு அடிமைப்படுத்த மாட்டேன் என்று வீர முழக்கம் செய்த மாவீரன் அமரசிம்மனின் மருமகள், பிரதாபசிம்மனின் காதலி அம்முனு அம்மனி தமிழக வரலாற்றில் அழியா இடம்பெற்று நிற்கிறாள். இப் புனிதவதியைத் திலகவதியாரோடு இணைத்துப் போற்றுவோம்.



திருவிடைமருதூர்

நன்றி: ஆனந்தவிகடன்



# மாசி மாதம் - சில வானியல் சிந்தனைகள்

புலவர் ப. வெ. நாகராசன் பி.லிட் விஷாரத்

நமது காலக்கணக்கில் ஓர் ஆண்டு உத்தராயனம் (Wintersoltice), தட்சிணாயனம் (Summer Soltice) என இரண்டாகப் பிரிக்கப்படுகிறது. நம் உத்தராயனம் தை மாதம் முதல் தேதியன்று தொடங்குகிறது. நமக்குரிய ஒரு வருடம் வானோர்களுக்கு ஒரு நாள்" எனவும், அதில் தை முதல் ஆனி முடிய உள்ள ஆறு மாதங்கள் (உத்தராயனம்) பகல் என்றும் நம்பப்படுகிறது. அதனால் வானவர்களின் பகற்போதின் முதல் மாதமாகிய தை நம்மால் எல்லா மங்கலச் செயல்களுக்கும் சிறப்பாகக் கைக்கொள்ளப் பெறுகிறது. அவ்வாறே தட்சிணாயனமாகிய இரவின் முதல் மாதமாகிய ஆடி மாதம் நம்மால் இயன்ற அளவு ஒதுக்கப்படுகிறது.

தை மாதத்தின் முதல் நாளை உத்தராயனமாகக் கொள்ளும் இக் காலக் கணிப்பு வராகமிகிரர் (சுமார் கி.பி. 500) என்பவரால் முறைப்படுத்தப்பட்டதாகும். சூரியனின் இயக்கத்தை அடிப்படையாகக் கொண்ட சௌரமானம் என்னும் காலக்கணக்கை (Solar calender) நிறுவியவர் இவரே எனலாம்.

## மாசி நீராடல்

ஆனால் மிகப் பழங்காலத்தில் உத்தராயனம் மாசி மாதத்தில்தான் தொடங்கியது (தையில் அல்ல) என்பதற்குப் பல சான்றுகள் உள்ளன.

1. தனிச்சோதிட நூலாக முதன்முதலில் தோன்றிய வேதாங்கஜ்யோதிஷம் என்னும் ஒரு மிகப்பழைய வட மொழிநூல் பின்வருமாறு கூறுகிறது:- சூரிய சந்திரர்கள் அவிட்டத்தின் தொடக்கத்தில் உள்ளபோது உத்தராயனமும், ஆயில்யத்தின் நடுவில் கதிரவன் இருக்கும்போது தட்சிணாயனமும் தொடங்குகின்றன. அப்போது முறையே மாசி, ஆவணி மாதங்களாகும். (5ஆம் சுலோகம்)

2. கர்காசாரியார், "(தை மாதம் அமாவாசைக்கு அடுத்தநாள் ஆகிய) மாக சுக்லப் பிரதமையில் அவிட்டத்தன்று உத்தராயனம் தொடங்கும்" என்கிறார்.

3. சரகசம்ஹிதை, "மாகம்முதல் பன்னிரெண்டு மாதங்களில் இரண்டு திங்கள்களுக்கு ஒரு ருது வீதம் ஆறு ருதுக்கள் உண்டு; அவை சிசிரம், வசந்தம், கிரீஷ்மம், வர்ஷம், சரத், ஹேமந்தம் எனப்படும். உத்தராயனம், தட்சிணாயனம் என அயனங்கள் இரண்டு. வர்ஷ, சரத், ஹேமந்த ருதுக்கள் தட்சிணாயனத்தைச் சேர்ந்தவை" (சூத்ரஸ்தானம் VI- 3&1- 4) எனக் குறிப்பிடுகிறது. இங்கும் மாகம் முதல் என்று மாசிமாதத்தில் தொடங்குவதும், மார்கழி தை மாதங்கள் அடங்கிய ஹேமந்தருதுவைத் தட்சிணாயனம் என்பதும் கவனிக்கத் தக்கன.

4. வடமொழி நிகண்டாகிய அமரகோசமும், "மாகம்முதல் இரண்டிரண்டு மாதங் களைக்கொண்டது ஒரு ருது; மூன்று ருதுக்களால் ஆவது ஒரு அயனம்" என

மாசி மாதத்திலேயே தொடங்குகிறது. (அமரம் I - IV - 13)

5. மகாபாரத வரலாற்றில் வீடுமர் உத்தராயனம் பிறந்த பிறகே இறக்க வேண்டும் எனக் காத்திருக்கிறார். அவ்வரலாற்றின் அநுசாசன பர்வம், "மாக சுத்த அஷ்டமியில் (தைமாதத்தின் காருவா கழிந்த எட்டாம் நாள்) சூரியன் வடக்குமுகமாகத் திரும்பியஉடனே ரோகிணி நட்சத்திரத்தில் சூரியன் உச்சியில் ஒளிவீசும்போது இறைவனோடு கலந்தார்"என்கிறது. இன்றும் தை அமாவாசையை அடுத்த எட்டாம் நாளே பீஷ்மாஷ்டமி எனப்படுகிறது. சூரியன் வடக்குமுகமாகத். திரும்பியஉடனே என்றதால் அதுதான் உத்தராயனத்தின் முதல்நாள் எனத் தெளிவாகிறது.

6. தை அமாவாசைக்கு அடுத்த ஏழாம் நாள் (பீஷ்மாஷ்டமிக்கு முதல்நாள்) இரதசப்தமி எனப்படுகிறது. இது சூரியனை வழிபடுவதற்குரிய மிகச் சிறந்த நாள். வடக்கு நோக்கிச் செல்லும் தேரில் உலா வருபவராகச் சூரியனை வரைந்து விரிவாக வழிபடுவர். தைமாதம் முதல் தேதி வழிபடுவதைப் போன்றே பால் பொங்கலிட்டுப் படைப்பர். தை முதல் தேதியிலிருந்து கணக்கிடப் பட்டாலும் உண்மையில் இரதசப்தமி யன்றுதான் உத்தராயனம் அது தொடங்குகிறது என்பர். இது பழைய மரபின் எச்சமே என்பது ஒருதலை.

இன்றைய உத்தராயனம் தை முதல் நாளன்று தொடங்குகிறது என உறுதி செய்தது சற்றேறக்குறைய கி. பி. 500 இல் என முன்பே கூறப்பெற்றது. வான நூல்வல்லோர் 72 வருஷத்திற்கு ஓர் அம்சம் வீதம் உத்தராயனாதி முந்தும் (Precession of equinox)என்கின்றனர். திலகர் இக்கணக்கைத் தம் வரலாற்றுக் காலக் கணிப்பிற்குப் பெரிதும் பயன் படுத்தியிருக்கிறார். இதனால் இன்றைய உத்தராயனம் 1500 ஆண்டுகளில் ஏறக்குறைய 20 நாள் முந்தி இருக்காதா? மார்கழி மாதம் 10 ஆம் தேதி வாக்கிலேயே உத்தராயனம் பிறந்து விடுகிறதா? வானநூல் அறிஞர்கள் இத்துறையில் ஆராய்ந்து தேவைப்பட்டால் பஞ்சாங்கங்களில் ஏற்ற பெற்றி உரிய மாற்றங்களைச் செய்வார்களாக.



## தை நீராடல்.

மாகம் (மாசி மாதம்) புனித நீராடலுக்கு மிகவும் ஏற்றது எனப் பழைய புராணங்களில் கூறப்படுகிறது. ஆனால் இது சங்க இலக்கியத்தில் தைந்நீராடலாகக் காலத்தால் முந்தி வந்துவிட்டது.

"தைஇத் திங்கள் தண்கயம் படியும்
பெருந்தோட் குறுமகள்"
(நற்.80)

"நறுவீ ஐம்பால் மகளிர் ஆடும் தைஇத்
தண்கயம்"
(ஐங். 84)

"தாய்அருகா நின்று தவத்தைந்நீர்
ஆடுதல்"
(பரி. 11_91)

"இன்ன பண்பின்நின் தைந்நீராடல்"
(பரி. 11_134)

"நீ தையில் நீராடிய தவம்
தலைப்படுவாயோ"
(கலி. 59_13)

என்றெல்லாம் சங்க இலக்கியங்களில் தை நீராடல் இடம் பெற்றுள்ளது.

## மார்கழி நீராடல்

"மார்கழித் திங்கள் மதிநிறைந்த
நன்னாளால் நீராடப் போதுவீர்"
(திருப்பாவை 1)

"நாங்களும் மார்கழி நீராட
மகிழ்ந்தேலோ ரெம்பாவாய்"
(திருப். 4)

"மாலே மணிவண்ணா! மார்கழி நீராடு
வான் மேலையார் செய்தனகள்"
(திருப். 26)



"போற்றியாம் மார்கழி நீராடேலோர்
எம்பாவாய்"
(திருவெம்பாவை 20)

என ஆண்டாள், மாணிக்கவாசகர் பாசுரங்களில் மேலும் முந்திக்கொண்டு இப் புனித நீராடல் மார்கழியிலேயே வந்து விட்டது. இவ்வாசிரியர்கள் உத்தராயனக் கணக்கை உள்ளபடி அறிந்தவர்கள் என்பதையே இது காட்டுகிறது.

இதுகாறும் கூறியவற்றால் மிகப்பழங்காலத்தில் உத்தராயனம் மாசி மாதம் தொடங்கியதென்றும், பிறகு சங்க காலத்தில் தைமாதத்தில் தொடங்கிய தென்றும் காட்டப்பெற்றன. பாவை ஆசிரியர்கள் இந்த உத்தராயனத் தொடக்கத்தை மார்கழி என்றே நினைக்கிறார்கள் என்பதும் குறிப்பிடப் பட்டது. வானநூலார் கோட்பாடும் இந்தக் கருத்தை அரண் செய்கிறது.. இப்போது சரியாக உத்தராயனம் எந்தத் தேதியில் தொடங்குகிறது? பாவை நூல்கள் தோன்றிய காலத்தைச் சரியாகக் கணிக்க இக் குறிப்புப் பயன்படுமா?இத் துறையில் வானநூற்புலவர் ஆராய்ந்து ஆவன செய்வார்களாக.



சூர்யனார் கோவில் (நவக்ரஹம்)





# பழையாறைத் திருக்கோயில்கள்

புலவர் வே. மகாதவேன் எம். ஏ.

## 1. பழையாறை

கும்பகோணத்திலிருந்து பேருந்து வழியாக முழையூரினை அடையலாம். முழையூரில் இருந்து பம்பப்படையூர் என்ற இடத்திற்குச் செல்ல வேண்டும். இங்கே சாலையோரத்தில் அமைந்திருக்கிறது பகவதியம்மன் ஆலயம். இவ்வாலயத்தின் வலப்புறம் திருமலைராயன் ஆறு ஓடுகிறது. இவ்வாற்றைக் கடந்து, திப்பிராயபுரத்துக்குச் செல்லும் மட்சாலையில் ஒரு கற்றொலைவு சென்றால் பழையாறு என்ற ஊரினை அடையலாம். இவ்வூரே 'பழையார்' என இன்று அழைக்கப்பெறுகிறது. இங்குச் சோமநாத ராலயம் உள்ளது. சோமகலாம்பிகை என்பது அம்பிகையின் திருநாமம்.

### வைப்புத் தலம்

பழையாறையை ஞானசம்பந்தர்,

'ஆறை வடமாகறல் அம்பர்ஐயா
றணியார்
பெருவேளூர் விளம்பர் தெங்கூர்"

என்னும் திருக்ஷேத்திரக்கோவையில், 'ஆறை' எனக்குறிப்பர். 'பழையாறை' திருநாவுக்கரசர் சுந்தரர் பதியங்களிலும் கூறப் பெற்றுள்ளது. எனவே இது ஒரு வைப்புத்தலம்.

### சிவக்ஷேத்திரச் சிவநாமக் கலி வெண்பா

பழையாறை நகரில் சோமேசர் சோமகலா நாயகியுடன் கோயில் கொண்டுள்ளதாகக் குறிப்பர் உமாபதி சிவாசாரியார்.

"- இட்டமிகும்
பார்மகிழ வாழும் பழையாறை
ஊர்மேவும்
சோமகலா நாயகிசேர் சோமேசா"

என்பது சிவக்ஷேத்திரச் சிவநாமக் கலிவெண்பா.

### கல்வெட்டும் இலக்கியமும்

சோமநாதராலயத்தில் கல்வெட்டுக்கள் இல்லை. எனினும் பழையாறையைப் பற்றிப் பொதுவாக அமையும் குறிப்புக்கள் அனைத்தும் இவ்வூரைப் பற்றியனவேயாகும்.

செய்ய சடையார் பழயாறை
எய்த அதனில் செல்பொழுதில்
மையில் அமணர் மறைத்தவட
தளியில்மன்னும் சிவனாரை

என்றும்,

"சண்பை வரும்பிள்ளையார்
பழையாறை எய்து தற்கு"

என்றும் சேக்கிழார் அருளியுள்ளமை இவ்வாலயத்தின் தொன்மை காட்டுவதாகும். அமர் நீதிநாயனார் வாழ்ந்த தலம் இது. இதன் தொன்மைச் சிறப்பை இலக்கியங்கள் விளக்குகின்றன.



### இன்றைய நிலை

இடிந்த கோபுரம் எதிர் கொண்டழைக்கிறது; எனினும் வழிபாட்டுச் சிறப்புக் குன்றாமை மனத்திற்கு மகிழ்ச்சியூட்டுகிறது. நாட்டியச் சிற்பங்களும் குதிரை மேல் வீரர்கள் உருவங்களும் மிக அழகாகப் படைக்கப்பட்டுள்ளன.

மண்டபப் பகுதிகள் பலவற்றை உடையது இவ்வாலயம். இது ஒரு கலை எழில் நிலையம். யானையும் குதிரையும் இழுப்பதாக அமைந்துள்ள முன்மண்டபம் சோழர் காலக் கலைத்திறனுக்கு எடுத்துக்காட்டெனலாம். இம் மண்டபத்துள்ள சிவபெருமான், ஆறுமுகன், கயிலாயநாதர் திருவுருவங்கள் கண்டாரை மயக்குவனவாம்.

மூன்றடுக்குகளை உடைய அழகிய ஸ்ரீவிமானம் சிற்பக் கலையின் எடுத்துக் காட்டாகத் திகழ்கிறது. இராவணன் கயிலையைப் பெயர்க்கும் காட்சி, கஜசம்ஹாரம், நரசிம்மாவதாரம், உமாசகிதர் உருவங்களும் கோட்டச் சிலைகளும் கண்டவர் நெஞ்சகலாக் காட்சிகளாம்.

காமக் கோட்டப் படிக்கட்டினருகில் நரசிம்மாவதாரச் சிற்பங்கள் வடிக்கப் பட்டுள்ளன.

## 2. பழையாறை - வடதளி

கும்பகோணத்திலிருந்து பேருந்து மூலமாக முழையூர் என்னுமிடத்திற்குச் செல்ல வேண்டும். முழையூரில் உள்ள இக்கோயில் 'வள்ளலார் கோயில்' எனவும் 'தருமபுரீச்வரர் கோயில்' எனவும் கூறப்பெறுகின்றது. இது ஒரு மாடக் கோயில். இது அழியும் நிலை நோக்கி அடிவைக்கத் துவங்கியுள்ளது.

### பெரியபுராண வரலாறு

திருநாவுக்கரசர் பழையாறை வடதளி எனும் தலத்தை அடைந்தார். அங்குள்ள திருக்கோயில் விமானத்தைக் கண்டு வணங்கிய அடிகள் அது சமணரால் மறைக்கப் பெற்றிருத்தலைக் கண்டு மனம் வருந்தினார்; 'சிவன் திருவுருவைக் கண்டாலன்றிப் போகேன்' எனக்கூறி உண்ணாநோன்பு மேற் கொண்டார். இறைவன் பழையாறை மன்னன் கனவில் தோன்றி,

"அறிவில் அமணர் நமைமறைப்ப
இருந்தோம் என்றங் கடையாளக்
குறிகள் அறியச் செய்தருளி
நம்மை அரசு கும்பிடுவான்
நெறியில் அமணர் தமைஅழித்து
நீக்கிப் போக்கு"

என்றருளினார். அரசன் அமைச்சருடன் விரைந்தான்; அருள்செய்த அடையாளங்களைக் கண்டான்; அமண் வஞ்சனையை நீக்கினான்; தூரறுத்தான்; விமானத்தை விளக்கமுறச் செய்தான்; வழிபாட்டர்ச்சனைக்கு நிவந்தம் நல்கினான், இறைஞ்சினான்; ஞானஅரசர் வாகீசரும் கோயிலுட்புக்குத் 'தலை எலாம்' எனத் துவங்கும் திருக்குறுந்தொகை பாடினார் என்பது பெரியபுராணம்.

"ஆளுடைய பிள்ளையார்
செப்பருஞ்சீர்த் திருவாறை வடதளியில்
சென்று இறைஞ்சி
ஒப்பரிய தமிழ் பாடி
மகிழ்ந்தார் . . . . " என்கிறது பெரியபுராணம்.

### அகச்சான்று

திருநாவுக்கரசர் சமணர் மறைத்திருந்த வடதளிநாதரை வெளிப்படுத்தியமை பெரிய புராண வரலாறு.

"தலைஎலாம் பறிக்கும் சமண் கையருள்
நிலையினான் மறைத்தால் மறைக்
கொண்ணுமோ
அலையி னார்பொழில் ஆறை வடதளி
நிலையினானடி யேநினைந் துய்ம்மினே"

என்னும் திருக்குறுந்தொகைப் பாடல் இவ்வர லாற்றினை விளக்கும் அகச் சான்றாகும்.

### ஊரும் பேரும்

திருவாவுக்கரசர் அருளிய திருக் குறுந்தொகையில்

'பழையாறை வடதளிக் கண்டார்'
'பழையாறை வடதளி யுடையார்'
'பழையாறை வடதளிச் சோதி'
'பழையாறை வடதளி நாதன்'
'பழையாறை வடதளி நிருத்தன்'

எனவும்,

'ஆறைவடதளி நிலையினான்'
'ஆறைவடதளி வள்ளல்'
'ஆறைவடதளி தெருட்டர்'
'ஆறைவடதளி மேயவன்'

எனவும் ஊரின்பெயரும் கோயிலின் பெயரும் உரைக்கப் பெறும். இக்கோயிலின் பெயர் வடதளி என்பதில் மாறுபாடு இல்லை. ஆனால் ஊரின் பெயரோ பழையாறை எனவும் ஆறை எனவும் கூறப்பெற்றுள்ளது. ஆறை என்னும் ஊரின் பெயர் அதன் பழமை காரண மாகப் பழையாறை எனப் பெற்றது எனலாம்.

## தஞ்சைக் கல்வெட்டில்

பல்லவர்காலத் தொன்மை யுடையதாய இத் திருக்கோயிலைத் தஞ்சைக் கோயிலில் உள்ள இராசராசன் கல்வெட்டு குறிப்பிடுகிறது. இராசராசன் I தஞ்சைத் தளிச்சேரிகளில் குடியமர்த்திய பெண்டிருள் பழையாறை வடதளிக்குரியவர் பதின்மூவர். அவர்கள் பற்றிய விவரம் வருமாறு :-

தஞ்சை இராசராசேச்சரமுடையார் தெற்குத் தளிச்சேரியின் தென்சிறகில் 26 ஆம் வீட்டில் நக்கன் வீரமணி என்பவளும், 27 ஆம் வீட்டில், 'நக்கன் தென்னவன் மாதேவி' என்பவளும், 33 ஆம் வீட்டில், 'நக்கன் சோமகுலசுந்தரி' என்பவளும், வடசிறகில், 88 ஆம் வீட்டில், 'நக்கன் நயனவல்லி' என்பவளும், 89 ஆம் வீட்டில் 'நக்கன் பெற்றதிருவும்' குடியேற்று விக்கப்பெற்றனர்.

## வடக்குத்தளிச்சேரி தெற்குச் சிறகில்

53 ஆம் வீட்டில், 'நக்கன் அமுதம்' என்பவளும், 55 ஆம் வீட்டில், 'நக்கன் ஏகவீரி' என்பவளும், 54 ஆம் வீட்டில், 'நக்கன் சூளாமணி' என்பவளும், 78 ஆம் வீட்டில் 'நக்கன் ஒருப்பனை' என்பவளும்,



வடசிறகில் 8 ஆம் வீட்டில், 'நக்கன் சீலசூளாமணி' என்பவளும், 52 ஆம் வீட்டில், 'நக்கன் இராமி' என்பவளும், 53 ஆம் வீட்டில், 'நக்கன் சிங்கடி' என்பவளும் குடியேற்றுவிக்கப் பெற்றனர். பேரளவிலான இத்தளிச்சேரிப் பெண்டிர் தஞ்சைக்குத் தருவிக்கப்பட்டமை பழையாறை வடதளியின் சமயச் சிறப்பினைக் காட்டும் சான்றாகும்.

## கல்வெட்டுக்கள்

பழையாறை வடதளியில் இரண்டு கல்வெட்டுக்கள் உள்ளன. இவை பிற்காலத்தன. இவற்றுள் ஒன்று, சகம் 1375 (கி.பி. 1453-இல்) ஸ்ரீமுக வருடம் சித்திரை மாதம் பொருவனூரினைச் சேர்ந்த, வாணாதராயன் நரசிங்கதேவன் என்பவன் பழையாறை வடதளி மகாமண்டபத்தையும் சோபானங்களை (படிக்கட்டுக்களை) யும் கட்டியதாகக் கூறும்.

மற்றொரு சாசனம், நரசிங்கதேவனால் தூண்கள் செய்விக்கப் பெற்றதாகக் கூறும். இவன் மஹாமண்டபம் கட்டிய. வாணாதராயன் நரசிங்கதேவனே யாகலாம்.





## இன்றைய நிலை

கோயிலின் மேற்குப் புறத்தே கோபுர வாயில் அழிவினை நோக்கி அடியிடுகிறது; இடிபாடுகள் உடையது. மேல் தளங்கள் இல்லை.

கோயிலுக்கு வெளிப்புற மதில் இல்லை. இலிங்க பாணங்கள், இரண்டு நந்திஉருவங்கள் முற்றத்தில் இறைந்து கிடக்கின்றன.

மாடக்கோயிலின் மேற்புறத்தை அடை விக்கிறது, ஆலயத்தின் வலதுபுறத்திலுள்ள படிக்கட்டு. இடையிலமைந்த புழையில் முனிவர் திருவுருவும், அதிகார நந்தியின் அழகுருவும் அமைந்துள்ளன.

கோயில் புறமதில் கருவறையில் உள்ள அர்த்தநாரியுருவம் அழகியது; பிரமன், லிங்கோத்பவர், தென்முகக் கடவுள் ஆகிய கோஷ்டச் சிலைகள் காணப்படுகின்றன.

திருக்காமக் கோட்டமுடைய நாச்சியார் 'விமல நாயகி' என்று அழைக்கப்பெறுகிறார்.

## 3. ஆறைமேற்றளி

'பழையாறை மேற்றளி' பழையாறையின் மேற்குப்புறத்திலிருந்த திருக்கோயிலாகும். திருமேற்றளி உள்ள இடம் இக்காலத்தே, 'திருமத்தடி' எனவும் 'திருமத்தழி' எனவும் வழங்கப்பெறுகிறது.

குடந்தையிலிருந்து பட்டீச்வரம் செல்ல வேண்டும்; பட்டீச்வரத்திலிருந்து சுவாமி மலைக்குச் செல்ல ஒரு குறுக்கு வழியுண்டு. இது கப்பிச்சாலை; பஸ் வசதி இல்லை. இவ்வழியாக மேற்கு நோக்கிச் சென்றால் கோபிநாதப் பெருமாள் (கோணப்பெருமாள்) கோயிலுக்குச் செல்லும் வழியில், 'கோபிநாதபுரம்' செல்லும் பாதை அமையும். இப்பாதையின் மேற்புறத்தே 'ஆறை மேற்றளி' அமைந்துள்ளது. இவ்விடம் சுந்தரப்பெருமாள் கோயிலில் இருந்து கிழக்கே இரண்டரைக் கல் தொலைவில் உள்ளது. திருவலஞ்சுழியிலிருந்தும் இவ்விடத்தை அடையலாம்.

## மேற்றளி - ஒருவைப்புத்தலம்

சுந்தரமூர்த்தி சுவாமிகள் தமது திருப்புறம்பயத் திருப்பதியத்தில்,

"அங்கம் ஓதியோர் ஆறைமேற்றளி
நின்றும் போந்துவந் தின்னம்பர்த்
தங்கி னோமையும் இன்ன தென்றிலர்
ஈசனார் எழு நெஞ்சமே
கங்கு லேமங்கள் கொண்டு வானவர்
ஏத்தி வாழவர் தாம் தொழும்
பொங்கு மால்விடை ஏறிச் செல்வப்
புறம்ப யம்தொழப் போதுமே"

எனப்பாடுவார். பழையாறை மேற்றளி இப்பாடலிற் கூறப்பட்டமையின் இது வைப்புத்தலமாயிற்று. இக் குறிப்பால் முதல் நரசிம்மபல்லவன் காலத்திய தொன்மை புலப்படும். சுந்தரர் பழையாறையை ஆறை என்று குறித்துள்ளமை நோக்கற்பாலது.

## பெரியபுராணத்தில்

'திருவாறை மேற்றளியில் திகழ்ந்திருந்த
செந்தீயின்
உருவாளன் அடிவணங்கி

வழிபட்டார் திருஞானசம்பந்தர் எனப் பெரியபுராணம் கூறும். சுந்தரர் இத்தளி இறைவனை வழிபட்டமையை,

"செம்பொன் மேருச் சிலைவளைத்த
சிவனார் ஆறை மேற்றளியில்
நம்பர் பாதம் பணிந் திறைஞ்சி"

என்று சேக்கிழார் குறிப்பர். இவர்கள் வழிபட்ட

காலத்துப் பாடிப் பரவிய பனுவல்கள் கிடைத்தில.

## கல்வெட்டுச் செய்தி

பல்லவர் காலத் தொன்மையுடைய இவ்வாலயத்தில் கல்வெட்டுக்கள் இல்லை. பிறவூர்க் கல்வெட்டுக்களிலும் இவ்வாலயம் குறிக்கப்பெறவில்லை. பழையாறையில் இருந்த

பல ஆலயங்களைக் குறிக்கும் தஞ்சை தளிச்சேரி நிவந்தக் கல்வெட்டும் இவ்வாலயத்தைக் குறித்திலது. எனவே சோழர் காலத்திலேயே இவ்வாலயம் சிறப்புக் குன்றியதோ என்னும் ஐயம் தோன்றுகிறது.

### இன்றைய நிலை

கோயிலின் கோபுரம் முற்றிலும் அழிந்துள்ளது. இது குறைந்தது மூன்று நிலைகளையேனும் உடைய கோபுரமாக இருந்திருத்தல் வேண்டும். கோபுரவாயிலின் நுழைவுப்பாதை அடைபட்டு மேடாகக் காட்சி தருகிறது. கோபுரவாயிலின் வெளிப்புறத்தில் நந்தி ஒன்று காணப்படுகிறது.

மதிலிலாத் திருச்சுற்று; மரங்கள் மண்டியிருக்கும் நிலை; ஒரு காலத்தே பெரிய திருச்சுற்றாலை யுடையதாக இருந்த ஆலயம் இது. சுமார் இரண்டடி உயரத்தில் ஒரு மேடை! இதன் மேலமைவது நந்தி. நந்திமண்டபம், முன்மண்டபம், கருவறை ஆகியவை மட்டும் கொண்டது இச்சிற்றாலயம்.

கருவறைத் தென்புழையில் ஆலமர் செல்வரைக் காணோம்; லிங்கோத்பவரோ சுதையுருவம். ஆனால் வடபுறப் புழையுருவாம் 'பிரமன்' அமர்ந்த கோலம்; நெஞ்சில் நிலைத்த இடம் பெறும் அழகிய திருவுருவம். ஒரு தள விமானத்தின் கீழ் அருள்பாலிக்கும் இலிங்கத் திருமேனி மிகச் சுந்தரத் திருவுருவாக உள்ளது.

### ஞானசம்பந்தர் மேடு

கோயிலின் வடமேற்கே ஒரு மண்மேடு காணப்படுகிறது. இங்குள்ளார் இதனை 'ஞானசம்பந்தர் மேடு' என்பர். சிலர் 'நந்தமேடு' என்பர். இம்மேடு உண்டான காரணம் பற்றிப் பல கதைகள் உரைக்கப் பெறுகின்றன. அவை சற்றேறக் குறைய ஒரே மாதிரியானவை.

ஆனால் அக்கதைக்கும் ஞானசம்பந்தருக்கும் சற்றும் தொடர்பில்லை. அக்கதை பின்வருமாறு: -

"பட்டத்தரசியினும் காமக்கிழத்தியின் மேலன்புடையவனாக வாழ்ந்து வந்தான், சோழ அரசன் ஒருவன். ஒருகால் ஒரு வணிகன் மிகவும் விலை உயர்ந்த புடவை ஒன்றினை அவனிடம் விற்க வந்தான். அப்புடவையோ இழை ஒன்று ஆயிரம் காசு பெறுவது. பட்டத்தரசி அப் புடவையைத் தனக்குப் பெற்றுத் தருமாறு சோழனை வேண்டினாள்; அவன் மறுத்தான்; மாறாகக் காமக்கிழத்திக்கு வாங்கித் தந்தான்; வணிகனிடம் சிறிது பொருள் தந்து பின்னர் வருமாறு கட்டளை இட்டான். வணிகன் சென்றபின் பண்டாரத்தை நோக்கினான் சோழன்; வணிகனுக்குத் தரவேண்டிய பாக்கியைப் பொன்னாகத் தன்னால் கொடுக்க இயலாது என்பதனை உணர்ந்தான்; உடனே பொன்னால் நாணயம் அமையும் முறை (Gold Standard) யை மாற்றித் தோலால் நாணயம் செய்வித்தான்; தொகை பெற வந்த வணிகனிடம் தோல் நாணயங்களைத் தந்து நாணயம் காத்தான். அவ் வணிகன் இட்ட சாபத்தால் இப் பகுதியில் இருந்த அரண்மனை மண்மேடாயிற்று" என்பது அக்கதை.

"விண்பொருநீள் மதிளாறை மேற்றளி"

என்பர் சேக்கிழார். இக் கோயிற்குரிய பகுதியாம் மதிலோ ஏனைய கட்டடப் பகுதியோ அழிந்து மேடாகியிருக்கும்; அரண்மனை அங்கிருந்திருக்க வாய்ப்பில்லை எனலாம்.

## 4. பழையாறைத் தென்தளி

பழையாறை மாநகரின் தெற்குப் பகுதியில் இருந்த சிவாலயம் பழையாறைத் தென்தளி யாகும். தேவார மூவரின் திருப்பதியங்களில் இவ்வாலயம் பற்றிய குறிப்புக்கள் இல.

இவ்வாலயம் சோழர் காலத்தில் சிறந்திருந்த தென்பதைச் சாசன வாயிலாக நிறுவவியல்கிறது. தஞ்சைப்பெருவுடையார் கோயில் தளிச்சேரிகளில் இராசராசன் குடியேறப்பண்ணிய பதியிலார் நானூற்றுவருள் பழையாறைத் தென்தளிக்குரியார் நால்வராவர்.

தஞ்சைத் தளிச்சேரி தெற்கில் வடசிறகில் 20-ஆம் வீட்டு, 'நக்கன் பெற்றதிரு' என்பவளும்,

வடக்குத் தளிச்சேரி தென்சிறகில் 51-ஆம் வீட்டு, 'நக்கன் ஆச்சம்' என்பவளும், இதே பகுதியில் 52-ஆம் வீட்டுச் 'சிறிய நக்கன் ஆச்சி' யும்,



வடசிறகு 51ஆம் வீட்டு, 'நக்கன் பட்டி'யும் பழையாறைத்தென்தளிக்குரியார் என்பது தஞ்சைக் கல்வெட்டுச் செய்தி.

இச்சான்றுக்கு முன்னும் பின்னும் இக்கோயில் பற்றிய குறிப்புக்கள் இல. பழையாறையின் தென்பகுதியில் பலகால் முயன்றும் இக்கோயில் எது எனக் கண்டுபிடிக்க இயலவில்லை. அதுவேறு பெயருடன் நிலவுகிறதா? அன்றிக்காலவெள்ளத்தில் அழிந்ததா? என்பதற்கும் திட்டமான விடை கூற இயலவில்லை.

## 5. திருப்பட்டீச்வரம்

திருப்பட்டீச்வரநாதரும் பல்வளையம் மையும் வீற்றிருந்து அருள்பாலிக்கும் ஆலயம் பட்டீச்வரம். கும்பகோணத்தில் இருந்து பேருந்து வசதியுண்டு; தாராசுரத்தில் இருந்து தென்மேற்கிலமைவது. காவிரித்தென்கரைத் தலங்களுள் இது 23ஆவது தலம்.

### திருஞானசம்பந்தர் திருப்பதியம்

திருஞானசம்பந்தர் பட்டீச்வரம் திருக் கோயிலைப் பாடியுள்ளார். அது, 'பாடல்மறை' எனத் துவங்கும் திருப்பதியமாகும். இத் திருப்பதியம் பல்லவர் காலத்திலேயே இவ்வா லயம் சமயச் சிறப்புற்றிருந்தமை காட்டுவதாகும்.

"சேரவரும் தொண்டருடன்
திருப்பட்டீச்சரம் அணைந்தார்"
"சென்றணைந்து திருவாயிற்
புறத்திறைஞ்சி உள்புக்கு
வென்றிவிடை யவர்கோயில்
வலங்கொண்டு வெண்கோட்டுப்
பன்றிகிளைத் தறியாத
பாததா மரைகண்டு
முன்தொழுது விரைந்தெழுந்து
மொழிமாலை போற்றிசைத்தார்"

என்பார் சேக்கிழார்.

### திருக்கோயில் எங்கிருந்தது?

திருப்பட்டீச்சரம் இருந்த பகுதியின் பெயரைத் திருஞானசம்பந்தர் தம் திருப் பதியத்தில் குறித்துள்ளார். அவர் பல அடைமொழிகளைத் தந்து பழையாறை நகரையும் ஆலயம் இருந்த பகுதியையும் குறிப்பர்.

### மழபாடி நகர்

"பட்டிசரம் திருக்கோயில் மழபாடிநகரில் இருந்தது. அந்நகருக்கு நிகரான பகுதி அம்மண்ணுலகில் இல்லை".

"மண்ணின் மிசை நேரின்மழ பாடிமலி
பட்டிசரம்"

என்கிறார் ஆளுடையபிள்ளையார். இதனால் பட்டீச்சரக் கோயில் இருந்த பகுதி 'மழபாடி' எனப்பட்டமை அறியப்பெறும்.

### பழையாறைநகர்

"பட்டீச்சரம் உடையாரை வாயால் புகழ்ந்துரைத்தால் மூவகை வினைகளும் அழியும்; அவர்கோயில் கொண்டுள்ள இடம் பழைசைப்பதி; அது உலகில் மிகுந்த புகழ்படைத்த பதி; கொன்றைமாலையணிந்த சிவபெருமானின் பெருவிருப்பிற்குரியது" என்பர் சம்பந்தர்.





"காரின்மலி கொன்றைவிரி தார்கடவுள்
காதல்செய்து மேயநகர்தான்
பாரின்மலி சீர்பழைசை பட்டிசரம்
ஏத்தவினை பற்றழிதலே"

என்பது அவர் அருள்வாக்கு. இதனால் பட்டிசர மிருந்த இடம் பழையாறையாதல் பெறப்படும்.

பழையாறை இங்குப் பழைசை எனப்பட்டுள்ளது. 'ஆறை' என்னும் பெயர் தேவார மூவரால் கையாளப்படும். இவ்வாறை என்பதும் பழையாறையின் பெயரேயாம். பழமை காரணமாக இது பழையாறை எனப்படும். 'பழையாறு' என்பது ஊரின் அருகமையும் ஆறுகளின் காரணமாக அமையும் பெயராகலாம்.

## மழபாடி - பழையாறையின் ஒரு பகுதி

"மழபாடி" என்ற பகுதியில் பட்டிசரம் இருந்தது என்ற திருஞானசம்பந்தர், அது பழையாறையின் ஒரு பகுதியேயாதலை.

"... ... ... பொழில்சூழ்
பழசையுள்
மாடமழ பாடியுறை பட்டிசரம் ....."

"... ... ... பழயாறை மழ
பாடி அழ காயமலி சீர்
பாலையன நீறுபுனை பட்டிசரம்"

என்ற தொடர்களுட் குறிப்பர். இவற்றால் பழையாறை பல பகுதிகளை உடையதாக இருந்தமையும், அவற்றுள் ஒரு பகுதி 'மழ பாடி' என்பதும் அப்பகுதியிலேயே 'பட்டிசரம்' இருந்தது என்பதும் அறியப்பெறும்.

பழங்காலத்தே கோயிற்கொரு பெயரும் ஊருக்கொரு பெயரும் வழங்கப் பெறுவதுண்டு. இங்கும் கோயிற்கும் கோவில் இருந்த பகுதிக்கும் வேறுவேறு பெயர்கள் ஞானசம்பந்தர் காலத்திலேயே வழங்கப் பெற்றன. பழையாறை-நகரின் பெயர்; மழபாடி - கோயில் இருந்த பகுதியின் பெயர்; பட்டிசரம் - சிவாலயத்தின் பெயராதல் காண்க.

"மடைக்கயல் வயற்கொண்மழ.
பாடிநகர் நீடுபழை யாறை
அதனுள்
படைக்கொடு கரத்தன்மிகு
பட்டிசரம் ஏத்தவினை பற்றறுதலே"

எனவும்,

"மந்தமலி சோலைமழ பாடிநகர்
நீடுபழை யாறைஅதனுள்
பந்தமுயர் வீடுநல பட்டிசரம்" எனவும்,

அமையும் திருப்பாடல்களுக்கு "மழபாடி யாகிய நீடிய பகுதியைத்தன்னுள் கொண்ட பழையாறை மாநகரில் இருந்த பட்டிசரம்" என்றே பொருள்கொள்ள வேண்டும்.

## பல்வளையம்மை

சில திருப்பதியங்கள் அத்தலத்திற்குரிய இறைவியின திருநாமத்தைக் குறிப்பதுண்டு. திருஞானசம்பந்தரின் திருப்பதியம் இறைவியின் திருநாமம் 'பல்வளையம்மை' என்பதனைக் குறிக்கும்.

"பாடல்மறை சூடல்மதி பல்வளையோர்
பாகமதில் மூன்றொர் கணையால்
கூடெரி யூட்டிஎழில் காட்டிநிழல்
கூட்டுபொழில் சூழ்பழசையுள்
மாடமழ பாடியுறை பட்டிசரம்....."

என்பது திருப்பாடல்.

## முத்துப்பந்தர் பெற்றது

திருஞானசம்பந்தர் வலஞ்சுழியிலிருந்து பழையாறை எய்துவதற்கு அடியார்களுடன் நடந்தருளுங்கால், 'ஆறைமேற்றளி' 'திருச்சத்திமுற்றம்' ஆகிய தலங்களை வணங்கித் திருப்பட்டிசரம் பணிதற்குவந்தார். அக்காலம் வெம்மை தரும் வேனிற் காலம். வெப்பம் தணிக்க விரும்பினான் இறைவன். திருஞானசம்பந்தர் நிழல்பெற முத்துப்பந்தரை அனுப்பினான் ஆண்டவன். சிவபூதங்கள் தமிழ்வல்ல ஞானசம்பந்தர் முடி மீதில் தம்மை அறியாதவாறு தண்தரளப் பந்தர் பிடித்துப் 'பட்டீச்வரர் எம்மை விடுத்து அருள் புரிந்தார்'



என்று இயம்பின. சம்பந்தர் இறையருளை வியந்து முத்துப்பந்தலின் நிழலில் வந்தார். தேவர் புதுமலர் அப்பந்தரைப் பூப்பந்தராக்கியது; இறைவன் திருவடி நிழலேபோல அது சம்பந்தர்க்கு இன்பம் தந்தது. இதன்பின் ஞானசம்பந்தர் அத் திருக்கோயிற்புக்கு இறைவனை வணங்கிப் பதிகம் பாடினார் என்பது பெரியபுராணம்.

## நந்தி விலகியதலம்

முத்துப்பந்தல் பெற்ற திருஞான சம்பந்தர் வருகைதரும் காட்சியைத் தான் காணவும், தம்மைத் தமிழ் ஞானசம்பந்தர் தரிசிக்கவும் இறைவன் திருநந்தி தேவரை விலகியிருக்குமாறு அருளியதாகப் புராணங்கள் கூறும். இது சேக்கிழார் சொல்லாத செய்தி. இக்குறிப்பினை முன்கோபுரத்திற் கருகில் உள்ள நந்தியும், உள்மண்டபத்தில் உள்ள நந்தியும் விலகியதாக அமைக்கப் பெற்றுள சிற்பச் சிறப்புச் காட்டுவதாகும்;

> "வேண்டு நந்திநீ விலகெ னச்சொனாய்
> பூண்ட அன்புடைப் புகலி வள்ளற்கா
> மூண்ட வெவ்வினை விலக முன்னினும்
> மீண்டுய் வேனருள் பழசை எந்தையே"

என்பது மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் அருளிய திருப்பழசைப் பதிற்றுப்பத்தந்தாதி ஆகும்.

## கல்வெட்டுக்கள் - சில பொதுச் செய்திகள்

பட்டீச்வரம் திருக்கோயிலில் உள்ளனவாக எட்டுக் கல்வெட்டுக்கள் வெளியிடப்பட்டுள்ளன. திருப்பட்டிசரம் பல்லவர்காலத் தொன்மை யுடையதாகிய திருக்கற்றளியாயினும் இத்தொன்மையை நிறுவும் சாசனங்கள் இங்கு இல்லை; சோழர்காலத்திய சாசனங்களும் இங்கில்லை. இங்குத் தொன்மைத்தாய சாசனங்கள் இல்லாமைக்குப் பிற்காலத்தில் செய்விக்கப் பெற்ற திருப்பணிகளே காரணம் எனலாம். பட்டீச்வரம் தேனுபுரீசர் கோயிலில் ஸ்ரீபலிபீடத்தில் இருக்கும் கல்வெட்டொன்று இம்முடிவுக்குவரப் பெரிதும் துணை புரிவதாகும்.

கல்வெட்டாண்டறிக்கை, மூன்று சாசனங்கள் வடமொழி கிரந்த எழுத்திலும் இரண்டு தமிழிலும் ஆக ஐந்து சாசனங்கள் இக்கோயிலில் உள்ளனவாகக் கூறும். இவ்வைந்தில் ஒரு சாசனம் மட்டும் கி.பி. 1592-க்குரியது; ஏனையவற்றுட்காலம் பற்றிய குறிப்புக்களில்லை. மெக்கன்சி தொகுப்பில் உள்ள சாசனங்களில் காலக் குறிப்புண்டு.

## ஒரு வடமொழிச் சாசனம்

திருப்பட்டிசரத்தின் இரண்டாம் கோபுரத்திலுள்ள சாசனங்களில் ஒன்று, "சிதைவுற்றுள்ளது; காலம் பற்றிய குறிப்பு இல்லை; இத்திருக்கோயிலில் செய்யப்பட்ட திருப்பணிகளை உணர்த்துகிறது" என்பது சாசன ஆண்டறிக்கையில் கண்டது. இச் சாசனத்தை ஒத்ததொரு சாசனம் தேனுபுரீசர் கோயிலின் வெளிப்புறச் சுவரில் இருப்பதாகத் தென்னிந்தியக் கோயிற் சாசனத் தொகுதி கூறுகிறது. இது வடமொழி-தமிழ் ஆகிய இரு மொழிப் பகுதிகளை உடையது.

முதற் பகுதியில் உள்ள வடமொழிப் பாடல்களின் பொருள் சரியாக அறியக் கூடுவதாக இல்லை. எனினும் "காவிரித் திருநதி பாய்ந்து அழகூட்டும் சோழநாட்டில் வாழ்வதற்குத் தகுதி அற்றதாக இருந்த காடு அடர்ந்த பகுதியைத் திருத்தி நாடாக்கி வாழ்வதற் கேற்ற வளம் படைத்ததாகச் செய்து, குளம் வெட்டிக் கோயிலைப் பழுதுபார்த்ததாகக்" கூறுவதனை உணரலாம். இதன் பின்னர் உள்ளதான தமிழ்ப் பகுதியில்,





"ராசாதிராச பரமேச்வரர் தருமமாகப் பண்ணினது. திருக்குளமும் திருமண்டபமும் கட்டுவித்துத் திருப்பூசைக்கு நாலுமா முக்காணி நிலம் விட்டது" என்று கூறப்பட்டுள்ளது.

சகம் 1191 ஆம் ஆண்டில் (கி. பி. 1269_ல்) பகுதான்ய சம்வத்சரம் விருச்சிக மாதம் சுக்லபட்சத்து துவிதியையும் ஆதிவாரமும் பெற்ற திரிவோணத்து நாளில், பாண்டிய குலபதி வளநாட்டு ஸ்ரீபட்டீச்வரத்து ஸ்ரீபட்டிச்வர தேவற்குக் கோயில் திருக்குளமும் மண்டபமும் கட்டுவிக்கப் பெற்றதாக இச்சாசனம் கூறும். 'இக்காலக் குறிப்பு மிக முற்பட்டது; தவறானது' எனத் தி. ந. சுப்பிரமணியம் அவர்கள் கூறுவர். இன்னொருநூல் இச்சாசனம் சகம் 1199க்குரியது என்பதும் தவறான குறிப்பேயாகும்.

## கோனேரிப்பட்டன் வெங்கடதீட்சிதர்

கோபுரத்திலுள்ள மற்றொரு வடமொழிச் சாசனம் சகம் 1524க்கு உரியதாகும். இது வசிட்டகோத்திரத்தைச் சார்ந்த கோனேரிப் பட்டனின் மகனான வெங்கடதீட்சிதர் பட்டீச்சரத்திற்குத் தந்த கொடையினைச் சுட்டுகிறது.

## தேவராயன் திருப்பணி

சகம் .1137ஆம் ஆண்டு வீரப்பிரதாப தேவமகாராயன் இக்கோயிலைக் கட்டி 9 1/2 வேலி நிலம் தந்தான். இதனை,

"ஸ்ரீவீரப்பிரதாபதேவமகாராயர் தன்மமாக இக்கோயில் கட்டுவித்ததாகவே பாஷாணா சாரியர் பண்ணிக் கொடுத்தது . . . . . . செத்தொழபுரம் படுகையில் 9 1/2 வேலி"

என்ற கல்வெட்டுப் பகுதியால் அறியலாம்.

இக்கல்வெட்டில் கண்ட ஆண்டு 1337 எனவும் பிரதி செய்யும்போது 1137எனத் தவறுதலாக எழுதப் பட்டிருக்குமெனவும் இக் கல்வெட்டுக்குரிய அரசன் இரண்டாம் தேவராயன் எனவும் கூறுவர்.

இக் கல்வெட்டு "ஸ்வஸ்திஸ்ரீ பாக்யேஸச்யவ (Bhaggesasyava) எனத் துவங்குகிறது. கடபயாதி முறைப்படி இது சகம் 1514_ஐக் குறிக்கும்.

## தலப் பெருமை

மற்றொரு கல்வெட்டு இரு வடமொழிச் செய்யுட்களாலாகியது. இது விருத்தாசலம் கமலாலயம் (திருவாரூர்), சிதவனம் (திருவெண்காடு), சாஹ்யாவனம் (திருச் சாய்க்காடு), மந்தரம், கைலாசம், ப்ரவயார்ணயம் (மன்னார்குடி) என்னும் தலங்களைப் புகழ்கின்றது. முன்னெழு தலங்களொடு ஒத்த பெருமை யுடையதாகப் பட்டி சரம் புகழப்பட்டுள்ளது நோக்கற்குரியது.

## தமிழ்க் கல்வெட்டுக்கள்

இங்குள்ளவை இரு தமிழ்ச் சாசனங்கள்; இவற்றுள் வெளிப்பிரகாரத்துப் பலிபீடத்தில் உள்ள கல்வெட்டு முற்பட்டதாம்; ஆனால் அது சிதைந்துள்ளது. நிலதானம் பற்றிய சில செய்திகளை இது தருவதுடன்,

திருஞானசம்பந்தன் மடம்
திருநாவுக்கரசன் மடம்
திருமூல தேவன் மடம்

என்னும் திருமடங்களின் பெயர்களையும் குறிக்கிறது.

இரண்டாம் கோபுரச் சுவரிலுள்ளதொரு சாசனம், 'வழக்குமுறி' ஒன்றினைக் காட்டுகிறது. இது பவ ஆண்டு ஆனித் திங்கட்குரியதாகும். பட்டிசரத்திலிருந்த பட்டு நூற்காரர், செட்டிமார்கள் ஆகியோரிடையில் கருத்து வேறுபாடு உருவாயிற்று; இறைவன் திருக்கலியாண விழாவில் அடைக்காயமிர்து பெறுவதில் முந்துரிமை யாருக்குரியது என்பது அவர்முன் தோன்றிய வினா. 5 பணம் மதிப்புள்ள புடவையும் 30 காய் 100 வெற்றிலை ஆகியவற்றைத் தருவோர் முதன் முதலில் வெற்றிலை பாக்குப் பெறலாம் என்று முடிவு தரப் பெற்று, அச்சிக்கல் தீர்க்கப் பெற்றது. 'நாயக்கரய்யன் திருவடி யாணை' என்னும் காப்புரையுடன் முடியும் இச்சாசனம் கோவிந்ததீட்சிதரை, 'தீக்ஷித ஸ்வாமி' என்று கூறும். இவ் வழக்குமுறிக் கல்வெட்டு கி.பி.1634க் குரியது. இச் சாசன காலவரசன் இரகுநாத நாயக்கனாகலாம்.



## 6. திருச்சத்திமுற்றம்

பட்டிசரம் துர்க்கை கோயிலுக்கருகில் சாலையிலிருந்து தென்புறம் நோக்கினால் காட்சி தருவது சத்திமுற்றப் பெருங்கோயில்.

### தேவார மூவர்

திருஞானசம்பந்தர் திருச்சத்தி முற்றத்துக்கு வருகைதந்தார் என்பர் சேக்கிழார்.

'திருச்சத்தி முற்றத்தில் சென்றெய்தி
திரும்லையாள்
அருச்சித்த சேவடிகள் ஆர்வமுறப்
பணிந்தேத்தி'

என்பது பெரியபுராணம். சுந்தரர் இத் திருத்தலத்தைக் குறிப்பர். திருநாவுக்கரசரொடும் தொடர்புடையது இத்திருத்தலம்.

### திருநாவுக்கரசர் திருப்பதியம்

திருச்சத்திமுற்றம் திருக்கோயில் திருநாவுக்கரசரின் 'கோவாய் முடுகி' என்று துவங்கும் திருப்பதியம் பெற்ற தலம். இப்பதியம் உமை வணங்கிய தலவரலாற்றுச் செய்தியைத் தருவதுடன் இறைவனின் திருநாமம் 'சிவக்கொழுந்தீசர்' என்பதனையும் பாடல் தொறும் குறிக்கிறது.

### பெரியபுராணம் கூறியது

நந்தியம் பெருமானின் அருகி லமைந்த பலிபீடத்தில் இரு திருவடிகள் காணப்பெறுகின்றன. இத் திருவடிகள் திருநாவுக்கரசருக்கு இறைவன் திருவடி சூட்டிய வரலாற்றொடு தொடர்புடையனவாகும்.

பெரியபுராணம், "திருநாவுக்கரசர் பழையாறையை வழிபட்டுத் திருச்சத்திமுற்றத்தை அடைந்தார். திருச்சத்திமுற்றத்துச் சிவக்கொழுந்தீசரையும் உமாதேவியையும் வழிபட்டு உழவாரப் பணிபுரிந்தார். 'கோவாய் முடுகி' எனத் துவங்கிக் "கூற்றம் வந்து அழிப்பதன் முன்னே உனது மெல்லிய திருவடிகளின் அடையாளம் படுமாறு என் தலைமேல் பொறித்து வைக்க" என்று வேண்டினார். சிவக்கொழுந்தீசர் திருநல்லூர்க்கு வா எனப் பணித்தார்; நாவுக்கரசர் சிவக்கொழுந்தீசரை வணங்கினார்; பின் நல்லூரை அடைந்து ஆங்குத் திருவடி சூட்டப் பெற்றார்" என்று கூறும்.

"சென்று சேர்ந்து திருச்சத்தி
முற்றத் திருந்த சிவக்கொழுந்தை
குன்ற மகள்தன் மனக்காதல்
குலவு பூசை கொண்டருளும்
என்று மினிய பெருமானை
இறைஞ்சி இயல்பில் திருப்பணிகள்
முன்றி லணைந்து செய்துதமிழ்
மொழிமா லைகளும் சாத்துவார்"

"கோவாய் முடுகி என்றெடுத்துக்
கூற்றம் வந்து குமைப்பதன்முன்
பூவா ரடிகள் என்தலைமேல்
பொறித்து வைப்பாய்
எனப்புகன்று
நாவார் பதிகம் பாடுதலும்
நாதன் தானும் நல்லூரில்
வாவா என்றே அருள்செய்ய
வணங்கி மகிழ்ந்து வாகீசர்"

என்பன பெரியபுராணப் பாடல்கள்.

### பெரியபுராணம் கூறாத செய்தி

திருநாவுக்கரசர்,

"கோவாய் முடுகி அடுதிறல்.
கூற்றம் குமைப்பதன்முன்
பூவார்அடிச்சுவடு என்மேல்
பொறித்துவை போகவிடில்
மூவா முழுப்பழி மூடும்கண்
டாய்முழங் கும்தழற்கைத்
தேவா! திருச்சத்தி முற்றத்
துறையும் சிவக்கொழுந்தே"

என்று இறைவனிடம் வேண்டினார். இப் பதியத்திற் றோய்ந்த பிற்காலத்தவர், 'இறைவன் தன் திருவடிகளைக் காட்டித் திருநல்லூர்க்கு வருக! சூட்டுகின்றோம்" என்று கூறியதாகக் கொண்டனர். தலபுராணம் கூறும் இச் செய்தியினை ஸ்ரீ பலிபீடத்தில் உள்ள



திருவடிகள் காட்டுவனவாம்.

### கல்வெட்டுக்கள்-பொதுச்செய்தி

இக்கோயிலில் உள்ளனவான சாசனங்கள் அனைத்தும் தொல்லியல் துறையினரால் படிஎடுக்கப் பெற்றுள்ளன. கல்வெட்டாண்டறிக்கையில் வெளியிடப் பட்டுள்ள சாசனங்கள் ஒன்பதாம். இவற்றுள் இராசாதிராசனுக்குரியன இரண்டு; குலோத்துங்க சோழனுக்குரியன இரண்டு; காலம் அறியப்பெறாதன மூன்று; விசயநகர அரசர் காலத்தன இரண்டு; இவற்றுள் ஏழு சாசனங்களின் மூலங்கள் தென்னிந்திய கோயிற் சாசனத் தொகுதியுள் வெளியிடப்பெற்றுள்ளன.

### ஊரும் கோயிலும்

திருச்சத்திமுற்றம் இக்காலத்தில் பட்டீசுவரத்தின் ஒரு பகுதியாகக் குறிக்கப் பெறுகின்றது. முற்காலத்தே இது பழையாறையின் ஒரு பகுதியாக இருந்தது. 'இராசராசபுரம்' என்பது பழையாறையின் பல பெயர்களில் ஒன்றாகும். இராசகேசரிவர்மன் இராசாதிராசனின் 5 ஆவது ஆட்சியாண்டுக்குரிய சாசனமொன்று 'குலோத்துங்க சோழ வளநாட்டு இராசராசபுரத்துத் திருச்சத்திமுற்றமுடைய நாயனார்' எனக்குறிக்கும். இது போலவே திரிபுவனச் சக்கரவர்த்திகள் இராசேந்திர சோழதேவரின் 23 ஆவது ஆட்சியாண்டுக் குரிய திருவீழிமிழலைக் கல்வெட்டும் கூறும்.

திரிபுவனச்சக்கரவர்த்திகள் கோநேரின்மை கொண்டான் என்னும் பொதுப் பெயருடன் காணப்பெறும் அரசனின் திருவானைக்காவில் உள்ள இரண்டு சாசனங்கள், 'கீழைப் பழையாறாயின இராசராசபுரத்துத் திருச்சத்திமுற்றமுடையார்' கோயில் இருந்ததாகக் கூறும். இச் சாசனங்களான் தாராசுரம் கீழைப் பழையாறு எனப்பட்டமையும் அதனுட் பகுதியாகச் சத்திமுற்றம் இருந்தமையும் பெறப்படும்.

### திருச்சத்திமுற்றம் - பெயராய்வு

சிவனை வழிபட்ட உமை அவனைத் தழுவி வழிபட்டு முத்தமிட்டாள்; சத்திமுத்தம் - சத்திமுற்றமாயிற்று என்பது புராணச் செய்தி. சக்தி சிவபெருமானைத் தழுவிய நிலையில் சத்தி தழுவிய 'உமையார்' என்னும் சிற்ப உருவம் இக்கோயிலில் உள்ளது.

சிவக்கொழுந்தீசரை உமைவழிபட்டமையை,
"தும்பி பம்பும்
மட்டார் குழலி மலைமகள் பூசை
மகிழ்ந்தருளும்
சிட்டா! திருச்சத்தி முற்றத் துறையும்
சிவக்கொழுந்தே"

என நாவுக்கரசர் குறிப்பர். சேக்கிழார் இதனை,

"மருவாரும் குழல்மலையாள் வழிபாடு
செய்யஅருள்
தருவார்தம் திருச்சத்திமுற்றம்"
"திருச்சத்தி முற்றத்தில் சென்றெய்தித்
திருமலையாள்
அருச்சித்த சேவடிகள் ஆர்வமுறப்
பணிந்தேத்தி" என்றும்
"குன்றமகதன் மனக்காதல்
குலவ பூசை கொண்டருளும்
என்று மினிய பெருமான்"

என்றும் பெரியபுராணத்தில் குறிப்பர். சக்தி சிவனை வழிபட்ட இடம் (முற்றம்) என்னும் பொருளில் இக்கோயிலின் பெயர் அமைந்ததெனலாம்.

### இறைவன் பெயர்

இறைவனின் திருநாமம், 'சிவகொழுந் தீசர்' எனத் திருநாவுக்கரசர் தேவாரத்திலும் பெரியபுராணத்திலும் கூறப்பெற்றுள்ளது. இவ்வூரில் உள்ள சாசனங்களினால், 'திருச்சத்திமுற்றமுடையார்' 'திருச்சத்தி முற்றமுடைய நாயனார்' என்னும் பெயர்கள் சோழர்காலத்தே இறைவனின் திருநாமமாக வழங்கியமை அறியப்பெறும். 'திருச்சத்தி முற்றத்துத் திருச்சத்திவனப் பெருமாள்' என்னும் பெயரைக் கி.பி. 1450 (சகம் 1372) க்குரிய



வீரப்பிரதாப தேவமகாராயன் கல்வெட்டு குறிப்பிடுகிறது. 'சத்திவனம்' என்பது இவ்வூர்க்கு நிலவிய பெயர்களுள் ஒன்றென்பது தல புராணநூல்களில் கண்டது. சிவக்கொழுந்தீசர் என்னும் பெயரும் சாசனங்களிற் காணப்பெறுகிறது.

## இராசாதிராசன் கல்வெட்டுக்கள்

இராசகேசரிவர்மன் இராசாதிராசனின் 5-ஆவது ஆட்சியாண்டின் 81-ஆவது நாளுக்குரியதொரு சாசனம், 'திருநறையூர் நாட்டு இராசராசபுரத்துத் திருச்சத்திமுற்ற முடையார்க்கு அரசு திருவாணையின் வண்ணம் பூங்காவிற்காக நிலம் தரப் பெற்றமையைக் கூறுகிறது. இச்சாசனத்தில் அரசனுடைய திருமந்திர ஓலைநாயகம் சோழேந்திர சிங்க மூவேந்த வேளான் உட்படப் பல அதிகாரிகள் கையொப்ப மிட்டுள்ளனர்.

திரிபுவனச் சக்கரவர்த்தி இராசாதிராசதேவரின் ஆட்சியாண்டறியப் பெறாததொரு சாசனம், செயங்கொண்ட சோழமண்டலத்துப் பழையனூர் நாட்டில் இருந்த பழையனூரைச் சேர்ந்த வேதவன முடையான் கருணாகரதேவனாயின அமரகோன் என்பவன் திருச்சத்திமுற்ற முடையார் கோயில் திருமுன் விளக்கெரிப்பிக்க விளக்குத் தண்டுகள் இரண்டும், அவற்றுக்குத் தேவையான யாடுகளும் தந்ததாகக் கூறுகிறது.

இவ்'வமரகோன்' ஒரு அரசியல் தலைவனின் உறவினனாவன். 'பழையானூருடையான் வேதவனமுடையான் அம்மை யப்பன் ஆயின அண்ணன் பல்லவராயன்' என்பவன் இரண்டாம் இராசாதிராசன் காலத்தில் புகழ் சிறந்திலங்கிய அரசியல் தலைவனாவான். இவனை இக்காலத்தனவாய சாசனங்கள் பல குறிக்கும். திரு வலஞ்சுழி, திருச்சத்திமுற்றம் முதலான சில திருத்தலங்களில் திருவிளக்குகள் வழங்கிய 'வேதவன முடையான் கருணாகரதேவனாயின அமரகோன்' என்பவன் 'வேதவனமுடையான் அம்மையப்பனாயின அண்ணன் பல்லவராயன் உறவினனாகலாம் என வரலாற்றறிஞர் கருதுவர்.

## குலோத்துங்கன் காலச் சாசனங்கள்

'வேதவனமுடையான் கருணாகர தேவனாயின அமரகோன்' என்பவனால் இராசாதிராசன் காலத்தில் திருவிளக்குக் காக வைக்கப் பெற்ற ஆடுகளைக் கைக் கொண்டோர் கோயிற்கு நாடொறும் கொடுக்க வேண்டிய நெய்யினைச் சரிவரச் செலுத்தவில்லை; எனவே அவர்களிடமிருந்து ஆடுகட்காக முதற்பொருளாகத் தரப்பெற்ற காசு திரும்பப் பெறப் பெற்றது. மூன்றாம் குலோத்துங்கன் காலத்தில் மேற்படிக் காசினால் திருவிளக்கு எரிப்பிக்க மீண்டும் ஓர் ஏற்பாட்டினைச் சிவப்பிராமணர் செய்தனர் என்பது சாசனச் செய்தி.

திரிபுவனச் சக்கரவர்த்திகள் குலோத்துங்க சோழ தேவனின் இரண்டாவதாட்சியாண்டு 102-ஆம் நாளுக்குரியதொரு சாசனம் இக்கோயில் திருவிளக்கெரிப்பிக்க முதற்பொருளாகக் காசு வைக்கப் பட்டதாகக் கூறுகிறது.

மூன்றாம் குலோத்துங்கனின் 29-ஆவது ஆட்சியாண்டுக்குரியதொரு சாசனம் திருச்சத்திமுற்றமுடையார் கோயில் தேவதான நிலங்கட்கு வரிவிதித்தற்குரிய முறைகளை விளக்குகிறது.

## விசயநகர அரசர் காலம்

இரண்டாம் வாயிலின் உட்புறச் சுவரில் விசயநகர அரசன் பிரசண்டராசன் காலச்சாசனம் ஒன்று காணப்பெறும். இது சகம் 1369 (கி.பி. 1447) க்குரியதாகும். இச்சாசனம் திருச்சத்திமுற்றமுடையார் கோயில் குலோத்துங்க சோழவளநாட்டுத் திருநறையூர் நாட்டில் இருப்பதாகக் கூறும்.

மண்டபக் கீழைச் சுவரிலுள்ள வீரப்பிரதாப தேவ மகாராயர் கல்வெட்டு சகம் 1372 (கி.பி. 1450) க்குரியது. இது திருச்சத்திவனப் பெருமாளுக்கு வழிபாட்டிற்காகவும் பிற தேவைகளுக் காகவும் மகா மண்டலேச்வர திருமலைய தேவ மகாராயன் திருநல்லூர்ப்பற்று நல்லூரை அளித்ததாகக் கூறும்.

இரண்டாம் நுழைவுவாயிலும் கோபுரமும் மகா மண்டலேச்வர கோப்பைய தேவ மகாராயரால் கட்டப் பட்டமையை இக் கோபுர வாயிலின் அடிப்புறத்தில் உள்ள சாசனமொன்று காட்டுகிறது.

இறையக முன்மண்டபத்திலுள்ள தூண்களிலொன்று, "இலுப்பையூர் உடையபிள்ளை ஆண்டார்" என்பவரால் செய்விக்கப் பெற்றதாம். 'நீறணிவார் அடிமை உம்பர் நாயகப் பிச்சன்' என்பார் வேறொரு தூண் திருப்பணி புரிந்துள்ளார்.

## தென்னிந்தியக் கோயிற்சாசனத் தொகுதி

இனித் தென்னிந்தியக் கோயிற் சாசனத் தொகுதியில் (Vol.II Nos 570 to 576) வெளியிடப் பட்டுள்ளனவாகிய ஏழு சாசனங்களைக் காண்போம். அவை கோயில் வெளிப்பிரகாரச் சுவரில் உள்ளன என்று தொகுதி கூறும். இன்று அச் சாசனங்கள் அங்கில்லை.

அவற்றுள் சோழர் காலத்தனவாகக் கொடுக்கப்பட்டுள்ள சாசனங்கள் ஐந்து; இவ்வைந்தனுள் இராசராசன் காலத்தன மூன்று. 571_ஆம் எண்ணுள்ள சாசனம் இராசராசனின் மூன்றாவ தாண்டுக்குரிய சாசனமாகக் கூறப்பெறுகிறது. இது கருணாகர தேவன் என்பவன் திருக்கோயில் திருவிளக்கு இடுவதற்காக முறையே 582,557 பல எடைகளை யுடைய இரு திருவிளக்குகளையும், ஆடுகளையும் தந்ததாகக் கூறுகின்றது. இச் சாசனச் செய்தி சாசன அறிக்கையுட் கண்ட (220 of 1927 ஆம் எண்ணுள்ள) செய்தியோடு பெரும்பான்மையும் ஒத்துள்ளது.

இராசராசனின் ஏழாம் ஆண்டுச் சாசனமொன்று, பாண்டிய குலாசனி வளநாட்டுத் திருச்சத்திமுத்தம் கோயில் நாயனார் ஆதிசண்டேசுவர தேவர்க்குச் சாயரட்சை திருமஞ்சனம் அமுதுபடி முதலியவற்றுக்காகச் சோழபுரத்து விசுவராய முடையான் என்பவன் மூன்று வேலி நிலம் தந்ததாகக் கூறுகிறது.

மூன்றாம் குலோத்துங்கனின் 33_ஆம் ஆண்டுக்குரியதொரு சாசனம், 'பாண்டிய குலாசனி வளநாட்டுச் செல்வொல் வழுத்த முடையான் என்பவன் இக்கோயில் செவக்கொழுந்தீசுவர ஆதிசண்டேசுவர தேவ நாயனார்க்குத் திருத் தேர்க்கும் திருநாளுக்கும் சோழபுரத்திற்குத் தெற்கிலும், விளாயாற்றுக்கு வடக்கிலும் செவ்வாய்க்காலுக்கு மேற்கிலும், திருமேற்ற சோழ வாய்க்காலுக்குக் கிழக்கிலும் பச்சயப்ப உடையான் காலடிக்கோலால் அளந்து நிலம் தந்ததாகக் கூறுகிறது.

இராசராசனின் 23_ஆவது ஆட்சியாண்டில், திருப்பணி நித்திய நைமித்திக வழிபாட்டுக்காக நிலம் தரப்பட்டதனை ஒரு சாசனம் காட்டுகிறது.

இராசகேசரியின் 31_ஆம் ஆண்டுச் சாசனம் கிழாஅர்க்கூற்றத்துத் திருச்சத்தி முற்ற முடையார்க்கு நாலுமாமுக்காணி நிலம் தரப்பட்டதனைக் காட்டுகிறது.

விருபாட்சி தேவ மகாராயர் கல்வெட்டு (1451 ஜூலை 13க்குரியது 264 OF 1927) செவக்கொழுந்தீசுவர ஆதி சண்டேசுவரரிடம் 12 1/2 வேலி நிலம் தரப் பட்டமையைக் கூறுகிறது.





# அறவழி காட்டும் திருமடங்கள்

மலர்க்குழு

## ஸ்ரீகாமகோடி பீடம்

'எல்லா உயிரிலும் இருப்பவன் இறைவன்' 'மனிதன் வாழ்வாங்கு வாழ்ந்தால் தெய்வமாகலாம்' என்னும் தத்துவங்களைப் பரப்பிவரும் அற நிலையம் காஞ்சி காமகோடி பீடம் சங்கரமடம் ஆகும்.

காஞ்சியில் நிலவிய இத் திருமரபு குடந்தைக் காவிரிக்கரையில் திருமடத்தை நிறுவியது காமகோடி பீடாதிபர் நான்காம் சந்திரசேகரர் காலத்திலாகும் (1746 - 1783). இப்பொழுது 68ஆம் பீடாதிபராக அருளாட்சி புரிந்து வருபவர்கள் ஜகத்குரு ஸ்ரீசந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கரா சார்ய சுவாமிகள். ஸ்ரீஜயேந்திர சரஸ்வதி சங்கராசார்ய சுவாமிகள், ஸ்ரீசங்கர விஜயேந்திர சரஸ்வதி சங்கரார்சார்ய சுவாமிகள் ஆகியோர் ஆவர்.

'பக்தர்கள் இருக்குமிடத்திற்கு முனிவர் சென்று நல்வழி காட்டுதல்' என்னும் நெறிக்கு ஏற்ப காஞ்சி அருளாளர்கள் ஊர் ஊராக யாத்திரைசென்று மக்களுக்குக் காட்சி அளிப்பது சிறப்புமிக்க செயலாகும்.

'ஜகத்குரு பரம்பரா நாம மாலா'
'ஜகுத்குரு பரம்பரா ஸ்தவம்'

போன்ற வடமொழி நூல்களுடன், யோகநாதம் பிள்ளை, மழ்வை சின்னச்சாமி பாரதி, புதுக் கோட்டை, எட்டயபுர சமஸ்தானத் தமிழ்ப் புலவர்கள் பாடிய பாடல்களும் இத் திருமடத்தின் அரிய வரலாற்றுச் செய்திகளைக் கூறுகின்றன.

பலமொழிகளில் இவர்களைப் பற்றிய இசைப்பாடல்கள் உள்ளன. ஸ்ரீசங்கரர் போதித்த தத்துவம் அத்வைதம். ஆதலால் அத்வைத நூல்கள் பல தமிழில் எழுதப்பட்டன. 19ஆம் நூற்றாண்டின் இறுதியில் பஞ்சாங்கம் பற்றிய சர்ச்சை எழுந்ததால் பஞ்சாங்க நிபுணர்களைக் கொண்டு நிர்ணயம் செய்து 1877-இல் பஞ்சாங்கம் வெளியிட்டனர். இன்றும் இம்முறையே பின்பற்றப்பட்டு வருகிறது.

பல்வேறு ஆலயங்களைத் திருப்பணி செய்து மிகச் சிறப்புடன் நிர்வாகம் செய்து வருகிறார்கள்.

சாத்திரம் தொடர்பாக எழும் ஐயங்களைக் காஞ்சிப் பெரியவர்களே தீர்த்து வைத்துள்ளனர். சங்கரமடம் அரிய நூலகத்தைப் பெற்றுள்ளது. இந்தியாவின் பல்வேறு பகுதிகளில் வேதக்கல்விக்காகப் பள்ளிகள் நடத்திவரும் சங்கரமடம் கலைவளர்த்த காஞ்சிபுரத்தில் பழைய கடிகையின் பெயரிலேயே 'கடிகாஸ்தானம்' என்னும் பல்கலைக்கழகம் நிறுவும் பணியில் ஈடுபட்டுள்ளனர். அபூர்வ நூல்களைத் தொகுத்து 'சரஸ்வதிபண்டாரம்' ஏற்படுத்தும் பணி தொடங்கிவிட்டது.



காலத்திற்கேற்ப ஓரியண்டல் பள்ளிகளுடன் ஆங்கிலமுறைப் பள்ளிகளும் பல ஊர்களில் நடத்தப்படுகின்றன.

திருக்கோயில் திருப்பணித் திட்டத்தின் கீழ், தமிழகத்தில் நலிவடைந்த பல்வேறு கோயில்களைத் திருப்பணி செய்துள்ளனர். அங்கு தொடர்ந்து பூசைகள் நடைபெறவும் தக்க

ஏற்பாடுகள் செய்துள்ளனர். பல்வேறு இடங்களில் புதிய கோயில்கள் பலவற்றை நிர்மாணம் செய்துள்ளனர்.

'ஆலய ஆய்வு மையம்' சார்பில் துல்லியமான ஆய்வுகள் செய்யப்படுகின்றன. அன்னதானம், முதியவர் வாழ்வில்லம், கோசாலைகள், மருத்துவமனைகள் ஆகியவை மடத்தின் சார்பில் இந்தியாவின் பல இடங்களிலும் நடைபெறுகின்றன.

'ஜனகல்யாண்' இயக்கத்தின்மூலம் மக்களை ஒன்றுசேர்த்துப் பல்வேறு அறப்பணிகள் நடைபெறுகின்றன.

சங்கரமடத்தின்மூலம் இசைப்பணி, தமிழ்ப்பணி, மொழிபெயர்ப்புப்பணி, இந்து சமயமன்றம் மூலம் பழைய இலக்கியப் பதிப்புப்பணி, புத்திலக்கியங்கள் இயற்றல், உரைநடைநூல்கள் எழுதும் பணி, திருமுறை வளர்ச்சிப்பணிகள் சிறப்பாக நடைபெறுகின்றன. புலவர் வேமகாதேவன் அவர்களைக் கொண்டு 'சிவபாத சேகரனின் தஞ்சைக் கல்வெட்டுக்கள்' நூல் சிறப்புடன் வெளியிடப்பட்டது.

காலந்தோறும் சமுதாய - சமய - இலக்கியப் பணிபுரியும் சங்கரமடத்தின் சேவைகள் பாராட்டுக்குரியன.

## தருமபுர ஆதீனம்

16ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதியில் மயிலாடுதுறையை அடுத்த தருமபுரத்தில் தருமை ஆதீனத்தைத் தோற்றுவித்தவர் ஸ்ரீகுருஞான சம்பந்த தேசிகராவார். ஸ்ரீவில்லிபுத்தூரில் பிறந்தவர். சைவசித்தாந்தப் பெருநெறியில் சிறந்து விளங்கிய கமலைஞானப்பிரகாசரின் மாணவர். இளம் வயதிலேயே ஆலவாய்ப் பெருமானிடத்தில் நாட்டம்கொண்டு மதுரையில் தங்கியிருந்த போது பொற்றாமரைத் திருக்குளத்தில் கிடைத்த சிவலிங்கத்திருவுருவையே தான் வணங்கும் மூர்த்தமாக ஏற்றுத் தருமை மடத்தில் ஸ்தாபித்தார்.

குருமுதல்வரான ஸ்ரீகுருஞான சம்பந்ததேசிகர் அருளிய நூல்கள் எட்டு. இவை குருஞான சம்பந்தர் அட்டகம் எனப் போற்றப் பெறுபவையாகும். இவரது அருள் மரபில் உதித்த

பல குருமணிகளும் அற்புதமான சைவநூல்களைப் படைத் துள்ளனர். நான்காவது குருமகா சன்னிதானமாகத் திகழ்ந்த ஸ்ரீமாசிலாமணி தேசிகர் அவர்கள் குமரகுருபரருக்குக் குருவாய்த் திகழ்ந்தவர். குமரகுருபரர் காசி மடத்தைத் தோற்று வித்தவர். தருமை ஆதீனம் துறவரசு என்று சைவ மரபினரால் போற்றப் பெறுகிறது.

தருமை ஆதீனம் சைவத்திற்கு மட்டுமன்றி, இலக்கியத்திற்கும் இன்றுவரை சேவைபுரிந்து வருகின்றது. ஏராளமான தமிழ்நூல்களை வெளியிட்டுத் தமிழ் மணக்கச்செய்த பெருமையைத் தமிழ்கூறு நல்லுலகம் என்றும் மறவாது. 16 மொழிகளில் 20 ஆயிரம் நூல்கள் கொண்ட நூலகம் ஒன்றினை இம்மடம் போற்றுவதும், கல்விப்பணிகள் புரிவதும் வரலாற்றில் என்றென்றும் இடம்பெறும். சமயம், மொழி, போன்றே கலைத்துறைக்கும் தொடர்ந்து ஆதரவு நல்கிவரும் இம்மடத்தின் தொண்டு குறிப்பிடத்தக்கதாகும். தருமை ஆதீனத்தின் அருளாட்சியின் கீழ் 27 வரலாற்றுச் சிறப்பு மிக்க திருக்கோயில்கள் உள்ளன. திருக்கோயில் களைப் பேணிக்காப்பதோடு, பூஜைகள் முட்டுப் பெறாமல் மன்னர்கள் காலம் போன்றே இன்றும் காப்பது இம்மடம் செய்யும் பெரும்பணியாகும்.

பெருமைமிகு இம்மடத்தின் 26வது குருமூர்த்திகளாய் அமர்ந்து அருள்மழை பொழிபவர் குருமகா சன்னிதானம் ஸ்ரீலஸ்ரீ ஷண்முகதேசிக ஞானசம்பந்த பரமாச்சார்ய சுவாமிகள் ஆவார். நிறைந்த ஞானமும், செறிந்த கல்வி அறிவும் கொண்டு திகழும் சுவாமிகள் 16ஆம நூற்றாண்டில் ஆலவாய்ப் பெருமான் அருளால குருமுதல்வருக்குக் கிடைத்த சிவலிங்கத் திருவுருவைத் தம் ஆன்மார்த்த தெய்வமாக



நாள்தவறாமல் பூஜித்து வருவது குறிப்பிடத்தக்கதாகும்.

கமலை ஞானப்பிரகாசரின் ஆசிகளாலும், ஆலவாயுடைய பெருமானின் திருவருளாலும், குருமாமணிகளின் சீரிய தொண்டாலும் நாளும் சைவம் கமழச் செய்யும் தருமை ஆதீனத்திற்குத் தமிழக வரலாற்றில் ஒரு சிறப்பிடம் உண்டு.

## திருப்பனந்தாள் ஸ்ரீகாசிமடம்

பதினேழாம் நூற்றாண்டில் புகழ்பெற்ற தவமுனிவராகவும், சிறந்த கவிஞராகவும் விளங்கிய ஸ்ரீகுமரகுருபர சுவாமிகள் அவர்களால் காசியில் தோற்றுவித்த ஸ்ரீகுமாரசுவாமி மடத்தின் கிளையாகத் திருப்பனந்தாளில் கி. பி. 1720 வாக்கில் ஏற்பட்ட திருமடமே ஸ்ரீகாசிமடம் ஆகும்.

முதல் நான்கு அருளாளர்கள் காசியிலேயே தங்கித் திருத்தொண்டு செய்தனர். ஐந்தாமவராக அருளாட்சிக்கு வந்த காசிவாசி தில்லைநாயகத் தம்பிரான் அவர்கள் காலத்தில்தான் திருப்பனந்தாளில் அருளாட்சி தொடங்கியது.

ஐந்தாண்டளவும் ஊமையாக இருந்து திருச்செந்தூர் முருகன் அருளால் பேசும் ஆற்றல் பெற்ற குமரகுருபரர் கந்தர் கலிவெண்பா, மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ், திருவாரூர் நான்மணிமாலை, பண்டார மும்மணிக்கோவை, காசிக்கலம்பகம், சகலகலாவல்லிமாலை, சிதம்பர செய்யுட்கோவை முதலிய நூல்களை இயற்றியுள்ளார்.

ஸ்ரீகாசிமடம் ஆற்றிவரும் கல்விப்பணி அளவிடற்கரியது. திருப்பனந்தாளிலும், ஸ்ரீவைகுண்டத்திலும் கலைக்கல்லூரிகளையும், திருப்பனந்தாளிலும், திருலோக்கியிலும் பல பள்ளிகளையும் இம்மடம் நடத்திவருகிறது.

அண்ணாமலை, காசி ஆகிய பல்கலைக்கழகங்களிலும், திருப்பனந்தாள், நாகர்கோயில், ஸ்ரீவைகுண்டம் போன்ற ஊர்களில் உள்ள கல்லூரிகளிலும், காஞ்சி, லால்குடி, ஆடுதுறை போன்ற ஊர்களில் உள்ள பள்ளிகளிலும் மாணாக்கர்க்கு உதவித்தொகை ஸ்ரீகாசிமடத்தினரால் வழங்கப்படுகிறது.

தமிழ்ப் புலவர், பி.லிட் தேர்வுகளில் மாநில முதன்மை பெறுவோருக்கு ரூபாய் 1000 பரிசு வழங்கிட மூலப்பொருள் காசி மடத்தினரால் வைக்கப்பட்டுள்ளது. அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் திருக்குறள், குமரகுருபரர் பிரபந்தங்கள், சைவசித்தாந்த சாத்திரங்கள் முதலான தமிழ் நூல்களில் சிறப்புத்தேர்ச்சி பெற்ற மாணாக்கர்க்குப் பரிசுகள் வழங்க 12 அறக்கட்டளைகள் தனித்தனியே நிறுவப்பட்டுள்ளன.

புராணப் பிரசங்கங்கள் பல ஊர்களில் நடத்தவும், வடமொழி வளர்ச்சிக்கும், சைவ சித்தாந்த விரிவுரைகள் நடத்தவும், அன்னம்பாலிப்புக்கும் அறக்கொடைகளை ஏராளமாக இம்மடத்தினர் வழங்கியுள்ளனர்.

இசைத்தமிழ் அறக்கட்டளையும், இசைக் கல்லூரிக்கு இடமும் அளித்து மாணாக்கர்கட்கு இசைப்புலமையைத் தூண்டப் பல்வேறு போட்டி களையும் வைத்துப் பரிசளித்து வருகின்றனர்.

இந்தியாவில் பல்வேறு ஊர்களில் உள்ள சிறப்புவாய்ந்த கோயில்களில் திருமுறை இசையைப் பரப்பத் திருமுறைகள் ஓதுவார் நியமிக்கப்பட்டுக் காசி மடத்திலிருந்து ஊதியம் வழங்கப்படுகிறது.

ஆண்டின் எல்லாத் திங்கள்களிலும் குறிப்பட்ட நாட்களில் குறிப்பிட்ட கோயில்களில் திருமுறைவாணர்கள் பலர்சேர்ந்து குழுவாகத் திருமுறை விண்ணப்பம் செய்ய நிலையாகப் பெரும் பொருட்கொடை வழங்கியுள்ளனர்.

மதுரை, காஞ்சி, சிதம்பரம் போன்ற பல தலங்களில் திருக்கோயில் சுவர்களில் அத் தலத்தொடர்பான பாடல் கல்வெட்டுக்கள் இத் திருமடத்தினரால் அமைக்கப்பட்டுள்ளன.

பன்னிரு திருமுறைகள், திருக்குறள், குமரகுருபரர் பிரபந்தங்கள், புர ணங்கள், தோத்திர நூல்கள் ஆகியவை அடக்கவிலைக்கே முழுமையாகக் கிடைக்க மடத்தினர் ஏற்பாடு செய்துள்ளனர். திருக்குறளுக்கும், திருமுருகாற்றுப் படைக்கும் உரைக்கொத்து வெளியிட்டுள்ளனர்.



அண்ணாமலைப் பல்கலைக்கழக வாயிலாகச் சங்க நூல்கள், திருமுறைகள், சாத்திரங்கள், குமரகுருபரர் பிரபந்தங்கள் போன்ற சில நூல்கள் முதற்பதிப்பு அடக்கவிலையில் 1/4 பங்கும், இரண்டாம் பதிப்பு அடக்கவிலையில் 1/8 பங்கும் விலை நிர்ணயம் செய்து விற்க அறக்கொடைகள் நிறுவியுள்ளனர்.

'குமரகுருபரர்' என்னும் மாத இதழையும் நடத்தி வருகின்றனர். மக்கள் மனநோய் நீக்கும் காசிமடத்தினர் உடல்நோய் நீக்கும் மருத்துவ உதவிகளையும் தாராளமாகச் செய்து வருகின்றனர்.

சைவமும், செந்தமிழும் பேணிப்புரக்கும் காசிமடத்தின் பணிகள் போற்றுதலுக்கு உரியனவாகும்.

## சூரியனார்கோயில் ஆதீனம்

தமிழகத்தின் தொன்மையான



திருமடங்களில் சூரியனார்கோயில் ஆதீனமும் ஒன்று. கந்தகுருவால் உபதேசிக்கப்பட்டுக் கந்தபரம்பரையில் சிறப்புற்று விளங்கிய ஸ்ரீசிவமார்க்கப் பிரகாசதேசிகர் அவர்கள்பால் உபதேசம் பெற்ற சிவக்கொழுந்து தேசிகர் என்னும் சிவாக்கிரயோகிகளால் இவ் வாதீனம் வரலாற்றுச் சிறப்புடைய சூரியனார் கோயிலில் தோற்றுவிக்கப்பட்டது.

சிவாக்கிரயோகிகளைப் போற்றி 'ஸ்ரீசிவாக்கிர தேசிகமாலை' பாடப்பட்டது. பின்னர்வந்த குருமூர்த்திகள் யாவரும் தம் நூல்களில் ஆதி சிவாக்கிரயோகிகளுக்கு வணக்கப்பாடல்கள் பாடியுள்ளனர்.

ஸ்ரீவீழிச் சிவாக்கிரயோகிகள் தஞ்சை நாயக்க மன்னர்கட்குக் குருவாக விளங்கினார். மணவாள மாமுனிகளை வாதில் வென்றார் என்பர். நாயக்க மன்னரால் திருவீழிமிழலையில் ஒருமடம் ஏற்படுத்தப்பட்டது. கொடை நிலங்கள் அரசரால் மடத்துக்கு அளிக்கப்பட்டன. இவர் சைவ சந்நியாச பத்ததி, கிரியா தீபிகை, சிவஞானபோதச் சிற்றுரை, சிவாக்கிரபாஷியம் என்னும் பேருரை சைவபரிபாஷை, சிவசமவாத உரை மறுப்பு நூல், தேவி காலோத்தரம், சுருதி சூக்திமாலை ஆகியவற்றிற்கு உரை, சிவநெறிப்பிரகாசம் என்னும் சைவசித்தாந்தநூல் ஆகியவைகளை இயற்றியருளியுள்ளார்.

ஸ்ரீநந்தி சிவாக்கிரயோகிகள் தம் ஞானாசிரியராகிய வீழிச் சிவாக்கிரயோகிகள் அருளிச்செய்த சிவநெறிப்பிரகாசம் என்னும் நூலுக்கு உரை எழுதினார்.

ஸ்ரீ அம்பலவாண தேசிகர் தமிழிலும், வடமொழியிலும் பெரும்புலமைபெற்றவர். இவர் திருவாவடுதுறை ஆதீனத்தில் இருந்தபோது திரிசிரபுரம் மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்கட்குக் கம்பரந்தாதி முதலிய நூல்களைக் கற்பித்தவர் ஆவார்.

ஸ்ரீ முத்துக்குமார தேசிகர் அவர்கள் மிகவும் புலமைமிக்கவர். இவருக்கு யாழ்ப்பாணத்திலும் சில சீடர்கள் இருந்தனர். இவர்கள் சிவஞானபோத நூலுக்கு மாதவச் சிவஞானசுவாமிகள் அருளிச்செய்த மாபாடியத்தை 1921 ஆம் ஆண்டு அச்சுவாகனமேற்றிச் சைவ உலகிற்கு வழங்கியவர் ஆவார்.

இலக்கணம் முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் அவர்கள் யாழ்ப்பாணத்தைச் சேர்ந்தவர். தல யாத்திரைக்காகச் சிதம்பரம்



வந்தவர் ஆதீன அடியாராகித் தலைவரானார். சிவஞானபோத மாபாடிய நூல் அச்சிடும்போது பல உதவிகள் செய்தார். சிவாக்கிரயோகிகள் அருளிய சிவாக்கிரபாடியம், கிரியா தீபிகை ஆகிய நூல்களை அச்சிட்டார். முத்தி நிச்சயப்பேருரை முழுவதையும் செப்பம் செய்து கொடுத்தார். ஆதீனத்துக்குரிய ஞானாவரண விளக்கவுரையைச் செப்பம் செய்தார்.

ஸ்ரீமீனாட்சிசுந்தரத் தம்பிரான் அவர்கள் இறைஞானபோதம், ஆன்மார்த்த பூசை விளக்கம், ஆன்மலாப தீபிகை ஆகிய மூன்று நூல்களை அருளிச்செய்தார்.

4-9-1990 முதல் ஸ்ரீலஸ்ரீ சங்கரலிங்க தேசிக பரமாசாரிய சுவாமிகள் அவர்கள் சூரியனார்கோயில் சிவாக்கிரயோகிகள் ஆதீனத் தலைவராகி அருளாட்சி செய்து வருகிறார்கள்.

சிவாக்கிரயோகிகள் ஆதீனத் தலைவராகத் திருவாவடுதுறை ஆதீன அடியவர்களே பொறுப்பேற்றல் மரபாக இருந்து வருகிறது.

இவ் வாதீன வரலாற்றை முதன்முதலில் 1959 ஆம் ஆண்டு புலவர். செ. இராசு தொகுத்து எழுதியுள்ளார். 1991 ஆம் ஆண்டு விரிவான வரலாறு எழுதப்பட்டுள்ளது.

பழம்பெருமை மிக்க ஆதீனமாகிய சிவாக்கிரயோகிகள் ஆதீனம் சிறப்பாகச் சைவப்பணியாற்றிக் கொண்டு வருகிறது.

## கும்பகோணம் பெரியமடம்

சிவபெருமானை எப்பொழுதும் மறவாத சிந்தையராய், தம் பூசைச் சிவலிங்கத்தைப் பிரியா இயல்பினராய் இருப்பவர்கள் வீரசைவர்கள். தமிழகத்தில் ஒரு காலத்தில் இச் சமயம் பெரிதும் பரவியிருந்தது.

தென்ஆர்க்காடு மாவட்டம் மயிலம், கோவை மாவட்டம் பேரூர் போன்ற இடங்களில் வீரசைவ மடங்கள் இருப்பினும் தொன்மையானது கும்பகோணம் பெரிய மடமேயாகும். தக்கயாகப்பரணி, வீரசிங்காதன புராணம் முதலிய நூல்களும், சில கல்வெட்டுக்களும், தஞ்சை சரசுவதி மகால் ஆவணங்களும் பெரியமடத்தின் வரலாற்றைச் சுட்டிக்கூறுகின்றன.

பெரியமடத்தின் வரலாற்றைக் காட்டும் அரிய நூல் ஆகிய வீரசிங்காதனபுராணம் முதலில் கன்னடத்தில் இயற்றப்பட்டது. 'வீரநரசிம்மதேவன்' என்னும் விஜயநகர மன்னன் காலத்தில் 'சோமசேகரதேவர்' என்பவரால் இயற்றப்பட்டது. பின்னர் அந் நூல் திருக்குடந்தை மகத்துத் தேசிகர் என்பவர் ஆணைப்படி 'வேலைய சுவாமிகள்' என்பவரால் மழைய மல்லேச்சுரச்சருக்கம் முதல் மூன்று சருக்கங்கள் தமிழில் மொழிபெயர்த்துப் பாடப் பெற்றன. இவ் வேலைய சுவாமிகள் துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகளின் சகோதரர் ஆவார். இந் நூலின் ஏனைய பகுதிகள் சிதம்பரம் மடத்தில் இருந்த 'வசவலிங்கையர்' வேண்டுகோளுக்கிணங்க மெய்கண்டதேவர் சந்தானம் திருத்துறையூர் ஆதீனத் தலைவராய்க் கோட்டூரில் இருந்த 'உமாபாகதேவர்' என்பவரால் இயற்றப் பட்டன. இது 875 செய்யுட்களை உடையது.

நவகன்னியர் கங்கையுடனும், வீரபத்திரருடனும் கும்பகோணம் வந்து, மகாமகக்குளத்தில் புனித நீராடிய செய்தி வீரசிங்காதன புராணத்தில் கூறப்படுகிறது.

சிவபெருமான் வீரபத்திரர்க்குக் காட்சி தந்தருளிய பீடமே 'வீரசிங்காதனம்' ஆகும். அருகில் வீரபத்திரர்க்குக் கோயிலும் ஏற்பட்டது. இக் கோயிலில் வீரபத்திரர்க்குக் கங்கைவீரன் என்று பெயர்.

ஒட்டக்கூத்தர் இவ் வீரபத்திரக் கடவுள் கோயிலிலேயே தக்கயாகப்பரணியை இயற்றினார்.

> 'குடந்தையம் பதியில் கோதிலாப் பெரிய
> மடந்தனில் வாழ்வீர மகேச்சுரர்
> வாழியே'

என்பது தக்கயாகப்பரணித் தாழிசையாகும்.

வீரசிங்காதனபுராணம் மூர்க்க நாயனார் பெரியமடத்தில் இருந்தவர் என்று கூறும்.



பெரியபுராணமும், மீனாட்சி சுந்தரம்பிள்ளை அவர்களின் திருக்குடந்தைப் புராண்மும் இச்செய்தியைக் கூறுகின்றன.

இப் பெரியமடத்தின் தலைவர்களாக விளங்கிய அருளாளர்கள் ஏகாக்கர், இரேணுகர், இரேவணர் முதலியோர் அரிய சமயப்பணிகள் புரிந்தனர். மழைய மல்லேச்சரர்க்குப் பின்வந்த பலருள் 'சோமசேகரதேசிகர்' வீரசிங்காதன ஸ்தாபனாச்சாரியார் எனக் கொண்டாடப் படுகிறார். இவர் விஜயநகரமன்னன் 'வீரநரசிம்மன்' காலத்தவர் (1506_1509) இவருக்குப்பின் வந்தவர் 'சாரங்கதேசிகர்' என்பவர். சிறப்புமிக்க சாரங்கதேவருக்குப் பின் பெரியமடம் 'சாரங்க்தேவர் பெரியமடம்' என்றே அழைக்கப்படலாயிற்று.

தஞ்சை நாயக்க அரசில் அமைச்சராகப் பல்லாண்டுகள் பணிபுரிந்த அய்யன் என்னும் சிறப்புப்பெயரையுடைய கோவிந்த தீட்சிதர் பெரியமடத்தின் நுழைவு வாயிலைக் கட்டுவித்தார். அதனை இங்குள்ள கல்வெட்டு பின்வருமாறு குறிக்கிறது. (காலம் 13_1_1632)

'சொஸ்திஸ்ரீ சாலியவாகந சகாப்தம் 1551க்குமேற் செல்லாநின்ற பிரஜோத்பத்தி வருஷம் தை மாதம் 15 தேதி ஸ்ரீமது ராஜமானிய ராஜஸ்ரீ ரெகுநாத நாயக்கர் அவர்கள் பிறதானி அய்யனவர்கள் கோவிந்த தீஷிதர் ஸ்ரீமது கும்பகோணம் பெரியமடம் வீரசிங்கா தனத்துக்குக் கர்த்தரான சாரங்க சுவாமியார் அவர்கள் எழுந்தருளிஇருக்கிற மஹாமடத்து ஆசாரவாசல் அனந்தகல்யாண மஹாமண்டபம் திருப்பணிக்கு கட்டளை வைத்தது. வினாயகர் கங்கை வீரேச்வர சுவாமி துணை. சிவா உ'

கன்னடக் கல்வெட்டு 1507ஆம் ஆண்டு வீரநரசிம்மதேவர் விட்ட நிலக்கொடையைக் குறிக்கிறது. 16_1_1846இல் எழுதப்பட்ட மராட்டியர் ஆவணத்திலும் இம் மடத்தைப் பற்றிய செய்தி குறிக்கப்படுகிறது.

புகழ்வாய்ந்த வீரசைவப் பெரியமடம் ஆற்றிய பணிகள் அளவிடற் கரியன.

## திருவாவடுதுறை ஆதீனம்

கி.பி. 16ஆம் நூற்றாண்டில் திருவாவடுதுறையைத் தலைமையகமாகக் கொண்டு தோன்றியதே திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனமாகும் சிவஞான சூரியனான ஸ்ரீ மெய்கண்ட தேவரின் மரபில் உதித்த இந்த ஆதீனத்தின் குரு ஸ்ரீ பஞ்சாக்கரதேசிகர் என்று போற்றப் பெறுவர்.

இரண்டாம் குருமகாசன்னிதானமாக ஸ்ரீமறைஞானதேசிகர் பொறுப்பேற்றார். பின்னர் அம்பலவாண தேசிகரில் தொடங்கி, உருத்திர கோடி தேசிகர், வேலப்பதேசிகர், குமாரசாமி தேசிகர், பிற் குமாரசாமி தேசிகர், மாசிலாமணி தேசிகர், இராமலிங்க தேசிகர் வேலப்பதேசிகர், பின் வேலப்பதேசிகர், திருச்சிற்றம்பல தேசிகர், அம்பலவாண தேசிகர், வேளூர் சுப்பிரமணிய தேசிகர், அம்பலவாண தேசிகர், மேலகரம் சுப்பிரமணிய தேசிகர், அம்பலவாண தேசிகர், சுப்பிரமணிய தேசிகர், வைத்தியலிங்க தேசிகர் அம்பலவாணதேசிகர், சுப்பிரமணிய தேசிகர், அம்பலவாண தேசிக மூர்த்திகள் வரை இருபத்திரண்டு குருமணிகள் இவ்வாதீனத்தை அலங்கரித்தபின்பு இருபத்தி மூன்றாவது குருமகாசன்னிதானமாக ஸ்ரீ சிவப்பிரகாச தேசிக பரமாசார்ய சுவாமிகள் அருளரசை ஏற்று நடத்தி வருகிறார்கள்.

இம் மடம் சைவம் வளர்த்தது மட்டுமின்றித் தமிழ் வளர்த்த திருமடமுமாகும். திரிசிரபுரம் மீனாட்சி சுந்தரம் பிள்ளையையும், உத்தமதானபுரம் சாமிநாத அய்யரையும் போற்றித் தமிழுலகுக்குத் தந்த பெருமை இம்மடத்திற்கே உரியதாகும்.

எண்ணிலா நூல்களை நாளும் பதிப்பித்துச் சைவமும், தமிழும்வளரத் தொடர்ந்து பணி புரியும் திருமடமான திருவாவடுதுறை ஆதீனத்தின்கீழ் பல பாடல் பெற்ற திருக்கோயில்கள் உள்ளன. இவற்றுள் மிகவும் குறிப்பிடத்தக்க திருக்கோயில்கள் திருவாவடுதுறை திருக்கோயிலும், திருவிடைமருதூர் ஸ்ரீ மகாலிங்கசுவாமி திருக்கோயிலுமாகும்.





# கோவிந்த தீட்சிதர்

கண்ணம்மா பாலசுப்ரமணியன்

சோழமண்டல வரலாற்றில் இராஜ ராஜன், இராஜேந்திரன், இராஜாதிராஜன் எனும் முப்பெரும் சோழமன்னர்களுக்குக் கிருஷ்ணன் இராமன் என்னும் மும்முடிச் சோழப் பிரம்மராயன் எப்படித் தளபதியோ, விக்கிரசோழன், குலோத்துங்கன், இராஜராஜன் ஆகிய மூவேந்தர்களுக்கு ஒட்டக்கூத்தர் எப்படி அவைக்களப் புலவரோ, அதுபோன்று செவ்வப்ப நாயக்கன், அச்சுதப்ப நாயக்கன், இரகுநாத நாயக்கன் எனும் மூன்று தஞ்சை மன்னர்களுக்கும் மதியமைச்சராக, அறிவு சார்ந்த ஆசிரியராக, பெரும்புலவராகத் திகழ்ந்தவர் கோவிந்த தீட்சிதராவார்.

ரிக்வேத ஆச்வலாயினப் பிரிவைச் சேர்ந்த கர்நாடக அந்தணர் குலத்தில் பிறந்தவர். இவருடைய தந்தையார் காலத்திலிருந்தே நெடுங்குன்றத்தில் – திருவண்ணாமலை அருகில் – வாழ்ந்த செவ்வப்ப நாயக்கனின் குடும்பத்தினருடன் நெருங்கிய தொடர்பு இருந்து வந்தது. விஜயநகர மாமன்னர் அச்சுதராயர் தம் மனைவியின் தங்கையான மூர்த்தியம்மாளைச் செவ்வப்பனுக்கு மணம் செய்வித்துச் சீதனமாகத் தஞ்சை அரசையும் நல்கினார். கி. பி. 1532-இல் தஞ்சை மன்னனாகச் செவ்வப்பர் முடி சூடியதிலிருந்து கோவிந்த தீட்சிதர் அமைச்சராகப் பணிபுரியத் தொடங்கினார். சுமார் எழுபது ஆண்டுகளுக்கு மேலாக இம் மாமேதையின் பணி சோழ நாட்டுக்குக் கிடைத்தது.

செவ்வப்ப நாயக்கரின் நல்லாட்சிக்கு உதவி புரிந்த தீட்சிதர், செவ்வப்பரின் புதல்வரான அச்சுதப்ப நாயக்கருக்கு உற்ற துணைவராகத் திகழ்ந்தார். திருமாலின் மூன்று பெயர்களான அச்சுதர், அனந்தர், கோவிந்தர் என்பனவற்றுள் முதற்பெயரை மன்னரும், இறுதிப் பெயரை அமைச்சரும் ஏற்றுக்கொண்டு, மன்னர் சஸ்திரத்திலும், (போரிலும்) அமைச்சர் சாஸ்திரத்திலும் நிபுணர்களாகத் திகழ்ந்தனர் என்பதைச், சாகித்ய ரத்னாகரம் என்னும் சம்ஸ்க்ருத நூலொன்று இப்படிக் கூறுகிறது.

த்ரிநாம ஆத்யந்த நாமாநௌ
மஹீக்ஷீத் தீக்ஷிதாவுபௌ!
சஸ்த்ரே சாஸ்த்ரேச குசலௌ
ஆஹவேஷு ஹவேஷுச!!

அச்சுதப்ப நாயக்கரின் புதல்வரான



இரகுநாதரைக் குழந்தையிலிருந்தே வளர்த்துச் சிறந்த வீரராக, இசை வல்லுநராக, பெரும் புலவராகச் செய்த பெருமை கோவிந்த தீட்சிதரையே சாரும். இரகுநாதர் போர் மேற்சென்ற போதெல்லாம் அரண்மனை நடவடிக்கைகளைக் கவனித்ததுடன், போர் முகாம்களுடன் நாள்தோறும் தொடர்பு கொண்டு வழிநடத்திய சான்றோர் இவர் என்று இரகுநாதர் காலத்து இலக்கியங்கள் இவரைப் புகழ்கின்றன.

தீட்சிதர் பட்டீச்சரத் தருகிலுள்ள கோவிந்தகுடி எனும் ஊரில் கோயில் ஒன்று எடுப்பித்தார். குடி என்பது தெலுங்கில் கோயிலைக் குறிக்கும் சொல்லாகும். செவ்வப்பநாயக்கர் காலம்வரை சிங்கரசன் பாளையம் எனும் பெயரில் திகழ்ந்த இவ்வூர் அச்சுதப்ப நாயக்கர் காலத்தில்தான் கோவிந்தகுடி எனும் பெயர்மாற்றம் அடைந்தது.

அண்மையில் கோவிந்தகுடியில் பூமியில் புதைந்திருந்த ஒரு கல்வெட்டை வெளிக்கொணர்ந்த போது இது கண்டுபிடிக்கப் பட்டது. நிலத்தின் எல்லையில் நடப்படும் சூலக்கல் ஒன்றில் இந்தக் கல்வெட்டு பொறிக்கப்பட்டுள்ளது:

ஆவூர் பசுபதீச்சுரர்க்குச் சொந்தமான சிங்கரசன்பாளையம் எனும் அக் கிராமத்தில் தீட்சிதர் எடுத்த கோயில் திகழ்ந்ததாலும், அங்கு அவர் குடும்பம் வசித்ததாலும் கோவிந்தகுடி என்று பெயர் மாற்றம் அடைந்தது. இவ் வூரிலிருந்துதான் தினம் பல்லக்கில் தஞ்சை சென்று அரசு அலுவல்களைக் கவனித்ததாகவும், இவரால் பட்டீச்சரம் தேனுபுரீசுவரர் திருக்கோயில், திருப்பாலைத்துறைப் பாலைவனநாதர் திருக்கோயில், குடந்தைக் கும்பேசர் திருக்கோயில், திருநாகேச்சரம் நாகநாத சுவாமி திருக்கோயில் போன்றவை மிகவும் சிறப்பும் ஆக்கமும் பெற்றதாகவும் இலக்கியக் கல்வெட்டுச் செய்திகளால் அறிய முடிகிறது.

பட்டீச்சரம் திருக்கோயிலிலுள்ள சம்ஸ்கிருதக் கல்வெட்டொன்று, அவ்வூர்ப் பட்டுநூல் செட்டியார்களின் இரண்டு பிரிவினரிடத்தில் நிகழ்ந்த வழக்கொன்றை விசாரித்து அதற்கு ஏற்றதொரு முடிவைக் கோவிந்த தீட்சிதர் வழங்கியதை விவரிக்கின்றது.

சமஸ்கிருதம், தமிழ், தெலுங்கு முதலிய பன்மொழிகளிலும் வித்தகராய்த் திகழ்ந்த இவரது தமிழார்வத்துக்கு இதோ ஒரு சான்று. வடமொழியில் இருந்த பஞ்ச நதீசுவர புராணத் தைத் தமிழில் மொழி பெயர்க்கச் செய்தார். இத் தமிழ்ப்பணி கி. பி. 1605-இல் நிகழ்ந்தது.

இவரது தலைமையில் திகழ்ந்த நாயக்க மன்னரின் புலவர்குழாத்தில் பன்மொழிப் புலவர்களும், வாக்கேயக்காரர்களும் திகழ்ந்தனர் என்பதை,

கவி ப்ரவேகைரபி காளிதாஸ
மயூர ஸெனமில்ஹி முராரி தேசை:
கர்நாடக த்ரவிட ப்ரபந்த நிர்மாண
வித்யா நிபுணைச்ச கைச்சித்
வாக்கேயகார ப்ரமுகை ரநேகைர்
விசித்ர கீதாதி கலாப்ரவீணை:

என்று சாகித்திய ரத்னாகரம் புகழ்கிறது.

கோவிந்த தீட்சிதர் இயற்றிய நூல்களில் இன்று நமக்குக் கிடைப்பது "கௌமாரிலதர்சனம்", "ஸங்கீத ஸுதா" என்பவையாகும்.

இவரது இரு புதல்வர்களான யக்ஞநாராயண தீட்சிதரும், வேங்கடேச் வரமகியும் பல அற்புத நூல்களை இயற்றினர். யக்ஞநாராயண தீட்சிதரின் சாகித்ய ரத்னாகரம் கோவிந்த தீட்சிதர் அத்வைத வேதாந்தத்திலும், ஆறுவகை தர்சனங்களிலும் தலைசிறந்த நிபுணர் என்று கூறுகிறது. இரகுநாத விலாசமெனும் காப்பிய நூலொன்று,

"இதி ஸ்ரீபதவாக்ய ப்ரமாண பாராவார
பாரீண
ஸ்ரீமதத்வைத வித்யாசார்ய ஸாக்னி சித்ய
ஸர்வதோ முகாதி ராத்ர ஸாக்னி சித்யாப்த
வாஜபேயாஜி கோவிந்த தீக்ஷித வர
நந்தனஸ்ய

-என்று புகழாரம் சூட்டுகிறது.





இவரது இல்லத்தில் எப்போதும் வேள்வித் தீயோடு வேதவிற்பன்னர்களும் சூழ்ந்தே காணப்பட்டனர் என இலக்கியங்கள் புகழ்கின்றன. மேலும் சிறந்த அக்கினிஹோத்ரியாக வாழ்ந்த இவரது இல்லத்தில் கார்ஹபத்யம், ஆஹவநீயம், தட்சிணாக்கினி என்ற மூவகை வேள்விக் குண்டங்களிலிருந்தும் தீ எழும்பிக் கொண்டே இருக்குமெனவும் விவரிக்கின்றன.

சிறந்ததொரு வேத விற்பன்னராகத் தீட்சிதர் திகழ்ந்ததால்தான் நாயக்க மன்னர்கள் சோடச மகாதானம், ஹேமகர்பம், துலாபாரம் போன்ற அறப்பணிகள் புரிந்தனர். கும்பகோணம் மகாமகக் குளக்கரையில் சோடசமகாதான மண்டபங்களை இரகுநாதர் கட்டுவதற்குக் காரணமாகவும் இவர் திகழ்ந்தார்.

இவருடைய மனைவியின் பெயர் நாகாம்பா எனபது. தீட்சிதரின் மறைவுக்குப் பின்பு இவர் போற்றிய திருக் கோயில்களான கும்பகோணம் கும்பேசர் கோயிலில் மங்களாம்பிகை சந்நிதிக்கு எதிரிலும், திருவையாறு ஐயாரப்பர் திருக்கோயிலிலும் கோவிந்த தீட்சித லிங்கம் என்ற பெயரில் லிங்கத் திருவுருவங்கள் பிரதிஷ்டை செய்யப்பட்டன. அவற்றுக்கு இன்றும் வழிபாடு நடைபெற்று வருகின்றது.

கும்பகோணம் கும்பேசர் கோயிலிலுள்ள கோவிந்த தீட்சித லிங்கத்துக்கு அருகே நாகாம்பா அவர்கள் வணங்கும் கோலத்தில் ஒரு திருவுருவச் சிலையுள்ளது.

தீட்சித அய்யன் அவர்கள் பெயரால் கோவிந்தகுடி, கோவிந்த புத்தூர், அய்யன் பேட்டை, அய்யன் கடைவீதி, அய்யன் குளம் போன்ற பல ஊர்களும், இடங்களும் திகழ்கின்றன.

தருமபுர ஆதீனத்து மடாதிபதிகள் போன்றோர் தீட்சிதர் அய்யனை மிகவும் போற்றினர். இவரது மறைவுக்குப் பிறகு - விஜயராகவ நாயக்கர் காலத்தில் - தீட்சிதர் அய்யன் வகித்த அமைச்சர் பதவியை ஏற்ற நல்லவாணன் என்பார் தம் பெயரைக் கோவிந்ததாசன் (தாஸ்ய நாமம்) எனக் கொண்டது இவர்பால் அவர் கொண்ட பெருமதிப்பின் காரணத்தாலேயேயாகும்.

சோழ மண்டலத்தின் கோநகரான பழையாறை நகரின் ஒரு பகுதி பிற்காலத்தில் பட்டீச்சுரம் எனப் பெயர்மாற்றம் பெற்றது. இங்குள்ள தேனுபுரீசுவரர் திருக்கோயில் ஞானாம்பிகை சந்நிதியில் சுமார் ஆறு அடி உயரமுடைய தீட்சிதரின் திருவுருவச் சிலையும், அவரது துணைவியார் நாகாம்பா அம்மையாரின் உருவச் சிலையும் உள்ளன. நின்ற நிலையில், வணங்கும் கோலத்தில், தலையில் முத்துக்கள் பதிக்கப்பட்ட நீண்ட குல்லாய், காதுகளில் குண்டலங்கள், இடுப்பில் முழுநீள ஆடை அதன் மேல் துண்டு, மார்பில் (சட்டை போன்ற) மேலாடையுடன் திகழும் இவ் வுருவச்சிலை (கற்சிலை) நேர்த்தியான வேலைப்பாடமைந்த ஒன்று.

நாகாம்பா அம்மையாரின் உருவச் சிலையின் பின்னலிடப்பட்ட ஜடையில் புல்லகம், தொய்யகம், அலகசூடம் போன்ற அணிகலன்கள் திகழ்கின்றன. காதுகளில் மலரொத்த தோடுகளும், கை நிறைய வளையல்களும், சூடகமும், தோள்வளையும், கடகவளையும் மேலும் அழகூட்டுகின்றன. கழுத்தில் முத்தாரம், காறை, சவடி போன்ற அணிகலன்களும், கைவிரல்களில் மோதிரங்களும் கால்விரல்களில் மெட்டிகளும், இடுப்பில் உடைதாரமும் எழில்செய்கின்றன. கும்பேசர் கோயிலிலுள்ள இவ்வம்மையாரின் படிமமும் இதே போன்றுள்ளது.

மன்னார்குடி இராஜகோபால சுவாமி திருக்கோயிலிலுள்ள ஊஞ்சல் மண்டபத் தூணில் இரகுநாத நாயக்கர், மற்றும் கோவிந்த தீட்சிதரின் உருவச் சிலைகள் இடம்பெற்றுள்ளன. இம் மண்டபத்தில் உள்ள அனைத்துச் சிலைகளிலும் திருமண்குறி காணப்படினும் தீட்சிதர் சிலையில்மட்டும் நெற்றியில் விபூதிக் குறிகள் உள்ளதைச் சிற்பத்தில் தெளிவாகக் காணலாம். நீண்ட குல்லாய், பஞ்சகச்ச வேட்டி, இடுப்பில் துண்டு, இறுக்கமாக உடலையொட்டிய மேலாடை, காதில் குண்டலங்கள் திகழ இந்தப் படிமம் காட்சி நல்குகிறது.

இதே திருக்கோயிலில் இராஜ கோபாலன் சந்நிதியில் அமைந்துள்ள பிறிதோர்



மண்டபத்தின் தூண்களில் இரகுநாத நாயக்கர் அளிக்கும் கோதானம், ஹேமதானம், துலாதானம் ஆகிய சிற்பக்காட்சிகள் இடம்பெற்றுள்ளன. இந்தக் காட்சிகள் அனைத்திலும் , இரகுநாதருடன் தீட்சிதர் அய்யனும் எழிற்சிற்பமாகக் காணப்படுகிறார்.

வடக்கு மேற்கு மற்றும் தெற்கு இராஜகோபுரங்களின் முதல் நிலையில் தஞ்சை நாயக்க மன்னர் குடும்பத்தினர் பலரின் சுண்ணச் சுதைச் சிற்பங்கள் உள்ளன. இவற்றில் இரகுநாதரின் சிற்பம் உள்ள இடங்களில் எல்லாம் நீண்ட குல்லாயுடன் தீட்சிதரின் சுதைச் சிற்பமும் உள்ளது என்பது குறிப்பிடத் தக்கதாகும்.

சீகாழி வட்டம் திரு விளநகர், துறைகாட்டு வள்ளலார் திருக்கோயிலின் கருவறை முன்மண்டபத்தைக் கோவிந்த தீட்சிதரின் பெயரால் தருமபுரமடத்தின் தலைவர் எடுத்தார் என்பதை இத் திருக்கோவில் கல்வெட்டுக்கள் கூறுகின்றன. துறை காட்டுவார் எனும் இம் மண்டபத்தில் தருமபுர ஆதீனத் தலைவரின் உருவச் சிலையும், தீட்சிதர் அய்யனின் உருவச்சிலையும் உள்ளன.







# தஞ்சையில் ஸ்ரீ சமர்த்த ராமதாஸர்



தஞ்சை பீமராஜ
கோஸ்வாமிகள்

மகாராஷ்டிர மன்னர் சத்ரபதி சிவாஜியின் சகோதரர் வெங்கோஜி என்கிற ஏகோஜி கி.பி. 1776ல் தஞ்சையின் முதல் மராட்டிய மன்னராக முடிசூட்டிக் கொண்டார். அன்றுமுதல் தஞ்சை மராட்டியர் ஆளுகைக்குள் வந்தது.

சத்ரபதி சிவாஜி தன் குருவான ஸ்ரீசமர்த்த ராமதாஸரிடம் தஞ்சையை ஆளும் தன் சகோதரன் வெங்கோஜிக்கு அருள்செய்ய வேண்டும் என வேண்டிக் கொண்டார். அதன்படி கி.பி. 1677ல் ஸ்ரீ சமர்த்த ராமதாஸர் ராமேஸ்வர யாத்திரை நிமித்தமாகத் தெற்குப் பக்கத்தில் வரும்போது, தஞ்சை மாவட்டம் மன்னார்குடியில் வந்து தங்கினார். இதை அறிந்த வெங்கோஜி மன்னர், மன்னார்குடிக்கு நேரில் சென்று ஸ்ரீ சமர்த்த ராமதாஸரைத் தகுந்த மரியாதையுடன் வரவேற்று, தஞ்சைக்கு வந்து தங்கி அருளாசி வழங்க வேண்டும் என வேண்டினார்.

ஸ்ரீ சமர்த்தர், மன்னரின் வேண்டுகோளை ஏற்றுத் தஞ்சைக்கு வந்தார். வெங்கோஜி மன்னர் தஞ்சையின் கிழக்குப் பக்கத்தில் அமைந்துள்ள சாமந்தான் குளத்தின் கீழ்க் கரையில் உள்ள குதிரைலாயத்தில் இடம்அமைத்து ஸ்ரீஸ்வாமிகளைத் தங்கச்செய்து (மகான்கள், பசு, குதிரை போன்ற தூய பிராணிகள் வசிக்கும் இடத்தில் வாசம் செய்யவேண்டும் என்ற நியதியின்படி) தகுந்த மரியாதைகளைச் செய்து, தனக்கு அருள் ஆசி வழங்க வேண்டினார். மன்னரின் வேண்டுகோளின்படி வெங்கோஜி மன்னருக்கு ஸ்ரீ சமர்த்த ராமதாஸர் அருள்செய்து ஆன்மீகத்தைப் போதனை செய்தருளினார். பிறகு சில நாட்கள் தஞ்சையில் தங்கினார்.

வெங்கோஜி மன்னர், ஸ்ரீ சமர்த்த ராமதாஸரிடம், தாங்கள் இங்கேயே தங்கி இருக்க வேண்டும் என வேண்டினார். அதற்கு ஸ்வாமிகள், "நான் ஒரே இடத்தில் தங்கி

இருப்பது என்பது முடியாது. என் சிஷ்யர் பிகாஜி பாவா என்கிற பீமராஜ ஸ்வாமிகளைத் தஞ்சைக்கு அனுப்பி வைக்கிறேன். அவரை நான் என்றே பாவித்து மரியாதைசெய்து ஆன்மஞானத்தைப் பெறுவாயாக" என்று சொல்லி, ராமேஸ்வர யாத்திரையைத் தொடர்ந்தார்.

அதேபோல் சில நாளில் ஸ்ரீ ராமதாஸர், தன் முக்கிய சிஷ்யர்களில் பதிமூன்றாவது சிஷ்யர் ஆகிய பிகாஜி பாவா என்கிற பீமராஜ ஸ்வாமிகளைத் தஞ்சைக்கு அனுப்பி வைத்தார். வெங்கோஜி மன்னரும், ஸ்ரீ பீமராஜ ஸ்வாமிகளை அன்புடன் வரவேற்று, ஸ்ரீ சமர்த்த ராமதாஸர் தஞ்சையில் தங்கிய அதே சாமந்தான்குளத்தின் தென்கரையில் மடம் கட்டிக்கொடுத்து எல்லா உதவிகளையும் செய்து கொடுத்தார். அது கி.பி. 1678ல் நிகழ்ந்தது ஆகும்.

தஞ்சையில ஐம்பொன் மூர்த்திகள் செய்வதை அறிந்த ஸ்ரீசமர்த்த ராமதாஸர், தன் மடத்தில் ஸ்ரீ ராம விக்ரஹத்தை ஸ்தாபனம் செய்ய எண்ணி கி.பி.1680ல் மறுமுறையும் தஞ்சைக்கு யாத்திரை செய்து, கீழவீதி ஸ்ரீ பீமராஜ ஸ்வாமிகள் மடத்தில் தங்கி, தனக்கு ஸ்ரீ ராமசந்திர விக்கிரஹம் செய்து தரவேண்டும்

எனக்கேட்க, அரசாங்க அலுவலர் "இங்கு ஐம்பொன் சிலை செய்யும் கலைஞர் தஞ்சை நகரத்தில் தற்போது ஒருவர்தான் இருக்கிறார். ஆனால் அவருக்கு வயதின் காரணமாக இரு கண்களும் தெரியாது எனக் கூற, ஸ்ரீ சமர்த்தர் அவரை அழைத்து வரும்படிக் கூறித் தன் தவவலிமையால் கண் பார்வை கொடுத்து, தான் நினைத்தபடி மெழுகினால் ஸ்ரீ கோதண்ட ராமர், லக்ஷ்மணர், சீதை, ஹனுமார் உருவத்தை அமைத்துக் கொடுத்து, அதே போல் செய்து தரும்படி ஆசீர்வதித்தார். அப்போது அந்தச் சிற்பி ஸ்வாமிகளை வணங்கி, "நான் தாங்கள் கூறியபடி விக்ரஹங்களைச் செய்து தருகிறேன். ஆனால் முன்போல் என் இரு கண்களும் பார்வை இல்லாமல் செய்துவிட வேண்டும்" என வேண்ட, அதற்கு ஸ்வாமிகள், "ஏன் அப்படி நினைக்கிறாய்?" என வினவ, சிற்பி "தங்களைப் போன்ற மகான்களைக் கண்டபிறகு இந்த உலக விவகாரங்களைக் காண நான் விரும்பவில்லை" எனக்கூற, ஸ்வாமிகள் "அப்படிச் சொல்லலாகாது, உனக்கு ஸ்ரீ ராமர் அருள்செய்வார்" எனக் கூறினார்.



சிற்பி ஸ்ரீ ராமச்சந்திரப் பிரபுவின் மூர்த்தி செய்து கொடுத்த பிறகு வெங்கோஜி மன்னர், தன் அவையில் இருந்த ரகுநாத பண்டிதர் மூலமாகச் சுமார் நான்கு மணங்கு எடையுள்ள ஸ்ரீ ராமர், லக்ஷ்மணர், சீதை, ஹனுமார் மூர்த்திகளை ஸ்ரீ சமர்த்தர் வாசம் செய்யும் சாதாராவிற்குச் சமீபத்தில் உள்ள ஸ்ரீ சர்ஜன்காட் என்னும் புனித ஸ்தலத்திற்கு அனுப்பி வைத்தார். அவை கி.பி. 1681-ஆம் வருஷம் பிப்ரவரி மாதம் கிருஷ்ணபட்சத்துப் பஞ்சமி திதியன்று போய்ச் சேர்ந்தன.

தஞ்சையிலிருந்து வந்த மூர்த்திகளின் கண்களில் இருந்த மெழுகை நீக்கி, மூர்த்திகளைத் தன் கண்களில் ஒற்றிக் கொண்டு திருப்தி கொண்டார். அதன்பிறகு அதே மாதம், கிருஷ்ணபக்ஷ நவமியன்று, ஸ்ரீ சமர்த்த ராமதாஸ் ஸ்வாமிகள் ஸ்ரீராமருடன் ஒன்றாகக் கலந்தார்.

தஞ்சையில் ஸ்ரீ சமர்த்த ராமதாஸ் ஸ்வாமிகள் ஸ்தாபித்த சம்பிரதாய மடமும், ஸ்ரீ பீமஸ்வாமிகள் ஸமாதி மீது அமைந்துள்ள ஆஞ்சனேயர் கோவிலும் ஸ்ரீ ராமதாஸரின் புகழைத் தஞ்சையில் நிலைபெறச் செய்துள்ளது.



# பொன்னிக்கரையில் பொங்கிய கங்கை

தஞ்சாவூர் என். ஸ்ரீநிவாஸன்



கங்கைவெள்ளம் . . . . . கங்கைவெள்ளம் என்று கூவிக்கொண்டே தெருவில் ஓடினார் ஒருவர். அவருடைய குரலைக் கேட்டு அந்த அக்ரஹாரத்தின் வீடுகளிலிருந்து எங்கே? . . . கங்கைவெள்ளம் எங்கே? என்று பல குரல்கள் கேள்விக் கணைகளைத் தொடுத்தன. ஓடினவர் சற்று நின்றார். "கங்கையா? ஐயாவாள் அகத்திலே உள்ள கிணற்றிலிருந்து- வெள்ளம் பொங்கி வருகிறது. நான் என் கண்ணாலே பார்த்தேன்" என்று சொல்லிக்கொண்டே மீண்டும் ஓடத் தொடங்கினார் முன்னவர். இதைக் கேட்டு ஆச்சரியமடைந்த அந்த அக்கிரஹாரவாசிகள் வேகமாக ஐயாவாள் விட்டை நோக்கி ஓட்டமும் நடையுமாகச் சென்றனர். இதற்குள் அங்கு ஒரு கூட்டமே கூடிவிட்டது. ஒருபுறம் சதாசிவப்பிரமம் தனது இனிய குரலால் மகிழ்ச்சி வெள்ளம் கரைபுரள, "துங்க தரங்கே கங்கே-ஜய-துங்கதரங்கே கங்கே" என்று குதித்துக் கொண்டே கங்கையை மகிழ்ச்சியுடன் வரவேற்றுக் கொண்டிருந்தார். ஐயாவாள் வீட்டின் அனைத்துப் பகுதிகளிலும் நீர் சூழ்ந்து வாயிற்படி வழியாகத் தண்ணீர் மற்ற வீடுகளை நோக்கி ஓட ஆரம்பித்தது.

இது என்ன ஆச்சரியமாக இருக்கிறது! சரி . . . சரி . . . ஐயாவாள் எங்கே? ஐயாவாள் எங்கே? என்று பலருடைய கண்கள் ஐயா வாளைத் தேடியன. கிணற்றின் அருகே கைகளைக் கூப்பியபடியே உலகைமறந்து, தியானித்துக் கொண்டிருந்தார் ஐயாவாள். அவருடைய பிரார்த் தனையை இறைவன் நிறைவேற்றியுள்ளான். ஆனால், அவரோ அது கூடத் தெரியாமல், இறைவனுடன் ஒன்றியிருந்தார்.

இதனைக் கண்ணுற்று ஆச்சரியமுற்ற கூட்டத்தினர் சாதாரணப் பாமர மக்களா? இல்லை. இல்லை. நன்கு படித்து ஆழ்ந்து - அகன்று நுட்பமாகப் பல சாஸ்திரங்களைக் கற்ற புலவர்கள். ஆச்சரியத்தில் ஒருவரோடு ஒருவர் நடந்தது பற்றிக் கேட்டுக் கொண்டு, "என்னையா? என்ன நடந்தது? ஐயாவாளுக்கு ஏதோ அபசாரம் செய்திருக்கா! அபசாரம் செய்தது யார்?" என்று ஒருவர் கேட்டார். அருகில் இருந்த ஒருவர் "எனக்கு எல்லாவிஷயமும் தெரியும். நான் முதலில் இருந்தே சொல்கிறேன்." என்று கூறியதும் அவரைச் சுற்றி கூடி விட்டனர்.

இந்த நிகழ்ச்சி நடந்து இன்றைக்குச் சுமார் 300 ஆண்டுகளுக்கு மேலாகிறது. அப்போது



இரண்டாம் சாஹஜி மன்னன் (கி.பி.1684_1710) தஞ்சையை அரசாட்சி செய்துகொண்டிருந்தான். இம் மன்னன் சிறந்த அறிவாளியாகவும், சிறந்த சாஹித்திய கர்த்தாவாகவும் விளங்கினான். சோழ மன்னர்களில் ராஜராஜனைப் போல்வும், தஞ்சை நாயக்க மன்னர்களில் ரகுநாதனைப் போலவும், தஞ்சை மராட்டிய மன்னர்களில் சாஹாஜி மன்னன் விளங்கினான். இவன் ஒரு பன்மொழிப் புலவன். இதனால் பல்வேறு மொழியறிஞர்களை ஆதரித்து அரசவைப் புலவராக நியமித்தும், அவர்களுக்கு இறையிலி நிலம் கொடுத்தும், குடியிருக்க குடியிருப்புகளைப் பல உருவாக்கிக் கொடுத்தும் ஆதரித்தான். கவிஞர்களைக் குடும்பக்கவலை இல்லாதவாறு பார்த்துக் கொண்டான். இதனால் பல இலக்கியங்கள் உருவாயின. இசை, நாட்டியம், நாடகம், நாட்டியநாடகம் போன்ற லலிதகலைகளை வளர்த்தான். இவன் தந்த சர்வமானிய அக்ரஹாரத்தில்_ கும்பகோணத்திற்கு அருகிலுள்ள சாஹராஜபுரத்தில்(இன்றைய திருவிசநல்லூர்)_ ஐயாவாள் ஒருகார்த்திகை மாதம் அமாவாசையன்று வீட்டுக் கிணற்றிலிருந்து கங்கை வெள்ளம் பெருகியது. இன்னும் இந்த நிகழ்ச்சியைப் பெரிய திருவிழாவாகவே கொண்டாடிவருகின்றனர் பக்தர்கள்.

"ஐயாவாள்" என்று அன்புகலந்த மரியாதையுடன் அழைக்கப்பெற்றவர் ஸ்ரீதர வேங்கடேசர். இவரது பரம்பரையினர் ஆந்திரப் பிரதேசத்திலுள்ள ராஜமஹேந்திரபுரத்தில் அமைச்சர்களாக விளங்கியவர்கள். பிர்ம்ம மார்ரயர் என்ற அமாத்தியர் குலத்தைச் சார்ந்தவர்கள். வேத சாஸ்திரங்களைப் பயின்று அதில் நிபுணராக விளங்கினார் ஸ்ரீதரர். 'கற்றதனால் ஆய பயன் இறைவனைப் பற்றுதலே' என்னும் குறிக்கோளுடன் வாழ்ந்தார். இவரது மதிநுட்பம், நல்லொழுக்கம், இறைபக்தி ஆகியவற்றில் ஆர்வம்கொண்ட இரண்டாம் சாஹஜி தமது அரசவையின் முக்கியமான புலவராக இவரை நியமித்தார். அடிக்கடி இவருடன் உரையாடி மகிழ்ந்தான். திருவிசநல்லூரில் உள்ள அக்ரஹாரம் முழுதுமே பல்வேறு சாஸ்திரங்களிலும், தர்சனங்களிலும் பல தேர்ச்சிபெற்ற வித்வான்கள் வாழ்ந்தனர். இவர்கள் கன்னடம், தெலுங்கு, மராட்டி, தமிழ், மலையாளம் போன்ற மொழிகளைத் தமது தாய்மொழியாகக் கொண்டவர்கள். இதனால் இந்தக் கிராமமே இந்திய மொழிகளின் சங்கமமாகவும் விளங்கிற்று. ஸ்ரீதரர் 'சிறந்த அரசவைப் புலவர்' என்ற சிறப்பைப் பெற்றிருந்தாலும், விநயம் மிகுந்தவராகவும், அனைத்து உயிர்களிலும் இறைவனைக் காணும் ஒரு அத்வைதியாகவும் விளங்கினார்.

கார்த்திகை மாதம் அமாவாசை அன்று அவரது பெற்றோர்களுக்குத் திதி. இதனைப் பக்தி சிரத்தையுடன் சிறப்பாகச் செய்வது அவரது வழக்கம். இதற்காக முதல் நாளே மூன்று அந்தணர்களை அழைத்திருந்தார். இவர்களும் முதல் நாளிலிருந்தே பட்டினி கிடந்து இந்தக் காரியத்தைச் செய்தல் வேண்டும் என்பதே மரபு. அதன்படி மூன்று அந்தணர்களும் முதல் நாளே இவருடைய இல்லத்திற்கு வந்து தங்கியிருந்தனர். வழக்கம்போல ஸ்ரீதரவேங்கடேசர் அதிகாலை நீராடித் தமது கடமைகளைச் செய்துவிட்டு, சிவத்யானத்தில் ஈடுபட்டிருந்தார். அப்போது அவருடைய வீட்டில் திதிக்குரிய உணவுப் பண்டங்கள் தயாராகிக் கொண்டிருந்தன. இந்நிலையில் ,

'. . . ஆண்டே! கும்பிடறேனுங்க என்ற குரல் வந்தது. தியானம் கலைந்த ஸ்ரீதரவேங்கடேசர் ஒலி வந்த திசையில் திரும்பினார். அங்கே சுடலை காக்கும் தொழிலாளி ஒருவன் நின்று கொண்டிருந்தான். 'என்ன? என்னும் பாவனையில் குறிப்பாகப் பார்த்தார் ஸ்ரீதரர். "ஆண்டே! எனக்குப் . . பசி. தாளமுடியவில்லை. எனக்குச் சாப்பாடு போடுங்கள் ஆண்டே" என்றான் வந்தவன். ஸ்ரீதரருக்கு அவனது குரல் என்னவோ செய்தது. நீக்கமற நிறைந்துள்ள இறைவன் அவனது உள்ளத்திலும் சுடர்விடுவதை உணர்ந்தார் ஸ்ரீதரர். ஆகாயத்தில் சுடர்விடும் சூரியனின் ஒளி கங்கையாற்றிலும், குட்டை நீரிலும், சாக்கடை நீரிலும்தான் விழுகிறது. ஆனால் அந்த ஒளியில் பேதம் உண்டா? அல்லது அதில்விழும் பிம்பத்தில்தான் பேதம் உண்டா? இல்லையே. இந்த வெட்டியானின் உள்ளத்திலும் என் உள்ளத்திலும் இறைவன் ஒன்றாகத்தானே ஆத்மஜ்யோதியாகப் பிரகாசிக்கிறான்? இதில் உயர்வென்ன? தாழ்வென்ன? என நினைத்தார்.



"வா. . . வா. . . . உட்கார்." என்று வந்தவனை உட்காரச் சொன்னார். திதிக்காகத் தயாரித்த உணவுப் பண்டங்களை அவனிடம் கொடுத்தார். மகிழ்ச்சி கண்களில் பொங்க 'சாமி! வரேனுங்க!' என்று விடைபெற்றுச் சென்றான் வந்தவன். அவனது மகிழ்ச்சியில் தானும் மகிழ்ந்தார் ஸ்ரீதரர். உணவிட்ட மகிழ்ச்சியுடன் சற்றே திரும்பினார். . . . . .

அங்கே. . . . .

மூன்று அந்தணர்களும் நின்றுகொண்டு இருந்தனர். ஆம். . . அவர்கள் நேற்றுமுதல் இவருடைய இல்லத்தில் விரதமிருந்தவர்கள். அடுத்த கணம் . . . 'தாம் செய்த செய்கை சாஸ்திரக் கொள்கைக்குப்புறம்' என்பதை உணர்ந்தார். இவரது நிலை இப்போது உண்மையிலேயே 'தர்மசங்கடமான நிலை' தான். அவர்களைப் பார்த்த ஸ்ரீதரர் 'ஸ்வாமி! காரியம் நடந்துவிட்டது. இனி நான் செய்யவேண்டியதைக் கட்டளையிட்டருளுங்கள்' என்றார். வந்தவர்கள் 'உங்களுக்குத் தெரியாதா? நீங்கள் பெரிய பண்டிதராயிற்றே'! என்றனர். இதற்குப் பிராயச்சித்தம் . . . . . . . . . . . . கங்கையில் நீராடுவதுதான்.

அது இப்போது நடக்கும் செயலா? இல்லை . . . . முடியாது. ஸ்ரீதரின் வாய்முணுமுணுத்தது. ஏன்முடியாது? எல்லாவற்றுக்கும் அந்தர்யாமியாக இருக்கும் பரமேஸ்வரனுக்கு இது தெரியாதா? அடுத்த கணம் தனது வீட்டின் கிணற்றுக்கருகில் சென்றார். ஹே பரமேஸ்வரா! கங்காதரா! எனது பெற்றோர்களுக்குரிய கடமையை நாள் செய்யவேண்டும். ஆனால் அந்தணர்களோ என்னைக் கங்கையில் நீராடிவர உத்திரவு செய்துள்ளனர். எனக்கு விதிக்கப்பட்டுள்ள கடமைகளை நான் நிறைவேற்ற வேண்டும். ஸ்வாமி! உன்னைத் தவிர வேறு கதியில்லை என்று சிவனைக் குறித்து 'கங்காஷ்டகம்' என்ற எட்டு செய்யுளைப் பாடினார். அவரது வீட்டுக் கிணற்றிலிருந்து கங்கையின் பிரவாகம் இறையருளைப் போலப் பெருகியது. அந்தத் தண்ணிரில் ஆமைகளும் மீன்களும் மற்றும் கங்கையில் வாழும நீர்வாழ் ஜந்துக்களும் வந்ததாம்.

உண்மையான பக்தியும், கொள்கைப் பிடிப்புமே ஒருவனை அமரனாக உய்க்கும் என்பதற்கு ஸ்ரீதரரைவிட ஒரு சான்று வேண்டுமோ?



# ஸ்ரீ சேதுபாவா ஸ்வாமிகள்

பி. இராமச்சந்திர கேஸ்கார்



மகாராஷ்டிர போஸலகுல மன்னர் சத்ரபதி சிவாஜியின் குருவான ஸ்ரீ சமர்த்த ராமதாஸ் ஸ்வாமிகள், தஞ்சைப் பிராந்தியத்தில் தன் மூன்று சீடர்களை அனுப்பி, ஸ்ரீராமபக்திப் பிரசார கேந்திரங்களை அமைத்தார். அதில் தஞ்சையில் பிகாஜிபாவா என்கிற ஸ்ரீ பீம ஸ்வாமிகளையும், மன்னார்குடியில் ஸ்ரீ அனந்தமௌனி ஸ்வாமிகளையும், கோனூரில் ஸ்ரீ ராகவ ஸ்வாமிகளையும் மடாதிபதியாக நியமித்தார். இது கி.பி. 1677-இல் நிகழ்ந்தது.

மன்னார்குடியில் ஸ்ரீ அனந்தமௌனி ஸ்வாமிகள் ஸ்ரீராமருக்குக் கோவிலை அமைத்துப் பக்திப் பிராசரம் செய்தார். இவருக்கு ஸ்ரீ மேரு ஸ்வாமிகள், ஸ்ரீமேகஸ்யாம ஸ்வாமிகள் என்று இரு சீடர்களும், ஸ்ரீ மேருஸ்வாமிகளுக்கு சியாமராஜர், சேதுஸ்வாமிகள் என்ற இரு சீடர்களும் இருந்தனர்.

தஞ்சையைக் கி.பி. 1739-1763 முடிய ஆட்சி செய்த மன்னர் பிரதாபசிம்மன் ஆவார். இவர் ஆன்மீகத்தில் நாட்டம்கொண்டு, தஞ்சையில் இருக்கும் ஸ்ரீ சமர்த்த சம்பிரதாய மடத்தின் அதிபதியான ஸ்ரீ பீமராஜ ஸ்வாமிகளிடம் சென்று தனக்கு அருள்செய்யவேண்டும் என வேண்டினார். அதற்கு ஸ்வாமிகள் "நான் உலக வாழ்க்கையில் இருந்து விடுபட முடிவு செய்துள்ளேன். ஆகையால் நீங்கள் மன்னார்குடியில் இருக்கும் சேதுபாவா ஸ்வாமிகளிடம் சென்று ஆசி பெறவும்" என்று கூறினார்.

மன்னர் பிரதாபசிம்மன், மன்னார்குடியில் அமைந்த ஸ்ரீ சமர்த்த சம்பிரதாய மடத்தின் அதிபதியான ஸ்ரீ சேதுஸ்வாமிகளிடம் சென்று அருள் ஆசிபெற்று தன் குருவிற்குத் தஞ்சையில் கீழராஜவீதியில் தன் அரண்மனைக்கு எதிரில் ஒரு மடம் கட்டிக் கொடுத்து தங்கச் செய்து, குரு காணிக்கையாக நிறையப் பொன்னும், பொருளும் கொடுத்துக் கௌரவித்தார்.

ஸ்ரீ சேது ஸ்வாமிகளின் விசேஷ ஆராதனைக்காகத் தஞ்சையில் மேலவீதியின் கடைசியில் ஒரு வீர ஆஞ்சனேயர் கோவிலையும் கட்டிக் கொடுத்தார். அது பிற் காலத்தில் மன்னர் பெயரால் பிரதாப வீர ஹனுமார் கோவில் என அழைக்கப்படலாயிற்று. அது தற்காலத்தில் மூலை ஹனுமார் கோவில் என்று வழகப்படுகிறது.

ஸ்ரீ சேது ஸ்வாமிகள் ஸ்ரீ சமர்த்த சம்பிரதாயப்படி ஆராதனை செய்து, இராம பக்திப் பிரசாரம் செய்து உரிய காலத்தில் ஸ்ரீ இராமர் அடி சேர்ந்தார்.

இன்று ஸ்ரீ சேது ஸ்வாமிகளின் நினைவாக மன்னார்குடியில் அன்னச் சத்திரமும், அரித்ரா நதி என்னும் குளமும், அக் குளக்கரையில் உள்ள கோவிலும், பட்டுக்கோட்டை வட்டத்தில் சேதுபாவாச் சத்திரம் என்னும் ஊரும், தஞ்சையில் ஸ்ரீ பிரதாபவீர ஹனுமார் கோவிலும் விளங்கி இவர் பெயரையும், புகழையும் இன்றும் நிலை நிறுத்தி வருகின்றன.

ஸ்ரீ சேது ஸ்வாமிகளின் சமாதி குடந்தைக்கு அருகில் உள்ள குத்தாலத்தில் அமைந்திருக்கிறது.



# பாஸ்கர ராயர்

தேதியூர் கிருஷ்ணமூர்த்தி சாஸ்திரிகள்

பராசக்தியையே பரம்பொருளாகக் கருதி வழிபடும் முறைக்கு அறுவகைச் சமயத்தில் சாக்தம் என்று பெயர். சக்தி என்பது பரம்பொருளின் அருட்பண்பு எனவும் அது செயல்பட்டால்தான் படைத்தல் முதலிய ஐந்தொழில்களுமே நடைபெறும் என்றும் சாக்தம் கூறுகிறது. ஆதிசங்கரர் இக்கருத்தைத் தம் சொந்தர்யலகரியில், "சிவ: சக்த்யா யுக்தோ யதி பவதி சக்த: ப்ரபவிதும் ந சேதேவம் தேவோ ந கலு குசல: ஸ்பந்திது மபி" என அருளிச் செய்கிறார். (சிவம் எனும் பொருளும் ஆதி சக்தியொடு சேரின் எத்தொழிலும் வல்லதாம்; இவள்பிரிந்திடின் இயங்குதற்கும் அரிது அரிது எனா மறை இயம்புமால்" - கவிராஜ பண்டிதர் மொழிபெயர்ப்பு)

இச் சாக்தத்திற்கு ஏராளமான தத்துவ நூல்களும், சடங்குமுறைகளைக் கூறும் நூல்களும் உள்ளன. பரசுராம கல்ப சூத்ரம் என்பது மிகப் பழமையான நூல். சாக்தத்திற்குரியனவாக 64 தந்திரங்கள் காணப்படுகின்றன. இத் தந்திர நூல்களில் பல காஷ்மீரத்தில் தோன்றின என்பதும், அவை த்ரிகம் எனப்படும் காஷ்மீர சைவ தத்துவத் தொடர்பு உடையவை என்பதும் குறிப்பிடத்தக்கவை.

சக்திவழிபாடு மது, மாமிசம் முதலியவற்றோடு வழிபடும் வாமாசாரம் (இடது சாரி) எனவும், அப்படியல்லாத தூய தட்சிணாசாரம் எனவும் இருவகைப்படும். இவ் வலது சாரியாகிய தட்சிணாசாரத்திலும் உள்முக வழிபாடு, வெளிப்படையான வழிபாடு என இருவகை உண்டு. இந்த உள்முக வழிபாடு வித்யை எனப்படும். குறிப்பிட்ட ஒரு உருவத்தைத் தியானத்து அதற்குரிய மந்திரத்தை உருவேற்றிச் சித்தியடைதல் வித்யை ஆகும்.

இத்தகைய வித்யைகளில் ஸ்ரீவித்யை என்பது மிகப் பரவலானதும் புகழ்பெற்றதுமாகும். இதனைப் பிரம்மவித்தை எனவும் கூறுவர். இந்தப் பிரம்ம வித்யையைச் சங்கரருடைய அத்வைத சித்தாந்தத்துடன் இணைத்து வழங்கும் நெறியில் தலைசிறந்த ஆசிரியர் பாஸ்கர ராயர் ஆவார். இவர் பல்வேறு துறைகளில் 42 வடமொழி நூல்களை இயற்றியுள்ளார். இவற்றுள் சண்ட பாஸ்கரம், நியாய மண்டனம், வ்ருத்த சந்த்ரோதயம், சந்த்ர சாலா, ஸ்ம்ருதி தத்வம், பாவனோபனிஷத் பாஷ்யம், ஸௌபாக்யபாஸ்கரம் என்னும் லலிதா சஹஸ்ரநாம பாஷ்யம், வரிவஸ்யா ரகஸ்யம் முதலியன மிகவும் குறிப்பிடத்தக்கன ஆகும்.

உமானந்த நாதர் என்னும் ஜகன்னாத பண்டிதர் இந்தப் பாஸ்கர ராயரின் சீடர் ஆவார். அவரால் இயற்றப்பெற்ற ஸ்ரீ பாஸ்கர விலாசத்திலிருந்து பாஸ்கர ராயரின் வாழ்க்கை வரலாற்றுச் செய்திகள் சில தெரிய வருகின்றன.

இவர் மராட்டிய மாநிலத்தில் பாகா என்னும் நகரத்தில் கம்பீர ராயருக்கும் கோனமாம்பாவிற்கும் மைந்தராகத் தோன்றினார். இவர் சற்றேறக் குறைய கி.பி.1690 இல் தோன்றி இருக்கலாம் என்பது அறிஞர்களின் கருத்து. கம்பீர ராயர் பெரும் பண்டிதர்; விஜய நகரத்து மன்னனால் "பாரதி" எனப் பட்டமளிக்கப்பெற்றவர். தந்தையார் தம்



மகனை எட்டாவது வயதில் காசிக்கு அழைத்துச் சென்று அங்குள்ள நரசிம்மாத்வரி என்பவரிடத்தில் வேதக்கல்வியைக் கற்க ஏற்பாடு செய்தார். பாஸ்கர ராயர் வேதத்தோடு வேறு பல கலைகளையும் சிறப்புறக் கற்றார். கங்காதர வாஜபேயி என்பவரிடம் கௌட தர்க்கத்தைப் பயின்றார்.

உரிய வயதில் ஆனந்தி என்னும் மங்கையை மணந்து பாண்டுரங்கன் என்னும் மைந்தனைப் பெற்றார். நான்காவது வேதம் ஆகிய அதர்வண வேதத்தைப் பயில்வார் அருகி வருவதை உணர்ந்து, பாஸ்கர ராயர் தாமே பயின்று, பல மாணவர்களுக்குச் சொல்லிக் கொடுத்தார் என்பது குறிப்பிடத்தக்க ஒரு செய்தி. தேவி வழிபாட்டில் ஈடுபட்டுப் பிரகாசானந்தநாதர் என்னும் தீட்சைப் பெயருடைய சிவதத்த சுக்லர் என்பவரிடம் ஸ்ரீவித்யை உபதேசம் பெற்றார். இதன்பிறகு இவருடைய தீட்சாநாமம் பாசுரானந்த நாதர் என வழங்கப்பெற்றது.

பாஸ்கரராயர் தம் மனைவி ஆனந்தியையும் ஸ்ரீவித்யையில் ஈடுபடுத்திப் பத்மாவதி எனப் பெயர் வழங்கினார். இவர் பல மாநிலங்களுக்கும் சென்று பல புலவர்களை வாதில் வென்றார். இவரால் வெல்லப்பட்ட ஒரு துறவி தம் பூர்வாஸ்ரம உறவினப்பெண் ஆகிய பார்வதியை இரண்டாவது மனைவியாக மணமுடித்துக் கொடுத்தார். இவர் காசியில் இரு மனைவியருடனும் சில காலம் வசித்திருந்தார். அங்கு "சோமயாகம்" என்னும் பெருவேள்வியைச் செய்தார்.

சில ஆண்டுகள் கழித்துத் தென்திசை நோக்கிக் குடும்பத்துடன் புறப்பட்டார். சந்திரசேனன் என்னும் சிற்றரசனது வேண்டு கோளுக்கிணங்கிக் கிருஷ்ணா நதிக்கரையில் கொஞ்சகாலம் தங்கியிருந்தார். பிறகு மேலும் தெற்கு நோக்கி வந்து தஞ்சாவூர்ச் சமத்தானத்தை அடைந்தார். தமக்குத் தர்க்க சாத்திரம் போதித்த கங்காதர வாஜபேயி அவர்கள் காவிரியின் தென்கரையில் உள்ள திருவாலங்காடு என்னும் தலத்தில் வசிப்பதாக அறிந்து தாமும் அருகே இருக்க விரும்பினார். இவர் விருப்பப்படியே அந்நாளைய மராட்டிய மன்னர் திருவாலங்காட்டிற்கு அருகே பாஸ்கர ராஜபுரம் என்னும் அந்தணர் குடியிருப்பை அமைத்து இவருக்கு வழங்கினார். அங்கே வசித்திருந்த பாஸ்கர ராயர் சிலநாள் கழித்துத் திருவிடைமருதூரில் குடியேறினார்.

தம் முதுமைப் பருவத்தை இவர் திருவிடைமருதூரிலேயே தேவி உபாசனையில் கழித்தார். இவரால் வழிபடப்பெற்ற "ஸ்ரீசக்ர பூர்ணமேரு" இன்றும் திருவிடைமருதூர்ப் பெருங்கோயிலில் மூகாம்பிகை சந்நிதியில் வழிபடப்பெறுகிறது. இவர் 95 ஆண்டுகள் வாழ்ந்தார் என்று கூறப்படுகிறது. அதனால் இவர் ஏறக்குறைய கி.பி.1785 இல் தம் பூத உடலை நீத்து இறையருளில் இரண்டறக் கலந்தார்.

பாஸ்கர ராயர் ஆறு கோயில்களைக் கட்டியிருப்பதாக அறியப்படுகிறது. காசியில் சக்ரேஸ்வரர் ஆலயம், மூலஹ்ரதத்தில் பாண்டுரங்கர் ஆலயம், கொங்கணத்தில் கம்பீர நாதர் ஆலயம், இராமேஸ்வரத்தில் வஜ்ரேஸ்வரர் ஆலயம், ஸம்நதி என்னும் தலத்தில் சந்த்ரலாம்பாதேவியின் ஆலயம், சோழ நாட்டில் கஹோளேஸ்வரர் ஆலயம் என்பன அவை. இவற்றுள் சந்த்ரலாம்பா என்னும் தேவி பாஸ்கர ராயரின் குலதேவதை என்பதும், இக்கோயில் ஸ்ரீசக்ர வடிவில் கட்டப்பட்டுள்ளது என்பதும் சிறப்பாகக் குறிக்கப்பட வேண்டியனவாகும்.

இவருடைய வாழ்நாளிற்குப்பிறகு இவருடைய மூத்தமனைவி ஆகிய ஆனந்தி என்னும் பத்மாவதி அம்மையாரால் பாஸ்கரராஜபுரத்தில் பாஸ்கரேஸ்வரர் கோயில் கட்டப்பட்டு இன்றளவும் வழிபாடுகள் செம்மையாக நடைபெறுகின்றன.

மராத்திய மொழியில் உள்ள, "ஸ்ரீ வித்யா குருபரம்பரா ப்ரபாவம்" என்னும் நூலிலும் இவருடைய வாழ்க்கை வரலாறு இடம்பெற்றுள்ளதென்பர். தஞ்சாவூர் பண்டித எஸ். சுப்பிரமணிய சாஸ்திரிகள் அவர்களும் (1934), சென்னை குகானந்த மண்டலியைச் சேர்ந்த ந. சுப்ரமணிய அய்யர் அவர்களும் (1938) பாஸ்கரராயருடைய சில வடமொழி நூல்களைத் தமிழ் உரையுடன் வெளியிட்டுள்ளனர்.

# தமிழகத்தில் கோயில் அமைப்பு

கரந்தை கோவிந்தராசனார்

சங்ககாலத்தில் கட்டப்பட்டிருந்த தெய்வ கோட்டங்கள் காலத்தால் சிதைந்தும் அழிந்தும் போயின. அதன் வளர்ச்சியாகவும் நிலையான கட்டிட அமைப்புடையனவாகவும் கட்டப்பட்ட கோயில்கள் ஒவ்வொன்றும் கருவறை



நன்றி: ஆனந்தவிகடன்

(இறையகம்), நடு மண்டபம், முகமண்டபம் என்ற அளவில் சிறியவடிவில் அமைக்கப்பட்டன. பின்னர், கோயிலைச் சுற்றிலும் ஒரு திருச்சுற்றும் மதிலும் கட்டப்பட்டன. திருச்சுற்றில் பலிதெய்வங்கட்குச் சிறுசிறு கோயில்கள் கட்டப்பெற்றன. மதிலில் முன்பக்கவாயிலோடு அமைத்தலோடு சுற்றுப்புறங்கட்கேற்ப மற்றைய மூன்றுபுறமும் வாயில்கள் முதலாம் இராசேந்திரன் காலம்வரையில் கருவறைக்கு மேல் விமானம் என்னும் கட்டுமானம் உயர்த்திக் கட்டப்படடது. அதன்பின்னர் விமானம் உயரத்தில் குறைந்து மதிலின் வாயில்களில் கோபுரங்கள் உயர்த்தப் பட்டன. பெரிய கோயில்களில் மூன்று சுற்று, ஏழு சுற்று என்ற அளவுகளில் திருச்சுற்றும் மதில்களும் எழுந்தன. அவற்றின் இடையே திருக்குளங்களும், நந்தவனங்களும் உண்டாயின.

கோவில்கள் செல்வாக்கில் பெருகப்பெருக அவற்றில் பல மண்டபங்கள் ஏற்பட்டன. சில கோயில்களில் ஆயிரக்கால் மண்டபமும், திருச்சுற்றில் மதிலைத் தொடர்ந்து மாளிகைப்பத்தியும் கட்டப் பெற்றன. கோயிலுக்குப் புறச்சுற்றில் அர்ச்சகர், கோயில் பணியாளர்கள், நந்தவனப்பணியாளர், தவசிகள் ஆகியோர் தங்கியிருந்து பணிசெய்தற்கு இல்லங்கள் அமைக்கப்பட்டன. அப் பகுதி மடவளாகம் என்று கூறப்பட்டது. நாள்வழிபாட்டுப் பணியுடன் திருவிழாக்களில் ஆடல் பாடல் நிகழ்த்துதற்கும் தேவரடியார்கள் இடம் பெற்றனர். இவ்வாறாகப் பலதுறைகளிலும் வளர்ச்சிபெற்ற கோயில்கட்கு அரசரும் பிறரும் அளித்த நிலபுலன்களும், பிற வருவாய்களும், பொன்னும் அணிகலன்களும், திருவிளக்கு நிவந்தமாக அளிக்கப்பட்ட ஆடு மாடுகளும் பெருகி நின்றன.

அவற்றைக் கண்காணிக்கும் பொறுப்பு ஊர்ச்சபையாரிடம் இருந்தது. பேரூர்களில் ஊர்ச்சபையின் வாரியங்களுள் தலைமையான சம்வத்சர வாரியத்தார்கள் கோயில் நிர்வாகத்தினைக் கவனித்து வந்தனர். இவற்றிற்கு மேலாகக் கண்காணிப்பும் இருந்துளது.

## கோயில் நிர்வாகத்துறை

கி. பி. ஏழாம் நூற்றாண்டிலிருந்து சைவ அடியார்களும், வைணவ ஆழ்வார்களும் பக்தி நெறியினை மக்களிடம் தொடர்ந்து



வளர்ப்பாராயினர். தமிழ் மக்களின் மரபு வழித் தொடர்ந்தமொழிப்பற்று, இசைக்கலை இவ்விரண்டினையும் இணைத்துத் தெய்வப் புகழ்ச்சிப் பாடல்களைப் பத்திநெறியுடன் கூட்டி அளிப்பாராயினர். மற்றும் அவ்வவ்வூர்களில் இருந்த கோயில்களில் எழுந்தருளி இருந்த சிவனையும் திருமாலையும் இசைத் தமிழ்ப்பாடலில் ஊரின் பெயருடன் அமைத்துப்பாடினர். இவ்வாறு கோயில் நிறுவன ஆவணங்களாக இசைப்பாடல்கள் மதிப்பீடு செய்யப் பெற்றதோடு பாடல்பெற்ற கோயில்கள் சமயச் சார்பில் தலங்களாயின. இவ்வகையில் 1008 சிவத்தலங்களும், 108 வைணவத் தலங்களும் பெருகி நின்றன. இவற்றுள் பெரும்பான்மையான தலங்கள் தமிழக எல்லைக்குட்பட்டவைகளே யாகும்.

கோயில்கள் மதிப்புடைய வருவாய்களும், மூலப்பொருள்களும் பெற்று வளர்ச்சியடைந்து வரும் நிலையில் அவற்றின் பாதுகாப்பையும், நடைமுறை நிர்வாகத்தினையும், வரவு செலவுகளையும் தனித்த நிலையில் கண்காணிக்க வேண்டிய சூழல் அமைவது இயல்பாக அமைந்தது. இந் நிலையினைப் பல்லவ அரசர்கள் உணர்ந்தவராகக் கோயில் ஆட்சிக்கு ஊர்ச்சபையாரையும், ஊர்ப்பெருமக்களையும் அமைத்திருந்தனர். இதன் வளர்ச்சியாகப் பல தெய்வகாரிய நிர்வாக சபைகள் தோற்றுவிக்கப்பட்டு அறநிலையில் பணி செய்துள்ளன. இவ்வாறமைந்த கோயில் நிர்வாக தர்மகர்த்தாக்கள் குழு பாண்டியராட்சியிலும் சோழர் ஆட்சியிலும் தொடர்ந்து இருந்ததோடு, பல்வேறுபட்ட அங்கங்களுடன் ஒரு துறையாகவே இயங்கியுள்ளதனைக் கல்வெட்டுகள் தரும் செய்திகளால் அறிய முடிகின்றது.

## கோயிலும் - மூலதனமும்

முதல் இராசராசன் கி. பி. 1006ல் தஞ்சையில் கருங்கல்லால் மிகப்பெரிய மாடக்கோயிலைக் கட்டினான். அக்கோயிலின் நிர்வாகத்திற்குப் பல ஊர்களைத் தேவ தானமாகச் செய்து வைத்தான்.



இவ் வரசனின் ஆட்சியாண்டு 19 ல் (கி. பி. 1004) ஸ்ரீகண்டராதித்த தேவர் நம்பிராட்டியார் ஸ்ரீ உத்தம சோழதேவரைத் திருவயிறு வாய்த்த உடைய பிராட்டியார் செம்பியன்மாதேவியார் திருவக்கரையில் சிவலோகநாதசுவாமி கோயிலைக் கருங்கற் திருப்பணியாகச் செய்ததுடன் அக்கோயிலின் மூலதனமாக மணலி என்ற ஊரினைத் தேவதானமாகச் செய்துள்ளார்.

சோழர் படையில் தானதொங்கன் தெரிந்த படைத்தலைவன் அரையன் கேயவிடங்க்ன், உடையார்குடி அனந்தேசுவரத்தில் கி. பி. 957 ல் கூத்தப்பெருமான், கணபதியார், பிச்சதேவர் ஆகிய மூவர்க்கும் ஸ்ரீகோயில்கள் கற்றளியாக எடுத்துள்ளான்.

சோழமன்னன் அரிஞ்சயன் ஆட்சியில் (கி. பி. 957) பவானி வட்டம் காவேரிபுரத்தில்

கருவூரான் கன்னரதேவ மாயிலட்டி (எண்ணெய் வணிகன்) கட்டிய நாட்டீசுவரம் என்ற சிவன்கோயிலுக்குத் துவளை, வளஞ்சியர் என்னும் வணிகக்குழுவினர் பொன், நிலம், மனை, தோட்டம் ஆகியவற்றைக் கோயிலுக்கும் கோயில் பணியாளர்க்கும் போகமாக அளித்து இறையிலி செய்துள்ளனர்

வீரபாண்டியன் ஆட்சியில், நடுநாட்டுத் தீர்த்தநகரி திருத்தினை நகருடையார் கோயிலில் வைகாசி மாதம் நிகழும்,

"வைகாசி விசாகத்தே திருக்கடலிலே தீர்த்தம் பிரஸாதிக்கவும், திருநாவுக்கரசர் திருநாள் முதலாக நாச்சியார் திருநாள் அறுதியாக நாள் பன்னிரண்டுக்கும் அமுதுபடி சாத்துபடி திருப்பள்ளித்தாமம் திருவிளக்கு எண்ணை உள்ளிட்டவையிற்றுக்கு உடற்கொள்படிக்குக் கொள்வதாக நிச்சயித்த வழிச்சாரிகை - வரிக்காசுகள்"

இவ்வாறாகக் கோயில்களின் மூலதனமாகவும், வழிபாடு, நிர்வாகச் செலவினங்கட்கமைந்த வருவாய்களாகவும் நிலங்கள், ஊர்கள், மலை, தோட்டங்கள், பொற்காசுகள் வரிகள் ஆகியவைகளும் பிறவும் அமைந்திருந்தன.

## கோயில் பண்டாரம்

சோழமன்னர் ஆட்சியில் வருவாய் நிறைந்த சைவ வைணவக் கோயில்களில் பண்டாரங்கள் அமைக்கப்பட்டிருந்தன. பண்டாரத்தில் கோயில் வருவாய்களான நெல் முதலான தானியங்களும், பொன்னும் பொருளும், அணிகலன்களும் பாதுகாக்கப் பெற்றன. பண்டாரம், ஸ்ரீ பண்டாரம், தேவர் பண்டாரம், உடையார் பண்டாரம், கோயில் பண்டாரம் என்ற பெயர்களால் சுட்டப் பெற்றன.

## பண்டாரக் காப்பாளன்

பண்டாரக் காப்பாள்ன் பண்டாரி என்று சுட்டப் பெற்றுள்ளான்

## கோயில் பண்டார இடங்கள்

கோயிலுக்குரிய பொற்காசுகள், இரத்தின அணி கலன்கள், திருமேனிகள். பொன், வெள்ளி, செம்பு, பித்தளை ஆகிய உலோகங்களினால் செய்யப்பட்ட வழிபாட்டுக்குரிய பொருள்கள் ஆகியவற்றைக் காப்பதுடன், நாள் நிவேதன அமுதுக்குரிய நெல் வருவாயினையும் பாதுகாத்து அளிக்கும் பண்டாரம் கோயிலின் ஒரு பகுதியாகவே அமைக்கப்பட்டிருந்தது. இத்தகைய பண்டாரத்தினை, கோயில் பண்டாரம், தேவர் பண்டாரம், உடையார் பண்டாரம் என்ற பெயர்களால் கல்வெட்டுகள் குறிக்கின்றன.

1. கோயில் - பண்டாரம்
2. உடையார் - உள்ளூர் பண்டாரம்
3. நாட்டுப் பண்டாரம்.

1. ஒரு வரையறைக்குட்பட்ட நிலபுல மூலதனங்களை நேரில் கண்காணிக்கும் அளவில் இருப்பதாயின் கோயிலிலேயே மூலபண்டாரம் இயங்கும்.

2. கோயிலுக்குரிய நிலபுலன்கள் மிகுதியாக உள்ளூரிலும் சார்ந்த ஊர்களிலும் இருக்குமானால் வெளியூர் பண்டாரமும் கோயிலுக்குரிய முறையில் இயங்கும்.

3. தேவதான இறையிலி நிலங்களுடன் ஊர்வருவாய்களும் அமையுமானால், கோயிலுக்குரியதாக நெல் அளக்கும் ஊர்களில் ஏற்புடைய ஊரில் நாட்டுப் பண்டாரம் அமைக்கப்பெற்று, அவ்வப் போது நெல், பொன் வருவாய்களை வசூலிக்கும் செயல் நிகழும். நாட்டுப் பண்டாரம் கோயிலுள்ள ஊரிலும் அமைக்கப்பெறும்.

## அரசு பண்டாரங்கள்

கோயில்கட்குரிய நிலபுலன்களின் பொருளாதார அளவீடுகட்கேற்ப மூன்று நிலைகளில் பண்டாரங்கள் அமைக்கப் பெற்றிருந்ததைப்போன்றே, அரசுக்குரிய முலதனங்களையும், இறை வரி பஞ்சவாரம் ஆகிய நெல், பொன், காசு வருவாய்களையும் வரவுகொள்ளும் பண்டாரங்கள் இருந்துள்ளதனை முதல் இராசராசன் கல்வெட்டுகளில் நன்கு அறியமுடிகின்றது.

அரசுக்குரியதாக நாட்டில் மக்களிடமும், உரிய நிலபோகமாகவும், விளைவின் புள்ளி பார்த்து ஆறிலொரு கடமையாகக் கொள்ளப்பட்ட நெல்லை உரிய அதிகாரி ஊர்ச்சபையார் வழி கணக்குடன் பெற்று; குறித்த இடத்தில் அமைந்த நாட்டுப்பண்டாரங்களில் கொண்டுவந்து சேர்ப்பிப்பார். இத்தகைய அதிகாரம் 'காரளவு' என்று பெயர் பெற்றிருந்தது. இவ்வாறமைந்த நெல் வசூல் அதிகாரமாகிய காரளவு கால வழக்கில் மாற்றம் பெற்று இன்று பண்ணையாளர்களிடத்தில் அறுவடை செய்து களத்தில் அடித்து, நெல்லை மூட்டைகளாகக் கொண்டுவந்து சேர்க்கும் பணியாளராகிய 'கார்வாரி'களைச் சுட்டும் பெயராக இருப்பது குறிப்பிடத்தக்கதாகும்.

## காரளவு

அரசுக்கோ, கோயிலுக்கோ உரிய நிலங்களில் இருந்து வரும் நெல்லை அரசியலார் அல்லது ஊர்ச்சபையார் மேற்பார்வையில் அளந்து கொண்டு வந்து உள்ளூர்ப்பண்டாரக் களஞ்சியத்தில் சேர்க்கும் அலுவல் 'காரளவு' என்பதாகும். இப்பணியினைச் செய்தானும் காரளவு என்ற பெயரால் சுட்டப்பட்டான்.



## பண்டாரி - பிராமணர்

சோழர் அரசியலில் கோயில் பண்டாரங் கட்குக் காப்பாளராக நியமிக்கப்பட்ட அதிகாரிகள் - அனைவரும் பிராமணர்களாகவே இருந்துள்ளது. சோழ மன்னர்கட்கு அரசியல் குருவாக - வேதாகம பண்டிதர்களாகிய பிராமணர்களே இருந்துள்ளனர். எனவே ஆச்சாரியர்களின் திட்டப்படியே கோயில் பண்டாரங்கட்கும் பிராமணர் நியமிக்கப்பட்டுள்ளனர் என்பதை அறிய முடிகின்றது. பண்டாரிகளாக நியமிப்பதற்குரிய பிராமணர்கட்குச் சில தகுதிகளும் இருக்க வேண்டுமென்று திட்டப்படுத்தப் பெற்றுள்ளது.

## தகுதிகள்

சோழர் ஆட்சிக்குட்பட்ட "சோழ மண்டலத்தும், பாண்டிநாடான ர்ாஜராஜ மண்டலத்தும், தொண்டை நாடான ஜயங்கொண்ட சோழ மண்டலத்தும் பிர்மதேயங்களிலாரே, · (இறையிலியாக நிலதானங்களைப்பெற்ற பிராமணக் குழுவினரே) அவ்வவர் பிர்மதேயங்களில் (ஊர்களில்) பூமி சம்பத்தும், பந்து சம்பத்தும், அர்த்த சம்பத்தும் உடையாராயிருப்பாரை, ஸ்ரீ பண்டாரம் செய்ய பிராமணரையும், திருப்பரிசாரகஞ்செய்ய மாணிகளையும் சந்திராதித்தவல் இடக்கடவார் களாக உடையார் ஸ்ரீராஜராஜதேவர் திருவாய்மொழிந்தருள, இட்ட அவர்களில் பண்டாரி ஒருவனுக்கு ஓராட்டைக்கு (ஓராண்டுக்கு) நெல்லு நூற்றுக்கலமும் - ஸ்ரீ ராஜராஜீஸ்வரம் உடையார் நாட்டுப் பண்டாரத்தே பெறவும் ஆக இப்படி நிவந்தமாக உடையார் ஸ்ரீ ராஜராஜதேவர் திருவாய் மொழிந்தருளினபடி கல்லில் வெட்டியது"

இதனால், முன்னர் இறையிலி நிலமும் பிற சொத்துரிமைகளும் பெற்றிருந்த பிராமணரொரு வரை அத்தகுதியுடைய பிராமணர்க்குழு தேர்ந்து கோயில் பண்டாரியாக நியமிக்குமென்பதும், அதற்குரிய ஊதியமாக அரசு கோயில் பண்டாரத்தில் நெல்பெற அனுமதித்திருந்தது





என்பதும் மேலேகண்ட முதல் இராசராசன் கல்வெட்டுச் செய்தியால் அறிய முடிகின்றது.

## கோயில் பணியாளர்கள்

பல்லவர் பாண்டியர் சோழர் ஆகிய அரசர்களின் கல்வெட்டுக்களில் காணப் பெறும் செய்திகள் பெரும்பான்மையும் கோயிலைப் பற்றியும் கோயிலுக்குரிய அறநிவந்தங்களைப் பற்றியும் கூறுவனவாகவே உள்ளன. கல்வெட்டுக் களுள் நூற்றிற்குத் தொன்னூற்றைந்து கல்வெட்டுக்கள் கோயில்களிலேயே பொறிக்கப்பட்டுள்ளன. கல்வெட்டுக்களைக் கோயில் சுவர்ப்பகுதிகளிலும் தூண்களிலும் கல்தச்சர்களைக் கொண்டும் சிற்பியரைக் கொண்டும் பொறிக்கும்போது அக்கால அரசனின் மெய்க்கீர்த்தியுடன் ஆட்சி யாண்டும் அறம் அல்லது நிகழ்ச்சிக்குரிய நாளும் திட்டமாகப் பொறித்து வைக்கும் வழக்கம் இருந்துள்ளது. இவ் வழக்கின் பெரும்பயனாகவே மெய்க்கீர்த்திகளையும் செய்திகளையும் கொண்டு அறிஞர் தமிழக வரலாற்றினை. உருவாக்கியுள்ளனர்.

இவ்வாறு வரலாற்று மூலங்களாகக் கோயில்களில் பொறிக்கப்பட்டுள்ள கல்வெட்டுச் செய்திகளைக் கொண்டு, கோயில் பணியாளர்களைத் திட்டமாக அறிந்துகொள்ள முடிகின்றது. கோயில் பணியாளருள் தலைமையானவர் இறைவன் திருமேனிக்கும் பிற தெய்வத் திருமேனிகட்கும் ஆகமவிதிப்படி, தூய்மையுடன் அருச்சனை செய்யும் அர்ச்சகர்களேயாவர். மற்றும்,

1 அர்ச்சகர் – ஆராதனை செய்யும் நம்பிகள், சிவாச்சாரியார்

2. திருமஞ்சன நீர் கொணர்வான் – மாணிகள்.

3. திருவமுது படைப்பான் - – பரிசாரகம் மாணிகள், பிராமணன்.

4. திருவிளக்கிடுவார் – பிராமணன்

5. திருப்பள்ளித்தாமம் பறிப்பான் – பிராமணன், யோகிகள், பணியாள்.

6. திருப்பள்ளித்தாமம் தொடுப்பார் – தேவ ரடியார், மாணிகள்.

7. திருவலகிட்டு மெழுகுவார் – மெழுக் கடிமைகள். தேவரடியார்

8. பரிசட்டங்கொள்ளி – வண்ணார்.

9. ஸ்ரீபலி கொட்டுவார் – உவச்சர்.

10. நுந்தாவிளக்கிற்கு நெய்யளிப்பார் – கோயில் மன்றாடிகள்.

## அர்ச்சகர் - சிவப்பிராமணர்

தமிழகத்திலுள்ள சிவன்கோயில்களில் மூலவராக விளங்கும் திருமேனிக்கும், கோயிலில் அமைக்கப்பெற்றுள்ள பிற தெய்வத் திருமேனிட்கும் நாளும் ஆகமவிதிப்படி அபிடேகம், அலங்காரம், பூசனை, திருவமுது ஆகியவற்றைச் செய்யும் பணியுடையார் அர்ச்சகர் என்று அழைக்கப்பட்டார். அர்ச்சகர்கள் சிவப் பிராமாணவர்களாகவே நியமிக்கப்பட்டிருந்தனர். இவர்கட்கு அளிக்கப்பட்ட இறையிலி நிலம் அர்ச்சனாபோகம் என்று பெயர் பெற்றிருந்தது. இவர்கள் தமிழகத்தில் தொன்றுதொட்டு வரும் ஆதிசைவ மரபினராவர். இவர்கள் வைதிக நெறியினராதலின் ஆரிய பிராமணருக்கமைந்த கோத்திர சூத்திரமுடையாராகவும் இருந்தனர். சிவாச்சாரியார்கள் என்ற பெயராலும் இவர்கள் குறிக்கப்பட்டுள்ளனர். இவர்கட்கமைந்த பணிப்பெயர் 'தேவகன்மிகள்' என்பதாகும். தமிழகத்தில் ஆதிசைவ சிவப்பிராமணர்கள் 48000 என்ற எண்ணளவை உடையவராகப் பெருகி இருந்தனர்.

## குலங்கிழார்

பல்லவர் ஆட்சியிலும் பாண்டியர் ஆட்சியிலும் கோயில் அர்ச்சகர்களாகிய சிவப் பிராமணர்கள், 'குலங்கிழார்கள்' என்று கூறப்பட்டுள்ளதனைக் கல்வெட்டுக்கள் அறிவிக்கின்றன.

குலம் என்பது கோயில் என்பதாகும்.



கிழார் தலைமையுடையவர், மேலானவர் என்ற பொருள்தரும் சொல்லாகும். திருமால்கோயில் அர்ச்சகர்களும், சிவன் கோயில் அர்ச்சகரும் குலங்கிழார்கள் என்ற சிறப்பும் பெயரினைப் பெற்றிருந்தனர்.

## பதிபாத மூலத்தார்

இறைவனுக்கு வழிபாட்டுத் தொண்டினைத் தூய்மையுடன் செய்யும் முதன்மையாளர் என்ற பொருளமைதியுடன் 'பதிபாத மூலத்தர்' என்று கோயில் அர்ச்சகர்கள் குறிக்கப்பெற்றுள்ளனர்.

இவர்கள் நாள்தோறும், ஆகமவிதிப்படி புறத்தூய்மை செய்து கொண்டாராக, அகத்தூய்மையுடன் இறையக வாயில் தாண்டிச் செல்லும் வழக்குடையாராதலின், அப்பகுதியினைத் தாமே தூய்மை செய்தற்குரிய திருவலகுடனும், அபிடேகம் செய்தற்குரிய குடமும் கைக்கொண்டு செல்லும் நெறியுடையாராதலின்

'குடமும் குச்சியும் கொண்டு புகுவார்'
'படிதாண்டிப் பரிகரிப்பார்'
'பதிபாத மூலத்தர்'
'தேவகன்மிகள்'
'பஞ்சாசார்ய தேவகன்மிகள்'

என்றெல்லாம் கல்வெட்டுகளில் இவர்கள் சிறப்பிக்கப்பெறுகின்றனர்.

இவர்கள் கோயில் நிர்வாகத்தினை முழுதும் நடத்துபவராகவும், நிவந்தங்கள் ஏற்று முறைப்படிச் செலுத்துபவராகவும் சில சமயங்களில் இயங்கியுள்ளனர்.

இவர்கள் கோயிலின் முதன்மை அதிகாரமுடையாராக வழங்கப்பெறும் சண்டேசுவரரை முதல்வராகக்கொண்ட தெய்வப் பணியாளாராகத் தம்மை குறித்துக் கொள்ளுமுகத்தான்

"ஆதிசண்டேசுவர தேவகன்மிகள்"
'சண்டேசுவரர் உள்ளிட்ட
தேவகன்மிகள்'.

என்று கல்வெட்டுக்களிலும் குறிக்கப் பெற்றுள்ளனர். சண்டேசுவரர் 'மூலப் பிருத்தியர்' என்று கல்வெட்டுக்களில் குறிக்கப் பெறுகின்றார். இவர்கள் கோயிலின் நிவந்தங்களையும் நிலபுலன் வருவாய்களையும் ஏற்றுநடத்தும் பொறுப்புடையோராக இருக்கும்போது, கோயில் நிலங்களை விற்கவும், பெறவும் செயலுடையாராக இருந்துள்ளனர்.

## மாணிகள்

கோயிலில் திருமேனிதொட்டு வழிபாடு செய்யும் சிவபிராமணர்கட்கு உதவியாளராக அமைக்கப்பெறும் பிரம்மச்சரிய பிராமணர் கல்வெட்டுக்களில் 'மாணிகள்' என்ற பெயரான் குறிக்கப்பெற்றுள்ளனர். இவர்கள் கோயிலில் செய்யும் பணி பரிசாரகம் என்று பெயர் பெறும். மாணிகள், மாண் என்ற பெயராலும் குறிக்கப்பெற்றுள்ளனர்.

"திருப்பரிசாரகஞ்செய்யும் மாணிகள்"
"திருப்பரிசாரகங்செய்யும் மாண் ஒன்று"

சிவன்கோயில்களில் மாணிகள் செய்யும் பணிகள் இவை என்பதனைத் திருவலஞ்சுழிக் கல்வெட்டு தெள்ளிதின் உணர்த்துகின்றது.

"திருமஞ்சன நீரட்டியும் திருவிளக்குத்
தூண்டியும், பரிவாரம் ஆராதிச்சும்
திருவமிர்திட்டும், திருமேனி வடிச்சும்
மற்றும் இக் கோயிலுக்கு வேண்டும்
பணிசெய்யும் மாணிகள்"

என்பது அதன் வாசகம்.



# சோழ மாதேவி கயிலாயமுடையார் கோயில்



ஸ்ரீரங்கம் ஸ்ரீதரன்

காவிரி ஆற்றின் இரு மருங்கும் பல வரலாற்றுச் சிறப்புமிக்க கோயில்கள் உள்ளன. அத்தகைய கோயில்களில் ஒன்று திருச்சிக்கு அருகில் சோழமாதேவி என்னும் ஊரில் உள்ள கயிலாயமுடையார் கோயில் ஆகும்.

தஞ்சை-திருச்சி சாலையில் திருவெறும்பூரிலிருந்து தெற்கே சூரியூர் செல்லும் சாலையில் 3 கிமீ. தொலைவில் உய்யக் கொண்டான் ஆற்றங் கரையில் இவ்வூர் அமைந்துள்ளது.

ஊரின் வடகிழக்கு மூலையில் கிழக்கு நோக்கிக் கோயில் அமைந்துள்ளது. கோயில் கருவறை, அர்த்தமண்டபம், மகாமண்டபம் என்ற அமைப்புகளை உடையதாக விளங்குகிறது. மகாமண்டபத்தில் தெற்கு நோக்கிக் காணப்படும் தேவியின் சந்நிதி முற்றிலும் சிதிலமடைந்துள்ளது. இம் மண்டபத்தில் காணப்படும் மாலை கட்டும் மேடை போன்றவை ஒரு காலத்தில் இங்கு சிறப்பான வழிபாடு நடைபெற்றதை மௌனமாய் நமக்கு எடுத்துரைக்கின்றன.

## கோயிலைச் சுற்றி வருவோமா!

இடது பக்கமாகச் சுற்றி வரலாம். பார்த்து வாருங்கள் - கொஞ்சம் அசந்தால் கோயிலை ஒட்டி வளர்ந்திருக்கும் முள் செடிகள் காலைப் பதம் பார்த்துவிடும். கருவறைச் சுவரின் தேவகோட்டத்தில் அழகிய சிற்பங்களைக் காணலாம். முதலில் காண்பது பிச்சை உகக்கும் பிட்சாடனர் திருக்கோலம். இடையில் ஆடை யின்றி கபாலம் ஏந்தி இளநகை புரிந்தவண்ணம் நடைபோடுகின்றார். இச் சிற்பத்தின் எதிரே ஒருத்தி (ரிஷி பத்தினி) கரண்டியை ஏந்தி ஆடை நெகிழ நிற்கிறாள். அவளுக்கு அருகே பானைகள் அடுக்கி வைக்கப்பட்டுள்ளன. சிவபெருமான் தாருகாவனத்துப் பெண்களின் கர்வத்தை அடக்கும் புராணநிகழ்ச்சியைக் கூறும் சிற்பமாக இது அமைந்துள்ளது. பிட்சாடனர் திருஉருவத்தைத் தேவ கோட்டத்தில் அமைக்கும் வழக்கம் பராந்தக சோழன் காலத்துக் கோயில்களிலிருந்தே துவங்கிவிட்டது எனலாம். திருச்சி மாவட்டம் கோவிந்தபுத்தூரில் இதே போன்று சிற்பத் தொகுதியினைக் கண்டு மகிழலாம். பிட்சாடனர் அருகே சதுர வடிவான சிறு பிறை போன்ற அமைப்பில் விநாயகரின் திரு உருவம் அமைக்கப்பட்டுள்ளது.

அடுத்த தேவகோட்டத்தில் தட்சிணாமூர்த்தியின் திருஉருவம் காணப்படுகிறது. ஆனால் இவ் வுருவம் முழுவதும் தேய்ந்துபோய் உருவமே தெரியாதபடி உள்ளது.

மேற்குப் புற தேவகோட்டத்தில் திருமால் சங்கு, சக்கரம் ஏந்தி நின்ற .கோலத்தில் இருப்பதைக் காணலாம். தலைக்குமேலே இருபுறமும் சாமரங்கள் காணப்படுகின்றன. காலின் அருகே இருபுறமும் குத்து விளக்குகள். இத்தேவ கோட்டத்திற்கு மேலே மகரதோரணம் அழகிய வேலைப்பாடுடன் விளங்குகிறது. மகரதோரணத்தின் நடுவே கண்ணன் தன் தோழர்களுடன் உரியிலிருந்து வெண்ணெய்

திருடும் காட்சியைக் காணலாம். கண்ணனின் லீலைகள் இங்கே காணப்படுவது வேறு எந்தச் சிவன் கோயிலுக்கும் இல்லாத சிறப்பாகும்.

தெற்குப்புறச் சுவரில் உள்ள தேவகோட்டங்களில் பிரம்மா, துர்க்கையின் திருவுருவங்களைக் காணமுடிகிறது.

கருவறையின் அதிட்டானப் பகுதியில் முப்பட்டைக் குமுத அலங்காரத்திற்கு மேலே சிறுபலகைச் சிற்பங்கள் காணப்படுகின்றன. காளியமர்த்தனர், கஜசங்கார மூர்த்தி, குடையுடன் ரிஷபம், நடன மகளிர், இசைக்கருவி வாசிக்கும் ஒருவன், ஆடவல்லான், திரிபுராந்தகர், கஜலட்சுமி, சரசுவதி, அன்னம், அய்யனார், சிங்கம், யாளி, லிங்கோத்பவர் போன்ற அழகிய சிறுவடிவங்கள் செதுக்கப்பட்டு அமைத்திருக்கும் பாங்கு நம் கண்ணையும் கருத்தையும் கவர்கிறது.





விமானத்தில் கொடுங்கைக்குக் கீழே பூத கணங்கள் பல்வேறு இசைக்கருவிகளை வாசிக்கும் காட்சியைப் பார்த்துகொண்டே இருக்கலாம்.

இக் கோயிலின் சுவரில் மொத்தம் 16 கல்வெட்டுக்கள் காணப்படுகின்றன. இவைகள் முதலாம் இராசஇராசசோழன் முதலாம் இராசேந்திர சோழன், அவனுடைய மைந்தன் வீரராசேந்திர சோழன் ஆகியோரது காலத்தைச் சேர்ந்தவையாகும்.

## ஸ்ரீ கயிலாயமுடையார்

கோயிலில் எழுந்தளியிருக்கும் இறைவன் ஸ்ரீகயிலாயமுடையார், ஸ்ரீகைலாசர் பரமேசுவரர் என்று அழைக்கப்படுகின்றார். இவ்வூர் 'தென்கரைப் பிரம்மதேயம், ஸ்ரீசோழ மகாதேவி சதுர்வேதிமங்கலம், என அழைக்கப்படுகிறது. காவிரியின் தென் கரையில் இவ்வூர் அமைந்துள்ளது.

## பராந்தகன் ஆதித்த படாரியார்

இராசராசனது 8வது ஆட்சி ஆண்டுக் கல்வெட்டில் வீரசோழ இளங்கோ வரையர் தேவியார் பராந்தகன், ஆதித்த படாரியார் என்பவள் இக் கோயிலுக்கு வழிபாட்டிற்காகத் தானமளித்திருக்கிறாள். சோழர்களும், கொடும்பாளூரைத் தலைநகராகக் கொண்ட

இருக்கு வேளிர்களும், மண உறவு கொண்டிருந்தனர். மேலே குறிப்பிட்ட பெண் இருக்குவேளிர் குலத்தைச் சேர்ந்தவளாக இருக்கலாம்.

## நந்தவனப்புறம்

சோழமகாதேவி சதுர்வேதி மங்கலத்துக்கு ஊர் மத்யஸ்தன் (கிராம கணக்கு அலுவலர்) ஏறன் கூத்தாடியான மகாஜனப்பிரியன் என்பவன் இக் கோயிலுக்கு நந்தவனம் அமைக்க



நந்தவனப் புறமாக நிலம் கொடுத்தான். அதில் மல்லிகை இருவாட்சி, சிறு செண்பகம் ஆகியவை பயிர் செய்யப்பட்டுக் கோயிலுக்கு அளிக்கப்பட்டன. அந் நந்தவனத்தை நீர்க் குறைவும், வேலிக்குறைவும், மற்றும் எப்பேர்ப்பட்ட குறைவும் இன்றிப் பராமரிக்க வேண்டும் என்று கல்வெட்டு கூறுகிறது. கோயிலுக்குத் தடையின்றி பூக்கள் கிடைக்க வேண்டும் என்ற நல்ல நோக்கத்துடன் இவ்வாறு நிபந்தனைகளுடன் நிலம் அளிக்கப்பட்டதை அறியும்பொழுது நம் மனம் மகிழ்ச்சி அடைகிறது. அளிக்கப்பட்ட நிலத்தின் எல்லையைக் குறிக்கும்பொழுது பல நிலங்களின் பெயர்கள், வாய்க்கால்களின் பெயர்கள் எல்லாம் தெளிவாகக் கல்வெட்டில் குறிக்கப்படுகின்றன.

## ஸ்ரீகோயிலுடையார்கள்

இக் கோயிலில் இருந்த ஸ்ரீகைலாசத்து உமா பட்டாரகிக்குத் திருவமுது படைப்பதற்காக நிலம் அளிக்கப்பட்டது. இந் நிலத்தை "ஸ்ரீகோயிலுடையார்கள்" என்பவர்கள் பெற்றுக்கொண்டு கோயிலைப் பராமரித்து வந்தார்கள் என்பதையும் அறிய முடிகிறது.

## இராஜராஜன் பேரம்பலம்

ஒவ்வொரு ஊரிலும் ஊர்ச்சபை அவ்வூரில் இருந்த மண்டபத்தில் கூடியது என அறிகிறோம். சோழமாதேவியிலும் ஊர்ச்சபை இராசராசன் என்று பெயரிட்டு அழைக்கப்பட்ட ஒரு மண்டபத்தில் கூடியது. இதனைப் பிரம்மஸ்தானம் என்று கல்வெட்டு குறிப்பதிலிலிருந்து இராசராச சோழன் காலத்தில் முதன்முதலில் இவ்வூர் அமைக்கப்பட்டது என்பதையும் அறிய இயலுகிறது.

## வீரசோழ விண்ணகர்

இவ்வூரில் பெருமாள் கோயிலும் இருந்திருக்கிறது. ஊர்ச்சபையார் இவ்வூரின் நடுவில் இருந்த ஸ்ரீவீரசோழ விண்ணகரப் பெருமானடிகள், மற்றும் நம்பிராட்டியார் ஸ்ரீதேவி பிராட்டியார்க்கும், பூமிதேவிப் பிராட்டியார்க்கும் அமுது செய்ய 220 கலம் நெல் அளிக்க முடிவு செய்ததை ஒரு கல்வெட்டு குறிக்கிறது. தற்பொழுது இவ்வூரில் பெருமாள் கோயில் ஏதுமில்லை. ஆனால் இவ்வூரை ஆய்வு செய்தபோது ஊரின் நடுவில் பெருமான் கோயில் ஊரின் நடுவில் சாலையோரத்தில் திருமால் சிற்பம் ஒன்றும், தேவியின் சிற்பம் ஒன்றும் பாதியளவு புதைந்திருப்பது காணப்பட்டது. உருவ அமைப்பைக் கொண்டு பார்க்கும்பொழுது அவை 10-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்ததென உறுதியாகக் கூறலாம். வீரசோழ விண்ணகரப் பெருமாள் கோயிலில் ஒரு காலத்தில் சிறப்புற வழிபடப்பபட்ட அத் திருஉருவங்களின் இன்றைய நிலைமையை எண்ணும்பொழுது நம் கண்ணில் நீர் பெருகுகிறது.





## உவச்சர்கள்

கோயில்களில் இசைக்கருவிகளை வாசிப்பவர்கள் உவச்சர்கள் எனப்பட்டனர் சோழமாதேவி கோயிலில் உவச்சப்பணி செய்ய (1) இரண்டாயிரவன் கணத்தானை சோழமாதேவிப் பேருவச்சன் (2) இவன் தம்பி இரண்டாயிரவன் கடம்பனான காந்தருவப் பேருவச்சன் (3) இவன் தம்பி இரண்டாயிரவன் பல்லவராயன் (4) இவன் தம்பி இரண்டாயிரவன் திருவரங்க தேவன் என்ற பெயர்கள் கொண்ட ஒரே குடும்பத்தைச் சேர்ந்த நான்கு சகோதரர்கள் நியமிக்கப்பட்டனர். உவச்சப்பணி செய்யத் தானமளிக்கப்பட்ட நிலம் 'உவச்சப்புறம்' எனப்பட்டது. பிற்காலத்தில் ஏதேனும் ஒரு காரணத்தால் இவர்கள் பணி நடைபெறாது போனால் கோயிலில் விளக்கு எரிக்க எண்ணெய் அளிக்க வேண்டும் என்ற நிபந்தனையும் கல்வெட்டில் குறிக்கப் படுகிறது. கோயிலுக்காக அளிக்கப்பட்ட தானம் எவ்வகையிலாவது கோயிலுக்கே செலவழிக்கப்பட வேண்டும் என்ற நல்ல குறிக்கோளையும் அறிந்துகொள்ள முடிகிறது.



## பஞ்ச மகா சப்தம்

சிவன் கோயிலிலும் பெருமாள் கோயிலிலும் உவச்சர்கள் 'பஞ்ச மகாசப்தம்' செய்ய நிலம் அளிக்கப்பட்டதாக இராச ராச சோழனது 26 ஆவது ஆண்டுக் கல்வெட்டினால் அறிய முடிகிறது. 'பஞ்ச மகா சப்தம்' என்றால் என்ன? பஞ்ச மகா சப்தம் பற்றிப் பஞ்சமரபு என்ற நூல்,

'சொல்லிய நற்றோய்
துளைதுய்ய மென்னரம்பு
கல்விமிகு கஞ்ச மிடறெனவே
-வெல்லுமதன்
அஞ்சப் படும்விழியா
யாயுங்கா லிவ்வவைந்தும்
பஞ்சமா சத்தமாய்ப் பார்'

தோல், துளை, நரம்பு, கஞ்சம், மிடறு என்ற ஐந்திலிருந்து தோன்றும் இசையைப் 'பஞ்சமாசத்தம்' என்று கூறுவர்.

சோழமாதேவி கோயில் கல்வெட்டில் கரடிகை, மத்தளம், சங்கு, காளம் என்ற இசைக் கருவிகள் குறிக்கப்படுவது ஒருசிறப்பாகும். கரடிகை ஒன்றும், மத்தளம் இரண்டும், சங்கு இரண்டும், காளம் நான்கும் ஆக மொத்தம் ஒன்பது இசைக் கருவிகள் நாள்தோறும் வாசிக்கப்பட்டதை அறியும்பொழுது இக்கோயிலில் எவ்வளவு சிறப்பாக வழிபாடு நடந்திருக்க வேண்டும் என்பதை நம்மால் உணர முடிகிறதல்லவா!

## இராசேந்திரசோழன் கல்வெட்டுக்கள்

இராசேந்திர சோழன் காலத்திய 2-வது, 3-வது, 20-வது ஆட்சி ஆண்டு கல்வெட்டுக்களும் இக்கோயிலில் காணப்படுகின்றன. சந்திவிளக்கு எரிக்கத் தானம் அளித்த செய்தி ஒரு கல்வெட்டில்



குறிப்பிடப்படுகிறது. இவன் பிறந்தது திருவாதிரை நாளாகும். அதனைச் சிறப்பாகக் கொண்டு சித்திரை மாதம் 7 நாட்கள் திருவாதிரை விழா இக்கோயிலில் கொண்டாடப்பட்டது.

இராசேந்திரனுடைய கல்வெட்டில் ஊர்வாரியம், உய்யக் கொண்டான்ஆற்று வாரியம்' என்ற அமைப்புகளின் பெயர்கள் காணப்படுகின்றன. காவேரிப் பாக்கம் கல்வெட்டில் ஊர்ப் பணிகளை கவனிப்பதற்காக ஏரி வாரியம் கலிங்குவாரியம், கழனிவாரியம் போன்ற அமைப்புகள் இருந்ததாக அறிகிறோம். ஆனால் சோழமகாதேவி கோயிலில் 'ஆற்று வாரியம்' என்ற அமைப்பினைக் குறிப்பது ஒரு சிறப்பாகும். உய்யக் கொண்டான் ஆற்றுக் கரையில் இவ்வூர் அமைந்திருப்பதால் இங்குள்ள நிலங்களுக்கு நீர் முறையாகப் பாய்வதற்கு இந்த அமைப்பு செயல்பட்டிருக்க வேண்டும். பண்டைய பாசனமுறை பற்றி அறிந்துகொள்ள இச்செய்தி பெரிதும் உதவுகின்றது என்றால் மிகையில்லை.

இக்கோயிலிலுள்ள வீர ராசேந்திர சோழனுடைய கல்வெட்டு மேலும் முக்கியமானதொரு செய்தியைத் தருகிறது. அக்கல்வெட்டு பின்வருமாறு கூறிச் செல்கிறது.

"பாண்டிய குலாசனி வளநாட்டு பிரம்மதேயம் ஸ்ரீசோழமாதேவி சதுர்வேதி மங்கலத்து பெருங்குறி சபையோம் திரு மாதிரி நல் சாலை ஆழ்வார் திருமுற்றத்து கூட்டம் குறைவறக் கூடியிருந்து பணிப் பணியால் பணித்து பகவத் பாதீயம் சாரீரக பாஷ்யத்திற்கு சிதாநந்த படாரர் பண்ணின பிரதிபகம் ஆகிற வார்த்தீகம் வக்கணிப்பார்க்கு விருத்தியாக விட்ட நிலம்."

சோழ மாதேவி ஊர்ச் சபையார் சங்கர பகவத் பாதாள் அருளிய பாஷ்யத்துக்கு சிதாநந்த படாரர் என்பவர் எழுதிய பிரதீபகம் என்னும் உரையை இவ்வூரில் விரிவுரை செய்பவர்களுக்கு நிலம் தானம் அளிக்கப் பட்டிருக்கிறது.

வேதாந்தங்களின் (உபநிடதங்களின்) தத்துவப் பொருளை ஆய்வு செய்யும் சாஸ்திரத்திற்கு "சாரீகமீ மாம்சை" என்று பெயர். ஆதிசங்கர பகவத் பாதாள் பிரம்மசூத்திரத்திற்கு தாம் எழுதிய பாஷ்யத்தை "சாரீக மீமாம்சை" என்றே குறிக்கிறார். அதையே

இக்கல்வெட்டு "சாரீக மீமாம்சை" என்றே குறிக்கிறது. அதையே இக்கல்வெட்டு 'பகவத்பாதீயம் சாரீரக பாஷ்யம்' என்றும் விளக்குகிறது. சங்கர பாஷ்யத்திற்கு சிதாநந்தர் என்ற ஒரு பெரியவர் விரிவுரை ஒன்று எழுதியிருக்கிறார். அதற்கு 'பிரதீபகம்' என்றும் 'வார்த்தீகம் என்று பெயர். இதனைக் கல்வெட்டு 'சிதாநந்த படாரர் பண்ணின பிரதீபகம் ஆகிற வார்த்திகம்' என்று கூறுகிறது. கி.பி. 8-ஆம் நூற்றாண்டின் மத்தியில் சிதானந்தர் என்ற ஒரு பெரியவர் காஞ்சி சங்கர மடத்தில் 36-வது குருவாக அலங்கரித்துள்ளார் என்ற குறிப்பும் உண்டு. எனவே ஆதிசங்கரரையும் அவரது பாஷ்யத்தையும் குறிக்கும் மிகவும் தொன்மையான ஆதாரபூர்வமான கல்வெட்டு இதுவேயாகும். கி.பி.10-11-ஆம் நூற்றாண்டுகளில் எண்ணாயிரம் திருமுக்கூடல் போன்ற ஊர்களில் கல்லூரிகள் இருந்ததையும் அங்கு வேதாந்த பாஷ்யங்கள் போதிக்கப்பட்டதையும் சோழர் கால கல்வெட்டுக்களின் வாயிலாக அறிய முடிகிறது. எனவே சோழமாதேவி கோயில் சமய வரலாற்றிலும் முக்கிய இடம் பெறுகிறது.

(சோழர் கல்வெட்டில் ஆதிசங்கரர் டாக்டர் இரா. நாகசாமி தினமணி கட்டுரை நாள் 18-5-1991).

## சோழமாதேவி

இராசராச சோழனுக்கு பல தேவியர்கள் இருந்தனர். அவர்களுள் 'சோழமாதேவி' என்ற தேவி தஞ்சை பெரிய கோயிலுக்கு ஆடவல்லான், ரிஷபவாகனர் போன்ற செப்புத்திருமேனிகளை வழிபாட்டிற்காகச் செய்தளித்துள்ளாள். தஞ்சை பெரிய கோயிலுக்கு மெய் காப்பாளராகவும், திருப்பரிசாரகம் செய்யவும் ஆட்களை அளித்த ஊர்களில் சோழமாதேவி சதுர்வேதிமங்கலமும் ஒன்று. இவ்வூரைச் சேர்ந்த ஒருவன் காவிரியின் வடகரையில் உள்ள திருப்பாலத்துறை என்ற பாடல் பெற்ற கோயிலுக்கு விளக்கு எரிக்க தானமளித்த சிறப்பும் உண்டு.

இத்தகைய வரலாற்றுச் செய்திகளை தன்னகத்தே கொண்ட இக்கோயில் சதிலமடைந்து சரியான வழிபாடு இல்லாமல் உள்ளது. இக்கோயிலைப் போற்றிப் பாதுகாக்க வேண்டியது நமது கடமையாகும்.



# மறைந்துபோன வணிக நகரம் மதுராந்தகபுரம்

இல. தியாகராஜன்.

கங்கைவரைப் படையெடுத்து வென்று தமிழரின் வீரத்தைத் தலைநிமிர்ந்து நிற்கச் செய்தான் முதலாம் இராசேந்திரன் (1012 – 1044). தனது வெற்றியின் நினைவாகக் கங்கை கொண்டசோழபுரம் என்ற வீரத்திரு நகரையும் அமைத்தான். அங்கு கங்கை கொண்ட சோழீசுவரர் என்ற கலைக் கோயிலையும் கட்டினான். மேலும் தஞ்சையிலிருந்து சோழர் தலைநகரத்தையும் இவ்வூருக்கு மாற்றினான்.

## மாற்றம் தந்த ஏற்றம்

இத் தலைநகர் மாற்றத்தினால் அரியலூராப் பகுதி சோழன் தலைநகரத்தின் பின்புலமாக மாறி வளம்பெறத் தொடங்கியது. கோட்டைகள், அரண்மனைகள், இராணுவத் தளங்கள், எழில் சிந்தும் கலைக்கோயில்கள் போன்றவை புதியதாக இப் பகுதியில் உருவாக ஆரம்பித்தன.

இதேபோல் தம் வாணிகத்தால் நாட்டை வளமடையச் செய்த வணிகர்கள் வாழ்ந்த பல பெருநகரங்களும் அரியலூராப் பகுதியில் தோன்றி வளர ஆரம்பித்தன. மருதையாறு, வெள்ளாறு, கொள்ளிடக் கரைப் பகுதிகளின் நாகரிகம் வளரக் காரணமாயிருந்த இந் நகரங்கள் இன்று மறைந்துபோய்ச் சிற்றூர்களாக மாறி விட்டன. இருப்பினும் இவ்விடங்களில் எல்லாம் அவர்கள் கட்டிய கோயில்கள், எழுதிய கல் வெட்டுகள், வடித்த சிற்பங்கள் இருந்துகொண்டு அவர்களின் பெருமைகளைப் பேசுகின்றன.

## மருதையாற்றங்கரையில் மாநகரம்

இராசேந்திரசோழனின் தலைநகர் மாற்றத்திற்குப் பிறகு அரியலூப் பகுதியில் தோன்றிய வணிக நகரங்களுள் மதுராந்தகபுரம் என்ற பெரிய நகரமும் ஒன்றாகும். மருதையாற்றங்கரையில் தோன்றிய இந் நகரத்தில் திரைகடலோடித் திரவியம் சேர்த்த வணிகர்கள் தேரோடும் பெருந்தெருக்களில் விண்ணைமுட்டும் மாளிகைகளில் வாழ்ந்தனர். பவுத்தம், சமணம், சைவம், வைணவம் ஆகிய சமயங்கள் இங்குச் சிறப்பாக வளர்ந்தன. கவினுறு கலைக் கோயில்கள் பல எழுந்தன.

ஆனால் இவையனைத்தும் ஆயிரமாண்டுகளுக்குமுன் நடந்தவை. இன்று அச் சிறப்புகள் எல்லாம் மண்ணிலே மறைந்து போய்விட்டன. அந் நகரம் இரண்டு சிற்றூர்களாகச் சிதறிப்போனது. கலைக் கோயில்கள் கவினிழந்து கலையிழந்து விட்டன. காலத்தின் கரம்பட்டுக் கசங்கிப்போன மதுராந்தகபுரம் எது? அவ்வூர்தான் இன்றைய செட்டித்திருக்கோணம், பெரிய திருக்கோணம் என்ற ஊர்கள்.

அரியலூர் – விக்கிரமங்கலம் பெருவழியில் அரியலூரிலிருந்து இருபத்தைந்து கிலோமீட்டர் தொலைவில் அமைந்துள்ள இவ் வூர்களை நாகமங்கலம் வழியாகச் சென்று அடைய வேண்டும்.



## வரவேற்பு வாயில்கள்:

முதலில் அமைந்துள்ள சிற்றூர் செட்டித்திருக்கோணமாகும். ஊருக்குள் நாம் நுழையும்போது நம்மை வரவேற்பது வழியில் ஏரிக்கரைஓரம் இடிந்துபோய் முட்புதர்களையே திருச்சுற்று மாளிகையாய்க் கொண்டு நிற்கும் இரணேசுவரர் கோயில் ஆகும். காணும் கலை மனத்தை ரணமாக்கும் இக் கோயிலைக் கண்டபின் சற்று எட்டி நடந்தால் நாம் நிற்பது பெரிய திருக்கோணம் ஆகும். வழியில் நம்மைப் பார்த்துச் சிரிப்பவை அழகிய சமண தீர்த்தங்கரர், புத்தர் சிலைகள் ஆகும். ஆசையே துன்பத்துக்குக் காரணம் என்று கூறிய அறவோன் நம்மிடம் சொல்வது என்ன தெரியுமா? பொருள் சேர்க்கும் ஆசையில் பூரித்து மிதந்த இப் பெரிய வியாபார நகரம் இன்று இப்படி இருள் சூழ்ந்து நிற்பதைப் பாருங்கள். நான் சொன்னது இப்பொழுதாவது புரிகிறதா என்பதே ஆகும். சற்றுத் தள்ளி ஊரின் வடகீழ்ப் பகுதியில் நிற்பது ஆதிமத்யார்ச்சுனேசுவரர் கோயில் ஆகும். அதன் மேற்கே சௌந்தரப் பெருமாள் கோயில். இதன் தென்மேற்கே உத்தண்ட சாத்தனார் கோயில். இவை அனைத்தும் அழிந்து கொண்டிருக்கும் கலைக் காவியங்கள் ஆகும். வீழும் நிலையிலும்கூடப் பெருமாள் கோயிலின் தெற்கு மதில்சுவர் இவ்வூர்ப் பள்ளிக்கூடக் கட்டடத்தின் ஒரு பகுதியாகப் பயன்படுகிறது.

## ஊரும் பேரும்

இங்குள்ள கல்வெட்டுகளில் பழமையானது முதலாம் இராசாதிராசனுடைய 31-வது ஆண்டுக் (கி.பி. 1049) கல்வெட்டாகும். இவர் கங்கைகொண்ட சோழ இராசேந்திரனின் மூத்த மகனாவார். கல்வெட்டுகள் இவ்வூர்ப் பெயரை மதுராந்தகபுரம் என்று கூறுகின்றன. மதுராந்தகன் என்பது இராசேந்திரனின் இயற்பெயராகும். எனவே இவர் நினைவாக இவர் மகனுடைய காலத்தில் இவ்வூர் ஏற்பட்டது என அறியலாம்.

## நாட்டுப் பிரிவுகள்

இவ்வூர் "கடாரங்கொண்ட சோழ வளநாட்டு மதுராந்தக வளநாட்டு நகரம்" மதுராந்தகபுரம் என்று கல்வெட்டுகளில் குறிப்பிடப் பெறுகிறது. இவ் வளநாட்டுப் பெயர்கள் விக்கிரமசோழன் காலத்தில் மாற்றமடைகின்றன. அப்போது "விக்கிரம சோழ வளநாட்டு மன்னை கொண்ட சோழ வளநாட்டு நகரம் மதுராந்தகபுரம்" என அழைக்கப்பட்டது.

இராசேந்திரசோழன் மண்ணைக் கடக்கம் (மானியகேடம்), கடாரம் ஆகியவற்றை வென்றதின் நினைவாக மண்ணை கொண்ட சோழன், கடாரம் கொண்ட சோழன் என்ற பெயர்களைப் பெற்றார். இவ் வெற்றியின் நினைவாகக் கொண்ட பெயர்களே இப் பகுதி நாட்டுப் பிரிவுக்கு வைக்கப்பட்டது. இப் பிரிவுகளின் கீழ் இன்றைய உடையார்பாளையம் வட்டத்தின் பெரும்பகுதியும் இருந்தது. இவற்றில் கங்கைகொண்ட சோழபுரமும் ஒன்றாகும்.

## கட்டளை நாடு - கட்டு நாடு

மேலே சொன்ன நாட்டுப் பிரிவுகள் பாண்டியர் காலம்வரையில் மாறாமலிருந்து விசயநகரமன்னர் காலத்தில் மாறிவிட்டன. அப்போது இவ்வூர் "திருச்சிராப்பள்ளி உசாவடி கட்டளை நாட்டு வடதுண்டத்து மருதாந்தசோழபுரம்" என அழைக்கப்பட்டது. உசாவடி என்பது விசயநகரக் காலத்து வருவாய்த்துறைப் பிரிவின் பெயராகும். கட்டளை என்ற பெயருடன் கூடிய பல ஊர்கள் மதுராந்தகபுரத்தைச் சுற்றிலும் இருந்தன. ஆலந்துறையார் கட்டளை, அறக்கட்டளை, வாண்டராயன் கட்டளை, அம்பலவர் கட்டளை, கருப்பிலாக்கட்டளை ஆகியன அவை. இதனால் இப்பகுதி கட்டளை நாடு எனப்பட்டது. இப் பெயரே இப்போது மருவிக் கட்டு நாடு என அழைக்கப்படுகிறது.

## திருக்கோணம்

16-ஆம் நூற்றாண்டுவரை மதுராந்தகபுரம்

என அழைக்கப்பட்ட இவ்வூர் எப்போது திருக்கோணம் என்ற பெயரைப் பெற்றது என அறிய முடியவில்லை. ஆனால் கி.பி.1809_ல் எழுதப்பெற்ற அரியலூர் விசைய ஒப்பிலாத மழவராயரின் கல்வெட்டில் செட்டி திருக்கோணம் என்ற பெயர் குறிப்பிடப் பெறுகிறது.

திருக்குன்றம் என்ற பெயர் இவ்வூருக்கு இருந்து அப் பெயரே திருக்கோணம் என ஆயிற்று என்றும் செட்டியார்கள் அதிகம் வாழ்ந்த பகுதி செட்டி திருக்கோணம் என அழைக்கப்பட்டது என்றும் கூறப்படுகிறது.

## இரணசிங்க ஈசுவரம்

செட்டித் திருக்கோணத்தில் இடிந்து போயுள்ள சிவன்கோயில் இரணேசுவரர் கோயில் எனப்படுகிறது. ஆனால் இங்குள்ள முதலாம் இராசாதிராசன் கல்வெட்டு (1049) இக் கோயிலை இரணசிங்க ஈசுவரம் என்று கூறுகிறது. இராசேந்திர சோழன் வடநாட்டின்மீது படையெடுத்து வென்ற நாடுகளுள் இலாடதேசமும் ஒன்றாகும். அதனை இரணசூரன் என்ற மன்னர் ஆண்டு வந்தார். அவரைத் தோற்கடித்து வென்றதன் நினைவாக இரணசிங்கன் (போர்க்களத்தில் சிங்கம் போன்றவன்) என்ற விருதை இவர் பெற்றார் எனலாம். இப் பெயரில் கட்டப்பட்டதே இரணசிங்க ஈசுவரம் ஆகும். இக்கோயில் கி. பி. 1049_ல் கட்டப்பெற்றதாகும்.

## மதுராந்தக ஈசுவரம்

பெரிய திருக்கோணத்திலுள்ள சிவாலயத்துக் கல்வெட்டுகள் இக் கோயிலை ஸ்ரீமதுராந்தக ஈசுவரம் என்று குறிப்பிடுகின்றன. இப் பெயரே மருவி தற்போது ஆதிமத்யார்ச்சுனேசுவரர் என அழைக்கப் படுகிறது. இராசேந்திர சோழரின் இயற்பெயர் மதுராந்தகன் என்பதாகும். இவர் பெயரில் இக் கோயில் அமைக்கப்பட்டது. இக் கோயிலில் எழுதப்பெற்றுள்ள எட்டு கல்வெட்டுகளில் பழமையானது இரண்டாம் இராசேந்திரனுடைய 3_வது ஆண்டுக் (கி.பி.1055) கல்வெட்டாகும். ஆனால் இக் கோயிலின் பெயரை 1049_ல் எழுதப் பெற்ற செட்டி திருக்கோணம் கல்வெட்டு கூறுகிறது. எனவே இக் கோயில் 1049_ல் கட்டப்பட்டுவிட்டது என அறிகிறோம். இக் கோயில் முகமண்டபத்தை ஆரைப்பெருமாள் என்பவர் கட்டியுள்ளார்.



## ஸ்ரீராசேந்திர சோழ விண்ணகர்

ஊரின் மேற்கில் சௌந்தரப்பெருமாள் கோயில் உள்ளது. இங்கு எழுதப் பெற்றுள்ள நான்கு கல்வெட்டுகளில் பழமையானது அதிராசேந்திர சோழனின் 3 _வது ஆண்டு (கி.பி. 1070) கல்வெட்டாகும். ஆனால் இக் கோயிலைப்பற்றிய குறிப்பும் நமக்குச் செட்டி திருக்கோணம் கல்வெட்டில் கிடைப்பதால் இக் கோயிலும் 1049_ல் கட்டப்பட்டுவிட்டது என அறிகிறோம்.

கல்வெட்டுகளில் இக் கோயில் ஸ்ரீராசேந்திர சோழ விண்ணகர் என்றும் இறைவன் பெயர் அழகிய மணவாளர் என்றும் குறிப்பிடப்படுகிறது. இப் பெயரே வடமொழியில் சௌந்தரப் பெருமாள் என மாறிவிட்டது.

இதிலிருந்து இராசேந்திர சோழனின் மகன்ான முதலாம் இராசாதிராசன் தம் தந்தை பெயரில் மதுராந்தகபுரம் என்ற நகரத்தை உருவாக்கி, அங்கு அவரின் இயற்பெயரில் மதுராந்தக ஈசுவரம் என்றும், அபிசேகப், பெயரில் இராசேந்திர சோழ விண்ணகர் என்றும், பட்டப்பெயரில் இரணசிங்க ஈசுவரம் என்றும் கோயில்களைக் கட்டினார்; அத்துடன் இவ் வூரின் நாட்டுப்பிரிவுக்கும் தந்தை பெற்ற வெற்றிப் பெயர்களைச் சூட்டினார் என அறிகிறோம்.

## வாணிக நகரம்

மதுராந்தகபுரம் மிகப்பெரிய வாணிக நகரமாக விளங்கியது. இங்குப் பெருமளவில் சங்கரப்பாடியார் (எண்ணெய் வணிகர்) சாலியர் (ஜவுளி வியாபாரிகள்) தனம் செட்டிகள் (பொன்வைர வியாபாரிகள்) கவறை செட்டிகள் என்ற பல்வகைப் பிரிவுடைய வணிகர்கள் வாழ்ந்து வியாபாரம் செய்துள்ளனர்.

## பெருந்தெரு

இவர்கள் வாழ்ந்த வீதிகள்



பெருந்தெருக்கள் எனப்பட்டன. இவ் வூரில் ஜனநாதப் பெருந்தெரு என்ற வீதி இருந்துள்ளது. இன்றும் இவ்வூர் வீதிகள் மிக நீண்டும் அகன்றும் தேரோடும் பெரு வீதிகளாக உள்ளன.

## நகர வாரியம்

வணிகப் பெருமக்கள் அடங்கிய நகரசபை நகரவாரியம் என்றும் நகரப் பெருவாரியம் என்றும் அழைக்கப்பட்டது. இது ஊர் மற்றும் கோயில் நிருவாகத்தைக் கவனித்தது. இச் சபையின் உறுப்பினர் நகரப் பெருவாரியன் (கவுன்சிலர்) எனப் பட்டார். இவர்கள் அவ்வப்போது கூட்டம் கூடி தீர்மானங்கள் இயற்றினர். அது வியவஸ்தை எனப்பட்டது. "மதுராந்தகபுரத்து நகரத்தோம் நகரவ்யவஸ்தை பண்ணினபடி" என்று குறிப்பிடும் கல்வெட்டினால் இதனையறியலாம்.

## நகரக் கணக்கு

சபை நடவடிக்கைகளை எழுதிய அதிகாரி நகரக் கணக்கு எனப்பட்டார். இப் பணிக்கான உரிமை நகரக்கணக்குக் காணி எனப்பட்டது. இதனை வேளாளக் குலத்தவர் செய்துள்ளனர்.

## எண்ணெய் வணிகர் கொடை

மதுராந்தகபுரத்து ஜனநாதப் பெருந் தெருவில் வசித்த சங்கரப்பாடியார்கள் (எண்ணெய் வியாபாரிகள்) பலர் ஒன்று சேர்ந்து மதுராந்தக ஈசுவரமுடையார் கோயிலில் எழுந்தருளியுள்ள துர்க்கைக்கு மாலை நேரத்தில் எரிய 23 சந்தி விளக்குகளையும் அர்ச்சனைக்கு நிலமும் கொடையாகக் கி.பி.1054_ல் கொடுத்துள்ளனர். இத் துர்க்கையின் பெயர் கல்வெட்டில் இராசேந்திரதேவர் துர்க்கை நங்கையார் எனக் குறிப்பிடப்படுகிறது.

## தளபதி வைத்த விளக்கு

முதலாம் குலோத்துங்கனின் 11_வது ஆண்டில் (1081) சேனாபதி இங்கானுருடையான் சங்கரன் கண்டராதித்தனான சேதிராயன் என்ற தளபதி இவ்வூர் மதுராந்தக ஈஸ்வரமுடையார் கோயிலில் ஒரு திருநந்தா விளக்கு வைத்தார். இவர் மனைவி மாதேவி அரையன் என்பவர் பிள்ளையாண்டியாற்கு (முருகன்) ஒரு விளக்கு வைத்தார்.

## நிலவிற்பனை ரத்து

மூன்றாம் குலோத்துங்கனின் 17_வது ஆண்டில் (1195) கோயிலுக்குச் சொந்தமான நிலங்கள் விற்கப்பட்டன. ஆனால் நிலம் விற்ற பணம் கோயில் பண்டாரத்தில் (கருவூலம்) செலுத்தப்படவில்லை. இதனைக் கண்ட



நகரசபையும், கோயில் தானத்தாரும் கூடி இந் நிலவிற்பனையை ரத்து செய்து ஆணை பிறப்பித்தனர்.



## மழவராயரின் மானியம்

செட்டி திருக்கோணத்து இரணேசுவரர், அறம்வளர்த்த நாயகி ஆகிய இருவருக்கும் திருப்பணி, திருவிளக்குக்காக மருதாற்றங் கரையில் வெட்டுக்காணி இலுப்பைத்தோப்பு உட்பட 250 குழி நிலம் கி.பி. 1809-ல் அரியலூர் அரசர் விசைய ஒப்பிலாத மழவராயரால் வழங்கப்பட்டுள்ளது.

## திசைமாறிய ஆறு

இவ்வூரின் தெற்கே ஓடும் மருதையாறு கல்வெட்டுகளில் இராசேந்திர சோழப் பேராறு எனக் குறிப்பிடப்பெறுகிறது. இவ் வாற்றங்கரையில் இவ்வூர் நகரசபை கூடித் தீர்மானங்களும் இயற்றியுள்ளது. ஊருக்கு வளம் சேர்த்த இந்த ஆறு விக்கிரம சோழனின் 11-ஆவது ஆண்டில் (1129) ஏற்பட்ட இயற்கைப் பேரழிவால் திசைமாறி நீர்ப்போக்கு மாறிவிட்டது. நாடு முழுவதும் பஞ்சமும் நோயும் ஏற்பட்டது. விவசாயம் அழிந்தது. மக்கள் இறந்தனர். இதனைக் கல்வெட்டு, "இவ்வாண்டு வியாதியாலே மநித்தர் மரித்துப் போனமையாலும் ராசேந்திரசோழப் பேராறு நீர் வழக்கமின்றியே கருதின வண்ணம் பயிர் செய்ய வொண்ணாமையாலும்" என்று கூறுகிறது. இச் சூழ்நிலையில் நகரசபை வரிகளை ரத்துசெய்து ஆணை பிறப்பித்தது.

## பழியஞ்சிப் பேரேரி

அக்கால வணிகர்கள் நேர்மைக்குப் பெயர் பெற்றவர்கள். கொள்வதும் கொடுப்பதும் குறைவுபடாமல் வாணிபம் செய்து பொருளீட்டினர். வியாபாரம் துரோக சிந்தனை என்ற கூற்றைப் பொய்யாக்கினர். பழிபாவங்கட்கு மிகவும் அஞ்சி நடந்தனர். இத்தகைய வணிகப் பெருமக்கள் தங்கள் ஊரிலிருந்த ஏரிக்குப் பழியஞ்சிப் பேரேரி என்று பெயரிட்டுள்ளனர்.

இந்த ஏரி தூர்ந்துபோனதால் சீரமைக்க வீட்டுக்கு ஒரு பணம் வீதம் வரி விதிக்கப்பட்டது. இடைப்பகுதியில் நடந்த வலங்கை-இடங்கை சாதிச் சண்டையே இவ் வணிக மக்கள் ஊரைவிட்டு வெளியேறக் காரணம் என்பதைத் மேலும் நிலமுடையவர்களில் ஒரு வேலி நஞ்சை நிலமுடையவர் நாலு குழியும், அதே அளவு புஞ்சை நிலமுடையோர் ஒரு குழி அளவுக்கும் ஏரியில் தூர்வார வேண்டும். நகரசபையின் இந்தச் சீர்திருத்த நடவடிக்கை பற்றி இரண்டாம் ஜடாவர்மன் விக்கிரம பாண்டியனின் 4-வது ஆண்டுக் (1348) கல்வெட்டு கூறுகிறது.

## சோழபுரம் செட்டியார்கள்

ஐநூறாண்டுகள் செல்வ வளத்துடன் திகழ்ந்த மதுராந்தகசோழபுர நகரம் இன்று மறைந்துவிட்டது. இங்கிருந்த செட்டியார்கள் கும்பகோணம், நாகப்பட்டினம், சென்னை, தஞ்சை முதலிய ஊர்களுக்குச் சென்று குடியேறிவிட்டனர். இவர்களில் பல குடும்பங்கள் பரம்பரைக் கப்பல் வியாபாரிகளாகவும், ஜவுளி, பொன் வியாபாரிகளாகவும் இருப்பது குறிப்பிடத்தக்கது. இவர்கள் அனைவரும் தங்களைச் சோழபுரஞ்செட்டியார்கள் எனப் பெருமையுடன் கூறிக்கொள்கின்றனர். 15-ஆம் நூற்றாண்டின் திருக்கோணத்துக்கருகில் உள்ள உடையவர் தீயனூரில் உள்ள கல்வெட்டுகள் மூலம் உய்த்துணர முடிகிறது.

## அடைக்கலம்

செட்டிதிருக்கோணத்துக் கோயிலிலுள்ள கல்வெட்டில் இவ்வூர் செட்டியார்கள் ஒரு வேண்டுகோள் விடுத்துள்ளனர். "நாங்கள் செய்துவைத்த இந்தத் தர்மத்தைக் காப்பாற்றுவோர் திருவடி எங்களின் தலைமேல். மேலும் இத் தர்மம் நமக்கெல்லாம் பொதுவானபடியால் இதனை அந்தந்தக் காலங்களில் வாழ்பவர்களிடம் அடைக்கலமாக ஒப்படைக்கிறோம். அறம் மறவற்க; அறமல்லது துணையில்லையே" என்பதே அந்த வாசகம். சோழபுரஞ் செட்டியார்களின் சந்ததியினர் இத் தர்மத்தைக் காப்பார்கள் என்ற முன்னோர்களின் நம்பிக்கை பொய்யாகாது என்று நம்புவோமாக.



# தஞ்சை மாவட்டத்துத் தேவாரத் தலங்கள்

தஞ்சை க. பத்மநாபன்

தேவாரம் பாடியருளிய மூவர் பெருமக்களால் பாடப்பட்ட சிவத்தலங்களில் தஞ்சை மாவட்டத்தில் 54 தலங்கள் அடங்குகின்றன. இத் தலங்கள் பற்றியும் செல்லும் வழிகள் குறித்தும் காண்போம்.

## 1. திருக்கடைமுடி (திருச்சென்னம் பூண்டி)

திருவையாற்றிலிருந்து கல்லணை செல்லும் சாலையில் கல்லணைக்குமுன்னர் உள்ள கோயிலடியை அடுத்து இத் தலம் உள்ளது. இங்குள்ள சிவாலயமே திருஞானசம்பந்தர் பாடிய திருக்கடைமுடி எனக் கல்வெட்டுச் சாசனங்களின் துணைகொண்டு அறிஞர்கள் நிறுவியுள்ளனர். ஆனால் இதுகாறும் மக்கள் வழக்கில் திருக்கடைமுடியை மயிலாடுதுறை - பூம்புகார் சாலையில் உள்ள கீழையூராகப் போற்றுகின்றனர்.

## 2. திருக்காட்டுப்பள்ளி

திருவையாறு - கல்லணை சாலையில் திருக்காட்டுப்பள்ளி உள்ளது. இத் தலத்தை மேலைத் திருக்காட்டுப்பள்ளி என அழைப்பர். இறைவன் பெயர் தீயாடி அப்பர், இறைவி அழகம்மை. திருஞானசம்பந்தரும், அப்பரும் பதிகம் பாடியுள்ளனர்.

## 3. திருஆலம்பொழில்:

கண்டியூர் - திருக்காட்டுப்பள்ளி சாலையில் திருப்பூந்துருத்தியை அடுத்து இத்தலம் உள்ளது. இறைவன் ஆத்மநாதர்; இறைவி ஞானாம்பிகை. அப்பர் திருப்பதிகம் பாடியுள்ளார்.

## 4. திருப்பூந்துருத்தி:

கண்டியூர் - திருக்காட்டுப்பள்ளி சாலையில் கண்டியூரினை அடுத்து உள்ளது. அப்பர் சுவாமிகள் இவ்வூரில் இருந்த திருமடத்தில் சிலகாலம் தங்கி இருந்தார். இறைவன் பொய்யிலியர்; இறைவி சௌந்தர நாயகி.

## 5. திருநெய்த்தானம்:

இத்தலம் திருவையாறு - கல்லணை சாலையில் உள்ளது. இறைவன் நெய்யாடிய அப்பர்; இறைவி பாலாம்பிகை. திருஞான சம்பந்தர், அப்பர் சுவாமிகள் பதிகம் பெற்றது.

## 6. திருவையாறு:

தஞ்சாவூருக்கு வடக்காக 11கி.மீ. தொலைவில் உள்ளது. இறைவன் ஐயாறப்பர்; இறைவி அறம்வளர்த்த நாயகி. மூவர் திருப்பாட்டும் பெற்ற தலம்.

## 7. திருச்சோற்றுத்துறை:

கண்டியூர் - பசுபதிகோயில் சாலையில் உள்ளது. இறைவன் சோற்றுத்துறை நாதர்,

இறைவி ஒப்பிலாம்பிகை. மூவர் திருப்பாட்டும் பெற்ற தலம்.

## 8. திருக்கண்டியூர்:

இத்தலம் தஞ்சாவூர் - திருவையாறு சாலையில் உள்ளது. அட்ட வீரட்டங்களில் ஒன்று. இறைவன் வீரட்டேஸ்வரர்; இறைவி மங்கள நாயகி. சம்பந்தர், அப்பர் பாடல் பெற்ற தலம்.

## 9. திருப்பழனம்:

கும்பகோணம் - திருவையாறு சாலையில் திருவையாற்றுக்கு அண்மையில் உள்ளது. இறைவன் ஆபத்சகாயர்; இறைவி பெரிய நாயகி. சம்பந்தர், அப்பர் திருப்பாடல்கள் பெற்றது.

## 10. திருவேதிகுடி

கண்டியூர் - பசுபதிகோயில் சாலையில் உள்ள வீரசிங்கம்பேட்டையிலிருந்து பிரியும் கிளைச்சாலையில் உள்ளது. இறைவன் வாழைமடுநாதர்; இறைவி மங்கையர்க்கரசி. சம்பந்தர், அப்பர் பதிகம் பெற்ற தலம்.

## 11. திருப்புள்ளமங்கை:

கும்பகோணம் - தஞ்சாவூர் நெடுஞ் சாலையில் பசுபதிகோயிலுக்கு அருகே கண்டியூர் செல்லும் கிளைச்சாலையில் உள்ளது. திருஆலந்துறை எனத் தேவாரத்தில் குறிக்கப் பெறுகின்றது. இறைவன் ஆலந்துறைநாதர்; இறைவி அல்லியங் கோதை. சம்பந்தர் பதிகம் பெற்ற தலம்.

## 12. திரு வடகுரங்காடுதுறை

கும்பகோணம் - திருவையாறு சாலையில் உள்ளது. இவ்வூருக்கு ஆடுதுறைப் பெருமாள் கோயில் என்ற மற்றொரு பெயரும் உண்டு. இறைவன் தயாநிதீஸ்வரர் இறைவி ஜடாமகுடேஸ்வரி. சம்பந்தர் பதிகம் பெற்றது.

## 13. சக்கரப்பள்ளி:

மக்கள் இத் தலத்தை ஐயம்பேட்டை எனக் கூறுவர். தஞ்சாவூர் - குடந்தை சாலையில்



உள்ளது. இறைவன் சக்கரவாகேஸ்வரர்; இறைவி தேவநாயகி. சம்பந்தர் பதிகம் பெற்ற தலம்.

## 14. திருக்கருகாவூர்:

பாபநாசம் - சாலியமங்கலம் சாலை வழியாகவும், தஞ்சாவூரிலிருந்து மிலட்டூர் வழியாகக் கும்பகோணம் செல்லும் சாலை வழியாகவும் இத்தலத்தையடையலாம். இறைவன் முல்லைவன நாதர்; இறைவி கருக்காத்த நாயகி. சம்பந்தர், அப்பர் பாடல் பெற்றது.

## 15. திருப்பாலைத்துறை:

கும்பகோணம் - தஞ்சாவூர் நெடுஞ் சாலையில் உள்ளது. இறைவன் பாலைவன நாதர்; இறைவி தவள வெண்ணகையாள். அப்பர் பதிகம் பெற்ற தலம்.

## 16. திருத் தென்குடித்திட்டை

தஞ்சாவூர்-திருக்கருகாவூர் (மிலட்டூர் வழி) சாலையில் உள்ளது. இறைவன் வசிஷ்டேஸ்வரர்; இறைவி உலகநாயகி. சம்பந்தர் பதிகம் பெற்ற தலம்.

## 17. பரிதி நியமம்:

தஞ்சாவூர்-பட்டுக்கோட்டை சாலையில் மேலுளூர் சென்று இத் தலத்தை அடையலாம். பருத்தியப்பர் கோயில் என இவ் வூரினை மக்கள் அழைப்பர். இறைவன் பரிதியப்பர்; இறைவி மங்கலநாயகி. சம்பந்தர் திருப்பதிகம் பெற்ற தலம்.

## 18. வெண்ணி:

தஞ்சை-நீடாமங்கலம் சாலையில் கோயில் வெண்ணி என்ற பெயரோடு திகழ்கிறது. இறைவன் வெண்ணி நாதர்; இறைவி சௌந்தரநாயகி. சம்பந்தர், அப்பர் பாடல் பெற்றது.

## 19. திருநல்லூர்:

தஞ்சாவூர் - கும்பகோணம் சாலையில் வாழைப்பழக்கடை எனும் இடத்திலிருந்து





பிரியும் கிளைச்சாலை வழியே இத் தலத்தை அடையலாம். இறைவன் கல்யாண சுந்தரேஸ்வரர்; இறைவி கல்யாணசுந்தரி. ஞானசம்பந்தர், அப்பர் பாடல் பெற்றது.

## 20. திருவலஞ்சுழி:

கும்பகோணம் - தஞ்சை சாலையில் உள்ளது. இறைவன் வலஞ்சுழிநாதர்; இறைவி பெரியநாயகி. சம்பந்தர், அப்பர் பாடல் பெற்றது.

## 21. திரு விசையமங்கை

திருவைகாவூரிலிருந்து ஆற்றோரமாகச் செல்லும் கிளைச்சாலையில் உள்ளது. இறைவன் விஜயநாதர்; இறைவி மங்கைநாயகி. சம்பந்தர், அப்பர் பாடல் பெற்ற தலம்.

## 22. திருப்புறம்பயம்:

கும்பகோணம் - திருவையாறு சாலையில் புளியஞ்சேரியிலிருந்து பிரியும் கிளைச்சாலையில் உள்ளது. இறைவன் புன்னைவன நாதர்; இறைவி கரும்பன்னசொல்லி. மூவர் பாடல் பெற்றது.

## 23. திரு இன்னம்பர்

கும்பகோணம் - திருவையாறு சாலையில் புளியஞ்சேரியிலிருந்து பிரியும் கிளைச் சாலையில் உள்ளது. இறைவன் எழுத்தறி நாதர். இறைவி சுகந்த குந்தளாம்பிகை. சம்பந்தர், அப்பர் பாடல் பெற்றது.

## 24. திருவைகாவூர்:

கும்பகோணத்திலிருந்து சுவாமிமலை வழியாகத் திருவைகாவூர் அடையலாம். இறைவன் வில்வனநாதர்; இறைவி வளைக்கை நாயகி. சம்பந்தர் பாடல் பெற்ற தலம்.

## 25. திருக்கொட்டையூர்:

கும்பகோணம் - திருவையாறு சாலையில் உள்ளது. இறைவன் கோடீஸ்வரர்; இறைவி பங்காடுநாயகி. அப்பர் பாடல் பெற்றது.

## 26. ஆவூர்:

கும்பகோணத்திலிருந்து மிலட்டூர் வழியாகத் தஞ்சை செல்லும் சாலையில் உள்ளது. திருக்கோயில் ஆவூர்ப் பசுபதீச்சரம் என அழைக்கப்பெறும். இறைவன் பசுபதிநாதர்; இறைவி மங்களாம்பிகை. சம்பந்தர் பாடல் பெற்றது.

## 27. பட்டீச்சரம்:

கும்பகோணம் - ஆவூர் சாலையில் உள்ளது. இறைவன் பட்டீச்சுரர்; இறைவி ஞானாம்பிகை. சம்பந்தர் பாடல்.

## 28. திருச்சத்திமுற்றம்:

பட்டீச்சரம் கோயிலையடுத்து உள்ளது. இறைவன் சிவக்கொழுந்தீசர்; இறைவி பெரியநாயகி. அப்பர் பாடல் பெற்றது.

## 29. பழையாறை வடதளி:

கும்பகோணம் ஆவூர் சாலையில் முழையூர் சென்று இத் திருத்தலத்தை யடையலாம். இறைவன் தர்மபுரீஸ்வரர்; இறைவி விமலநாயகி. அப்பர் பாடல்.

## 30. பழையாறை:

இத் திருக்கோயில் கீழப்பழையார் என்ற சிற்றூரில் (முழையூருக்கு அருகே) உள்ளது. இறைவன் சோமேசர்: இறைவி சோமகலாம்பிகை. அப்பர் பாடல்.

## 31. கருக்குடி:

கும்பகோணம்-மன்னார்குடி சாலையில் மருதாநல்லூர் என்ற பெயரில் உள்ளது. இறைவன் கருக்குடி நாதர்; இறைவி அத்வைத நாயகி சம்பந்தர் பாடல் பெற்ற தலம்.



## 32. நறையூர் சித்தீச்சரம்:

கும்பகோணம் - நாச்சியார்கோயில் சாலையில் திருநறையூர் என்ற பெயரில் இவ்வூர் திகழ்கிறது. இறைவன் சித்த நாதேஸ்வரர்; இறைவி சௌந்திரநாயகி. சம்பந்தர், சுந்தரர் பாடல் பெற்ற தலம்.

## 33. பேணுபெருந்துறை:

கும்பகோணம் - காரைக்கால் சாலையில் (நாச்சியார்கோயில் வழி) எரவாஞ்சேரியையடுத்து இவ்வூர் உள்ளது. இறைவன் சிவானந்தேஸ்வரர்; இறைவி மங்களாம்பிகை. சம்பந்தர் பாடல்.

## 34. திருச்சேறை:

கும்பகோணம்-திருவாரூர் சாலையில் உள்ளது. இறைவன் செந்நெறி அப்பர்; இறைவி ஞானவல்லி. சம்பந்தர், அப்பர் பாடல் பெற்றது.

## 35. திருநாலூர் மயானம்:

கும்பகோணம்-திருவாரூர் சாலையில் திருச்சேறையை அடுத்து உள்ளது. இறைவன் ஞானபரமேஸ்வரர்; இறைவி ஞானாம்பிகை. சம்பந்தர் பாடல் பெற்றது.

## 36. அரிசிற்கரைப் புத்தூர்:

கும்பகோணம் - நாச்சியார்கோயில் சாலையில் அழகாப்புத்தூர் என்ற பெயரில் உள்ளது. இறைவன் படிக்காசு அளித்த நாதர்; இறைவி அழகாம்பிகை. மூவர் பாடல்.

## 37. சிவபுரம்:

கும்பகோணம் - நாச்சியார்கோவில் சாலையில் உள்ளது. இறைவன் சிவபுரநாதர்; இறைவி சிங்காரவல்லி. சம்பந்தர், அப்பர் பாடியது.

## 38. திருக் கலயநல்லூர்:

கும்பகோணம் - நாச்சியார்கோயில் சாலையில் சாக்கோட்டை என்ற பெயரில் உள்ளது. இறைவன் அமிர்தகலசநாதர்; இறைவி அமிர்தவல்லி. சுந்தரர் பாடல்.

## 39. திருக் குடமூக்கு:

கும்பகோணம் கும்பேஸ்வரர் கோயில். இறைவன் கும்பேஸ்வரர்; இறைவி மங்களாம்பிகை. அப்பர், சம்பந்தர் பாடல் பெற்றது.

## 40. குடந்தைக் கீழ்க்கோட்டம்:

கும்பகோணம் நாகேஸ்வரசுவாமி திருக்கோயில். இறைவன் நாகநாதர்; இறைவி பெரியநாயகி அப்பர் பாடல் பெற்ற தலம்.

## 41. குடந்தைக் காரோணம்:

கும்பகோணம் மகாமகக் குளத்தின் வடகரையில் உள்ள காசி விஸ்வநாதர் கோயில். இறைவன் விஸ்வநாதர்; இறைவி அன்னபூரணி. சம்பந்தர் பாடல்.

## 42. திருநாகேச்சுரம்:

கும்பகோணத்திற்குக் கிழக்கே 5 கி.மீ தொலைவில் காரைக்கால் பெருவழியில் உள்ளது. இறைவன் நாகநாதர்; இறைவி குன்றமாமுலையம்மை. மூவர் பாடல்.

## 43. திருவிடைமருதூர்:

கும்பகோணம் - மயிலாடுதுறை நெடுஞ் சாலையில் உள்ளது. இறைவன் மகாலிங்கேஸ்வரர்; இறைவி பெருநலமுலையம்மை. மூவர் பாடல் பெற்றது.

## 44. தென்குரங்காடுதுறை:

கும்பகோணம் - மயிலாடுதுறை நெடுஞ் சாலையில் உள்ளது. இறைவன் ஆபத்



சகாயேஸ்வரர்; இறைவி பவளக்கொடியம்மை. சம்பந்தர் அப்பர் பாடல் பெற்றது.

## 45. திரு நீலக்குடி:

கும்பகோணம் காரைக்கால் சாலையில் உள்ளது. இறைவன் நீலகண்டேஸ்வரர்; இறைவி அநுபமஸ்தனி. அப்பர் பாடல்.

## 46. திருவியலூர்:

திருவிடைமருதூர் - வேப்பத்தூர் சாலை வழியாகவும், குடந்தையிலிருந்து காவிரி, வடகரை வழியாக மயிலாடுதுறை செல்லும் வழியாகவும் இத்தலத்தை அடையலாம். இறைவன் யோகாநந்தீஸ்வர்; இறைவி சாந்த நாயகி. சம்பந்தர் பாடல் பெற்றது.

## 47. திருந்துதேவன்குடி:

குடந்தை - மயிலாடுதுறை வடகரை சாலையில் நண்டாங்கோயில் என்ற பெயரில் உள்ளது. இறைவன் அருமருந்தீசுரர், இறைவி அருமருந்தம்மை. சம்பந்தர் பாடல் பெற்றது.

## 48. திரு மங்கலக்குடி:

கும்பகோணம் - மயிலாடுதுறை (காவிரி வடகரை) சாலையில் உள்ளது. இறைவன் பிராணவரதேஸ்வரர்; இறைவி மங்களநாயகி. சம்பந்தர், அப்பர் பாடல் பெற்றது.

## 49. திருக்கோடிகா:

கும்பகோணம் - மயிலாடுதுறை காவிரி வடகரைச் சாலையில் திருக்கோடிக்காவல் என்ற பெயரில் உள்ளது. இறைவன் கோடீஸ்வரர்; இறைவி திரிபுரசுந்தரி. சம்பந்தர், அப்பர் பாடல் பெற்றது.

## 50. கஞ்சனூர்:

கும்பகோணம் மயிலாடுதுறை வடகரைச் சாலையில் திருக்கோடிக்காவை யடுத்து உள்ளது. இறைவன் அக்னீஸ்வரர்; இறைவி கற்பகாம்பிகை. அப்பர் பாடல் பெற்ற தலம்.

## 51. பந்தணைநல்லூர்:

திருப்பனந்தாள் - மயிலாடுதுறை சாலையில் பந்தநல்லூர் என்ற பெயரில் உள்ளது. இறைவன் பசுபதீஸ்வரர்; இறைவி வேணுபுஜாம்பிகை. சம்பந்தர், அப்பர் பாடல் பெற்றது.

## 52. சேய்ஞலூர்

கும்பகோணம் - திருப்பனந்தாள் சாலையில் சேய்ஞலூர் சாலை பிரிகிறது. இறைவன் சத்தியகிரீஸ்வரர்; இறைவி சகிதேவி அம்மை. சண்டேசர் அவதரித்த பதி. சம்பந்தர் பாடல் பெற்றது.

## 53. திருஆப்பாடி

கும்பகோணம் - திருப்பனந்தாள் சாலையில் பிரியும் சேய்ஞலூர் சாலையில் உள்ளது. இறைவன் பால்உகந்தநாதன்; இறைவி பெரியநாயகி. அப்பர் பாடல்.

## 54. திருப்பனந்தாள்:

கும்பகோணம் - அணைக்கரை சாலையில் உள்ளது. இறைவன் செஞ்சடையப்பர்; இறைவி தாலவனேசுவரி. சம்பந்தர் பாடல். இவ்வூரில் ஸ்ரீகாசிமடம் உள்ளது.

## 55. அவளிவணல்லூர்:

அம்மாபேட்டை - கும்பகோணம் சாலையில் உள்ளது. இறைவன் சாட்சிநாதர்; இறைவி சௌந்திரவல்லி. சம்பந்தர், அப்பர் பாடல் பெற்றது.

## 56. அரதைப் பெரும்பாழி:

அம்மாப்பேட்டை - கும்பகோணம் சாலையில் அரித்துவாரமங்கலம் என்ற பெயரில் உள்ளது. இறைவன் பாதாளேஸ்வரர்; இறைவி அலங்காரவல்லி. சம்பந்தர் பாடல் பெற்றது.







நன்றி: ஆனந்த விகடன்

## 57. இரும்பூளை:

கும்பகோணம் - நீடாமங்கலம் சாலையில் ஆலங்குடி என்ற பெயரில் உள்ளது. இறைவன் காசிஆரண்யேஸ்வரர்; இறைவி ஏலவார்குழலி. சம்பந்தர் பாடல் பெற்றது.

## 58. திரு உசாத்தானம்:

முத்துப்பேட்டைக்கு அண்மையில் உள்ள இத்தலம் கோயிலூர் என்று வழங்குகின்றது. இறைவன் மந்திரபுரீஸ்வரர்; இறைவி பெரியநாயகி. சம்பந்தர் பாடல்.

திருச்சிற்றம்பலம்.



# தஞ்சை மாவட்டத்து வைணவத் தலங்கள்.

ஸ்ரீ. சுதர்சனன். எம்.ஏ.,

சோழநாட்டில் எவ்வாறு பாடல் பெற்ற சைவத் திருத்தலங்கள் மிகுதியாக உள்ளனவோ அவ்வாறே ஆழ்வார்களால் பாடப்பெற்ற வைணவத் தலங்களும் மிகுந்து உள்ளன. இத் தலங்களை மங்களாசாஸனத் தலங்கள் எனக் குறிப்பர் வைணவர்கள். தஞ்சை மாவட்டத்தில் திகழும் வைணவத் தலங்களைக் காண்போம்.

## 1. தஞ்சை மாமணிக்கோயில்

இத்தலம் தஞ்சாவூரிலிருந்து கும்பகோணம் செல்லும் சாலையில் சுமார் 3 கிமீ தொலைவில் வெண்ணாற்றின் கடரயில் இருக்கின்றது. இங்கு அடுத்தடுத்து மூன்று கோயில்கள் இருக்கின்றன மூன்றுக்கும் சேர்த்தே மங்களாசாசனம் என்று சொல்லப்பெறுகிறது.

நீலமேகப்பெருமாள் - செங்கமலவல்லி: இருந்த திருக்கோலம். கிழக்கே திருமுக மண்டலம்.

தஞ்சையாளி நகர்; நரசிம்மப்பெருமாள் - தஞ்சைநாயகி. இருந்த திருக்கோலம். கிழக்கே திருமுகமண்டலம்.

மணிக்குன்றப்பெருமாள் - அம்புஜவல்லி: இருந்த திருக்கோலம்: கிழக்கே திருமுகமண்டலம். இத் தலத்திற்குத் திருமங்கையாழ்வார் 3 பாசுரங்களும், பூதத்தாழ்வார் 1 பாசுரமும் பாடியுள்ளார்கள்.

## 2. புள்ளம்பூதங்குடி.

சுவாமிமலைக்கு வடமேற்கே 3 கிமீ.

தொலைவில் உள்ளது. திருமங்கை ஆழ்வார் மங்களாசாஸனம் செய்துள்ளார்.

வல்வில் இராமன் - பொற்றாமரையாள். கிடந்த திருக்கோலம். கிழக்கே திருமுகமண்டலம்.

## 3. திருப்பேர் நகர் (கோவிலடி)

திருவையாறு கல்லணைச் சாலையில் கல்லணைக்கு அருகில் உள்ளது. பெரியாழ் வார் 2 பாசுரங்களும், திருமழிசையாழ்வார் ஒரு பாசுரமும், திருமங்கையாழ்வார் 19 பாசுரங்களும், நம்மாழ்வார் 11 பாசுரங்களுமாக நான்கு ஆழ்வார்களும் 33 பாசுரங்கள் பாடியுள்ளார்கள்.

அப்பக்குடத்தான் - கமலவல்லி. கிடந்த திருக்கோலம். மேற்கே திருமுகமண்டலம்.

## 4. ஆதனூர்

சுவாமிமலையிலிருந்து 3 கிமீ தொலைவில் உள்ளது. திருமங்கையாழ்வார் ஒரு பாசுரம் பாடியுள்ளார். பெருமாள் ஆண்டளக்கும் ஐயன் தாயார்; ஸ்ரீமங்கலநாயகி. கிடந்த திருக்கோலம். கிழக்கே திருமுகமண்டலம்.

## 5. திருச்சேறை

கும்பகோணத்திலிருந்து திருவாரூர் செல்லும் நெடுஞ்சாலையில் 13 கி.மீ. தொலைவில் உள்ளது. இத் தலத்திற்கு 13 பாசுரங்களைத் திருமங்கையாழ்வார் அருளிச்செய்துள்ளார். பெருமாள் சாரநாதன்;

தாயார் சாரநாயகி. நின்ற திருக்கோலம். கிழக்கே திருமுகமண்டலம்.

## 6. திருக்குடந்தை (கும்பகோணம்)

சார்ங்கபாணிக்கோயில் ஒன்றே கும்பகோணத்தில் ஆழ்வார்களால் மங்களா சாஸனம் செய்யப்பெற்ற திருக்கோயிலாகும். கோயில் ஊரின் நடுவண் இருக்கிறது. பெரியாழ்வார்3 பாசுரங்களும், ஆண்டாள் ஒரு பாசுரமும், திருமழிசையாழ்வார் 7 பாசுரங்களும், திருமங்கையாழ்வார் 25 பாசுரங்களும் பூதத்தாழ்வார் 2 பாசுரங்களும், பேயாழ்வார் 2 பாசுரங்களும், நம்மாழ்வார் 11 பாசுரங்களுமாக ஏழு ஆழ்வார்களும் 51 பாசுரங்கள் பாடியுள்ளனர். பெருமாள் சார்ங்கபாணி-தாயார் கோமளவல்லி. கிடந்த திருக்கோலம். கிழக்கே திருமுக மண்டலம்.

## 7. கண்டியூர்

தஞ்சையிலிருந்து திருவையாறு செல்லும் சாலையில் 9 கிலோமீட்டர் தொலைவில் உள்ளது. திருமங்கையாழ்வார் (ஒரு பாசுரம்) மங்களாசாஸனம் செய்துள்ளார். பெருமாள்: அரன் சாபம் தீர்த்த பெருமாள்; தாயார் கமலவல்லி.

## 8. திருவிண்ணகர். (ஒப்பிலியப்பன் கோயில்)

கும்பகோணத்துக்குக் கிழக்கே 6 கிமீ தொலைவில் இருக்கிறது. திருமங்கையாழ்வார் 34 பாசுரங்களும், பேயாழ்வார் 2 பாசுரங்களும் நம்மாழ்வார் 11 பாசுரங்களும் அருளிச் செய்துள்ளனர். பெருமாள் ஒப்பிலியப்பன்; தாயார் பூமிதேவி.

## 9. திருநறையூர் (நாச்சியார் கோயில்)

கும்பகோணத்திலிருந்து குடவாயில்

செல்லும் சாலையில் 9 கி.மீ தொலைவிலுள்ளது. திருமங்கையாழ்வாரால் மங்களாசாஸனம் செய்யப்பெற்றதாகும். 110 பாசுரங்கள். பெருமாள் நம்பி; தாயார் நம்பிக்கை நாச்சியார். நின்ற திருக்கோலம். கிழக்கே திருமுக மண்டலம்.

## 10. நந்திபுர விண்ணகரம். (நாதன் கோவில்)

கும்பகோணத்திற்குத் தெற்கே 5 கி. மீ. திருமங்கையாழ்வார் 10 பாசுரம். பெருமாள் விண்ணகரப் பெருமாள். தாயார் சண்பகவல்லி. இருந்த திருக்கோலம். மேற்கே திருமுகமண்டலம்.





## 11. கூடலூர் (ஆடுதுறைப் பெருமாள் கோயில்)

பாபநாசத்திலிருந்து வடக்கு 7 கி.மீ. தொலைவிலும், திருவையாற்றில் இருந்து கிழக்கே 10 கி. மீ. தொலைவிலும் உள்ளது. திருமங்கை யாழ்வார் (10 பாசுரங்களால்) மங்களாசாஸனம் செய்துள்ளார். பெருமாள் வையம்காத்த பெருமாள்; தாயார் பத்மாசனவல்லி. நின்ற திருக்கோலம். கிழக்கே திருமுக மண்டலம்.

## 12. கபித்தலம்

கபிஸ்தலம் என வழங்கப்படும் பாபநாசம் இரயில் நிலையத்திலிருந்து வடக்கே 3 கி.மீ. தொலைவிலுள்ளது. திருமழிசையாழ்வார் ஒரு பாடல் பாடியுள்ளார். பெருமாள் கஜேந்திர வரதர். தாயார் ரமாமணிவல்லி.

## 13. திருவெள்ளியங்குடி

திருவிடைமருதூரில் இருந்து தெற்கே 8 கி.மீ. தொலைவிலுள்ளது. திருமங்கையாழ்வார் 10 பாசுரங்கள் பாடியுள்ளார். பெருமாள் கோலவில்லி இராமன்; தாயார் மரகதவல்லி. கிடந்த திருக்கோலம். கிழக்கே திருமுகமண்டலம்.



# குடந்தைக் கீழ்க்கோட்டக் கல்வெட்டுக்கள்

புலவர் செ. இராசு எம்.ஏ.,



கோயில் நகரமான வரலாற்றுச் சிறப்புமிக்க கும்பகோணத்தில் பல கல்வெட்டுக்கள் உள்ளன. அவற்றுள் திருநாவுக்கரசர் பாடல் பெற்ற குடந்தைக் கீழ்க்கோட்டம் என்னும் நாகேஸ்வரன் கோயில் கல்வெட்டுக்களில் பல மிகவும் தொன்மையானவை.

## ஊர்ப்பெயர்

கும்பகோணம் கல்வெட்டுக்களில் ஸ்ரீ குடந்தை, குடமூக்கு, திருக்குடமூக்கு, வடகரைப் பாம்பூர் நாட்டுத் தேவதானம் திருக்குடமூக்கு, உய்யக்கொண்டார் வளநாட்டுப் பிரமதேயம் திருக்குடமூக்கு என்றெல்லாம் பலவாறு அழைக்கப்பட்டுள்ளது.

பாணபுரீசுவரர் கோயில் என வழங்கும் சோமநாததேவர் கோயில்பகுதி சோமநாத மங்கலம், சோமநாத தேவமங்கலம் என்று தனி ஊராக விளங்கியது. திருக்குடமூக்கிலிருந்து அவ்வூர் பிரிக்கப்பட்டது என்பது 'திருக்குடமூக்கில் வேறுபிரிந்த' என்ற தொடரால் விளங்கும்.

## நாகேசுவரனும் பிற மூர்த்தங்களும்

'மடந்தை பாகர்'
'நாயனார் மடந்தைபாக நாயனார்'
'கீழ்க்கோட்டத்துப் பரமசுவாமிகள்'
'கூத்தனார்'

என்றெல்லாம் இக் கோயில் இறைவன் அழைக்கப்பட்டுள்ளார்.

'துடிகொண்ட இடைமடவாள் பாகம் கொண்டு' இங்கு இறைவன் விளங்குவதாகத் திருநாவுக்கரசர் பாடியுள்ளார். இப் பெயரே 'மடந்தை பாகர்' என ஆயிற்று. கூத்தானார் என்பதற்கேற்ப இக்கோயில் செப்பேட்டில் நாகேசுவரன் நடராசப் பெருமான் வடிவத்திலேயே காட்டப்பட்டுள்ளார்.

இக் கோயிலில் திருப்புறம்பியமுடையார், செல்லப்பிரான்தேவர், திருவாதீசுவர முடையார் ஆகியோருக்குத் தனிச் சன்னதிகள் இருந்தன.

## வழிபாடு

நாள்தோறும் மூன்று சந்தி பூசை நடைபெற்றது. அவை சிறுகாலைச் சந்தி, உச்சிச் சந்தி, இரவைச் சந்தி என்பனவாகும். காலைச் சந்தியில் இரு விளக்குகளும், உச்சிச் சந்தியில் ஒரு விளக்கும், இரவுச் சந்தியில் நான்கு விளக்குகளும் ஏற்றப்பட்டன.

காவிரியிலிருந்து மூன்று வேளையும் திருமஞ்சனநீர் எடுத்துவரப்பட்டது. நீர் கொண்டுவந்த வழி 'திருக்கீட்கோட்டமுடையார் திருமஞ்சனப் பெருவழி' என்றழைக்கப்பட்டது.

பொன்னும், நிலமும், கால்நடைகளும் கோயிலுக்குக் கொடையாக அளிக்கப்பட்டன. வழிபாட்டின்போது இக் கோயிலில் சிவயோகிகள் பலருக்கு உணவளிக்கப்பட்டது. அவர்கள் வேதம் வல்லாராகவும் அபூர்விகளாகவும் இருந்தனர். அவர்களுக்குக் கும்மாயம், காய்கறி, புளிங்கறி, பொரிக்கறி,



தயிர், நெய், வாழைப்பழம், பாக்கு வெற்றிலை ஆகியவை உணவில் வழங்கப்பட்டன.

## மகளிர் செய்த மாபெரும் பணிகள்

தஞ்சையோடு மிகவும் தொடர்பு கொண்ட கோயில் குடந்தைக் கீழ்க்கோட்டம். அரசியரும், அரசியரின் வேளத்தில் இருந்த மகளிரும் பல கொடைகளை இக் கோயிலுக்கு அளித்தனர்.

'ஸ்ரீஉத்தமசோழர் நம்பிராட்டியார்
இளமூக்கரையர் மகளார்
வீரநாராயணியார்'

தஞ்சாவூர்க் கூற்றத்துத் தஞ்சாவூர்
கற்றளிப்பிராட்டியார்
வேளத்துப் பெண்டாட்டி
மாநெத நங்கண்டி'

'அறிவரன் மைத்திரவல்லி'
'அவனி சிகாமணி'

'கொற்றவன் தாமோதரன் பிராமணி
வாசுதேவன் மகாதேவி'

ஆகிய பெண்களின் பெயர்கள் கல்வெட்டில் காணப்படுகின்றன.

## அருங்கொடை ஈந்த ஆடவர்கள்

'வீரசோழத் தெரிஞ்ச கைக்கோளர்'
'கண்டராதித்தத் தெரிஞ்ச கைக்கோளர்'
'தானதொங்கத் தெரிஞ்ச கைக்கோளர்'

முதலிய தஞ்சைப் படைவீரர் கொடையளித்துள்ளனர்.

'பெருங்குடிகிழான் பாலாசிரியர்
அமராதித்தன் மதுராந்தகன்'
'இங்கல்நாட்டு இங்கல் மாதேவன்
கோனதமார்பன்'
'மலைநாட்டு நெடும்புறையூர்
பூவங்கண்ணன்'
'காரி விழுப்பரையன்'

போன்றோரும், பல வணிகர்கள், பட்டர்கள் பொதுமக்கள் ஆகியோரும் கொடையளித்துள்ளனர்.

## ஆண்டவன் பெயரில் அடியார்கள்

இக்கோயில் அடியார்கள் பலர் இறைவன் பெயரை வைத்துக் கொண்டுள்ளனர்.

'கூத்தாடும் திருஞானசம்பந்த
மடந்தைபாகன்'
'ஜயங்கொண்டசோழ வளநாட்டுத்
தருவழுந்தூர் நாட்டுக்
காஞ்சிவாயிலுடையாள் மடந்தைபாகத்
தில்லைவாணன்'
'இக்கோயில்க்காணி தேவரடியாள்
சேதிராயமாணிக்கத்தின்
மகன் திம்மண்ணன் மடந்தைபாகக்
கொங்கராயன்'

## பெரியபுராணம் படித்தல்

இக் கோயிலில் இறைவன் எழுந்தருளும்போது பெரியபுராணம் படிக்கப் பட்டுள்ளது. பெரியபுராணம் 'ஸ்ரீபுராணம்' என்னும் பெயரால் குறிக்கப்பட்டுள்ளது.

'நாயனார் மடந்தை பாகதேவர்
திருவனத்தில்
எழுந்தருளியிருந்து திரு ஓலக்கம்
செய்து ஸ்ரீபுராணம்
கேட்டருளா நிற்க'

என்ற தொடரால் இதனை அறியலாம்.

## அந்தணர் அவை

கற்றறிந்த வேதம்வல்ல அந்தணர் அவைக்கு 'மூலபருடையார்' என்பது பெயர். அந்த அவை இக் கோயிலில் விளங்கிப் பல்வேறு திருப்பணிகளைச் செய்து கோயிலையும் நிருவகித்து வந்துள்ளது. ஒரு கல்வெட்டில் அந்த அவை 'மூலஅவை' என்றே குறிக்கப்படுகிறது.



# ஒருமைப்பாடு செழிக்கும் தஞ்சைத் தரணி

முனைவர் அ. கிருட்டினன்



சோழவளநாட்டின் நிலவளம்போல் மக்கள் மனவளமும் சிறப்பாக இருப்பதால் இப் பகுதியில் சமய ஒருமைப்பாடு மிகச் சிறப்புடன் திகழ்ந்தது. எல்லாச் சமயங்களும் தேவையான உரிமைகளுடன் தம் சமய அலுவல்களை நிகழ்த்தின.

## சோழர் காலத்தில்

பொன்னம்பலப் புனிதன் ஆடவல்லானைத் தம் குலதெய்வமாகச் சோழர்கள் கொண்டிருந்தாலும் சமண பௌத்த சமயத்திற்கும் பேராதரவு நல்கினர். அதற்குத் திருமலை குந்தவை சினாலயமும், நாகை சூடாமணி பௌத்த விகாரமும் சிறந்த எடுத்துக்காட்டுக்களாகும்.



சோனகன் சாவூர் பரஞ்சோதி என்பவர் தஞ்சை, கங்கைகொண்ட சோழபுரத்திலும், துருக்கன் அகமது என்பவர் நாகையைஅடுத்த சன்னமங்கலத்திலும் , சோழர் நாளில் உயர் அலுவலர்களாகத் திகழ்ந்தனர். அவர்கள் இருவரும் அராபிய இசுலாமியர்கள் ஆவர்.

## நாயக்கர் ஆட்சியில்

பொதுவாகத் தஞ்சை நாயக்கர்கள் வைணவ சமயத்தின் புரவலர்களாகத் திகழ்ந்தாலும் பிற சமயங்களுக்கும் ஆதரவு நல்கினர்.

முதல் அரசன் செவ்வப்ப நாயக்கன் 1530-ஆம் ஆண்டு அதிராம்பட்டினத்தில் ஹாஜி அலாவுதீன் சிஸ்தி சாகிப் அவர்கள் தர்காவை அழகிய முறையில் கட்டித்தந்து நிலக்கொடையும் அளித்தார். அவரே நாஞ்சிக்கோட்டை மண்ணையார்களைக் கொண்டு தஞ்சாவூர் சமசுப்ரு பள்ளி பக்கீர்களுக்கு ஏழுவேலி நிலம் கொடையளிக்கச் செய்தார்.

விசையராகவ நாயக்கன் காலத்தில் 9-7-1645 அன்று நாகூர் தர்காவில் முதல் மினார் எனப்படும் கோபுரத்தைக் கட்டித் தந்தார்.

## மராட்டியர் நாளில்

சைவ சமயத்தைக் காக்கவே அரசு அமைத்த மராட்டியர்கள் ஆட்சி புரியும்போது (1676 - 1855) எல்லாச் சமயங்களும் செழிக்கும் பண்ணையாகத் தஞ்சை திகழ்ந்தது.

பாதுகாப்பின்பொருட்டும், அரசு அலுவலின் பொருட்டும், வணிகம், வைத்தியத்திற்காகவும் ஏராளமான இசுலாமியர்கள் தஞ்சையில் குடியேறினர். அவர்கள் வழிபாட்டிற்கெனப் பல பள்ளிவாசல்களும் தர்காக்களும் கட்டப்பட்டன. அல்லாப் பண்டிகைக்குத் தாராளமாக அரசரும், அவர்தம் குடும்பத்தினரும் உதவிகள் புரிந்தனர்.

ராஜாமடம், மணமேல்குடிச் சத்திரங்களிலிருந்து குறிப்பிட்ட தொகை உள்ளூர் இசுலாமியர் தர்காக்களுக்கு வழங்க மராட்டிய அரசர்கள் உத்தரவிட்டனர். பிரதாபசிங் (1739-1763) நாகூர் அசரத் காதிர் ஒலி தர்காவில் வெளிக்கோபுரம் கட்டி 16-2-1753இல் கல்வெட்டும் பொறித்தார். அதற்குரிய இடம் துக்கோசி (1729-1735) அவர்களால் வழங்கப்பட்டது ஆகும்.

இன்றும் தஞ்சை மராட்டிய அரசர் குடும்பத்தினர் நாகூர் தர்காக் கந்தூரிக்குச் சந்தனமும், சாதரா எனப்படும் பட்டுச் சால்வையும் அனுப்புகின்றனர். அரச குடும்பத்தினர் நன்மைக்காக அங்கு பாத்தியா ஓதப்படுகிறது.

வலம்புரியில் குட்டித் தாஜ்மகால் எனப்படும் தர்கா ஒன்றை மராட்டியர் கட்டினர். மராட்டியர்நாளில் தஞ்சையில் வணிகம்செய்த இசுலாமியர்கள் மேலவீதி கொங்கணேசுவரர் கோயிலுக்குக் கொடை அளித்து விழா நடத்த ஏற்பாடு செய்தனர்.

மராட்டியர் ஆட்சியில் கிறித்தவப் புலவர் வேதநாயக சாத்திரியார் போன்ற கிறித்தவப் புலவர்களும், ஸ்வார்ட்ஸ், ஜி.யு. போப் போன்ற ஆங்கிலேயப் பாதிரிமார்களும் நன்கு ஆதரிக்கப்பட்டனர். சரபோசி II நாளில் டேவிட்பிள்ளை போன்றவர்கள் அமைச்சர் நிலையில் இருந்தனர்.

பல கொடைகள் அளிக்கப்பட்டு 'இது திருநீறு திருநாமத்துக்காரர்கட்குப் பொது' என்று எழுதப்பட்டது. சைவம்போல் வைணவமும் புரந்து காக்கப்பட்டது. எண்ணற்ற விஷ்ணு ஆலயங்கள் சரபோசியால் திருப்பணி பெற்றன.

நெஞ்சை அள்ளும் தஞ்சையின் சமய ஒருமைப்பாடு நாம் போற்றிப் பின்பற்றுவதற்கு உரியது.





# தஞ்சை மாவட்டத்தில் தொல்லியல் ஆய்வு

நடன. காசிநாதன் எம். ஏ.



வரலாற்றுக்கு முற்பட்ட தமிழரின் பண்பாட்டை அறிந்துகொள்ளப் பெரிதும் உறுதுணையாக இருப்பது தொல்லியல் அகழ்வாராய்ச்சியாகும்.

இதுவரை மேற்கொள்ளப்பட்ட கள ஆய்விலும், அகழாய்விலும் தஞ்சை மாவட்டப் பகுதியில் பெருங்கற்படைச் சின்னக் காலந்தொட்டு (கி.மு.1000 முதல்) மக்கள் வாழ்ந்து வந்துள்ளனர் என்று தெரியவருகிறது. பெருங்கற்படைச் சின்னக் காலத்திற்கு முற்பட்ட பண்பாடு தஞ்சை மாவட்டப் பகுதியில் கிடைக்காமல் இருப்பதற்கு வேளாண்மையால் ஏற்பட்ட சிதைவு காரணமாக இருக்கலாம். அல்லது, இப் பகுதியில் காவிரி ஆற்றுப்போக்கு மாற்றம் ஏற்பட்டதன் காரணமாக இருக்கலாம்.

இப் பகுதியில் பழையாறை, தாராசுரம், வல்லம், தஞ்சை ஆகிய இடங்களில் மேற்கொள்ளப்பட்ட அகழாய்வாலும், வலங்கைமான் போன்ற சில இடங்களில் கிடைத்த சிதைந்த செங்கற் கட்டிடங்களாலும் இப் பகுதியின் பழம் பண்பாடு தெரிய வருகிறது.

சென்னைப் பல்கலைக்கழகத் தொல்லியல் துறையும், தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறையும் பழையாறையில் உள்ள நந்தன்மேடு என்னும் வாழ்விடத்தில் மேற்கொண்ட அகழாய்வில் பெருங்கற்படைக் காலச் சின்னத்தைச் சேர்ந்த கறுப்பு சிவப்புப் பானை ஓடுகள், மண்விளக்குகள், கெண்டிகள், இரும்பு செம்பு ஆணிகள், கண்ணாடியால் ஆன வளையல்கள், பாசிகள், சுடுமண் பொம்மைகள் ஆகியவை கிடைத்துள்ளன. இதனால் இங்கு மக்கள் சுமார் 1600 ஆண்டுகட்கு முன்பிருந்து 600 ஆண்டுகள் முன்புவரை வாழ்ந்துள்ளனர் என்பது தெரிய வருகிறது.

இங்கு வாழ்ந்த மக்கள் செங்கற்களால் வீடுகளை அமைத்துக்கொண்டு கூரைப் பகுதியை மரக்கம்பங்களைக் கொண்டும், இரும்பு ஆணிகளைக் கொண்டும் ஒன்று சேர்த்திருக்கிறார்கள் என்பது தெரிய வருகிறது.

மத்தியத் தொல்பொருள் அளவீட்டுத் துறையினர் தாராசுரத்தில் அமைந்துள்ள ஐராவதேசுவரர் கோயிலுக்கும் அதன் முன் கோபுரத்திற்கும் இடையில் மேற்கொண்ட அகழாய்வில் நீண்டசதுர அமைப்பில் அமைந்த பெரிய கல் அடித்தளமும், அதன்மேல் எழுப்பிய செங்கல் அடித்தளமும் கிடைத்தன.

மேலும் இக் கோயில் உட்பிராகாரத்தைச் செப்பனிட்டபோது சிறுத்தொண்ட நாயனார் செப்புப்படிமம், துர்க்கை, தவமும் கண்ணன், மற்றும் சில அடியவர்கள் செப்புப் படிமங்கள் கிடைத்தன. இவற்றோடு மணிகள், விளக்குச் சரங்கள், பல கோயில் பரிகலங்கள், வளையல்கள், சோழர் காலத்திய 279 செப்புக் காசுகள் கிடைத்தன.

தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறை தஞ்சை நகரின் மேற்குப்புறம் சீனிவாசபுரத்தை அடுத்துள்ள வயல்களின் இடையே உள்ள மேட்டில் பழைய செங்கற் களையும், கூரைஓடுகளையும் கண்டு பிடித்துள்ளனர். கல்வெட்டுக்கள் பொறிக்கப் பட்ட சில தூண்கள் இங்குக் கிடைத்தன.





தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக்கழகம் வல்லத்தில் மேற்கொண்ட அகழாய்வில் கறுப்புசிவப்புப் பானைஓடுகளுடன், குறியீடுகள் கீறப்பட்ட பானை ஓடுகளும், தமிழி எழுத்துக்கள் பொறிக்கப்பட்ட பானை ஓடுகளும், எலும்பினால் செய்யப்பட்ட அம்பு முனைகளும், கூரை ஓடுகளும், பாசிகளும், சங்கு வளையல்களும் கிடைத்தன. இங்குள்ள பண்பாட்டுக்கூறுகள் கி.மு.300 முதல் கி.பி. 300 வரையிலான காலத்திற்கு உட்பட்டவை என்று 14கரிப்பகுப்பாய்வு மூலம் தெளிவாகியுள்ளது. தஞ்சையில் தமிழி எழுத்து முதலில் இங்குதான் கிடைத்துள்ளது.

## காவிரிக்கரையும் கரிகாலனும்

வரலாற்றுப் பேரறிஞர் தி. வை. சதாசிவப் பண்டாரத்தார் சங்ககாலக் கரிகாலன் கல்லணை கட்டவில்லை. காவிரிக்குக் கரை கட்டுவித்தான் என்று ஆய்ந்து நிறுவியுள்ளார்.

'தொக்க கலியின்மூ வாயிரத்துத் தொண்ணூற்றில்
மிக்க கரிகால வேந்தனும்தான் -பக்கம்
அலைக்கும் புகழ்பொன்னி ஆறுகரை கண்டான்
மலைக்கும் புயத்தானும் வந்து'

என்று பழம்பாடல் இதனைக் கூறும். இதன் காலம் கி. மு. 11 ஆம் ஆண்டாகும். காவிரிக்கரை கட்டியபோது கரிகாலனுக்கு 53 வயது என்று ஒரு தனிப்பாடல் கூறுகிறது.

'அஞ்சின் முடிகவித்து ஐம்பத்து மூன்றளவில்
கஞ்சி காவேரிக் கரைகண்டு. . .'

என்பது அப்பாடல் பகுதி.



## சுங்கம் இல்லாத சோழ நாடு

முதலாம் குலோத்துங்க சோழன் (1070-1120) சோழ நாட்டில் சுங்கம் (வரி) இல்லை என்று அறிவித்தான். அதனால் அம் மன்னன் சுங்கம் தவிர்த்த-சுங்கம் தவிர்த்தருளின சோழன் என்று பாராட்டப்பட்டான். காக்கையாடிக் கல்வெட்டு முதல் குலோத்துங்கனை வருத்தந்தவிர்த்த சோழன் என்று பாராட்டுகிறது.

'புவிராச ராசர் மனுமுதலோர் நாளில்
தவிராத சுங்கம் தவிர்த்தான்'

என்று புலவர்களும் அவனைப் புகழ்ந்தனர். 'சுங்கமில்லாச் சோணாட்டில் சோற்றுமலை குவிந்ததாக'ப் பிறகால மெய்கீர்த்திகளும் குறிக்கிறது.

தஞ்சையின் ஒருபகுதியாகிய கரந்தையில் ஏற்பட்ட ஓருரர்ப் பகுதிக்குச் 'சுங்கந்தவிர்த்த சோழ நல்லூர்' என்ற பெயர் வைக்கப்பட்டது. அது இன்றும் 'சுங்காந்திடல்' என வழங்கப்பெறுகிறது.



# கலைகளின் தாயகம் தஞ்சை

முனைவர் ம.சா. அறிவுடைநம்பி

பொதுவாகச் 'சோழநாடு சோறுடைத்து' எனப் போற்றப்பெறும் சோழநாட்டைச் சேர்ந்த தஞ்சை தமிழ்நாட்டின் நெற்களஞ்சியமாகத் திகழ்வதோடு கலைகளின் தாயகமாகவும் திகழ்கிறது.

## ஓவியக்கலை

தஞ்சைப் பெரியகோயிலில் பிற்காலச் சோழர், நாயக்கர் மராத்தியர் ஆகியோர் காலத்தைச் சார்ந்த சுவர் ஓவியங்கள் காணப்படுகின்றன. அந்தந்தக் காலத்தைச் சார்ந்த ஆடை அணிகலன்கள், பழக்க வழக்கங்கள் போன்றவை பண்பாட்டுச் சின்னங்களாகத் திகழ்கின்றன. மேலும் அரண்மனை, கோயில்கள், சத்திரங்கள், தர்பார்கூடம், மண்டபங்கள், சரசுவதி மகால் நூலகம் போன்றவற்றில் தஞ்சை மராத்தியர் காலத்தைச் சார்ந்த ஓவியங்கள் பாதுகாத்து வைக்கப்பட்டுள்ளன. சுவர், துணி, செப்பேடு, ஓலைச்சுவடி, காகிதச்சுவடி, பலகை, கண்ணாடி, காக்காய்ப்பொன், தந்தம், விளையாட்டு அட்டைகள் ஆகியவற்றில் மராத்தியர் காலத்தில் ஓவியங்கள் வரையப்பட்டுள்ளன. இக் காலத்து ஓவியங்களில் தலபுராணங்கள், கடவுளர் திருவுருவங்கள், அடியார் பெருமைகளை விளக்கும் நிகழ்ச்சிகள், உருவப்படங்கள், தேவி மகாத்மியம், திருவிளையாடற்புராணம், இராமாயணம், மகாபாரதம், பகவத்கீதை, பாகவதம், இதிகாசம், மராத்திய மன்னர்கள், புலவர்கள், அமைச்சர்கள், நாட்டியமகளிர், நாட்டுப்புறக்கலைகள், போர்வீரர்கள், அசுவ சாத்திரம், கஜசாத்திரம், குழந்தைப்பருவக் கண்ணன், பறவைகள், திருவிழாக்கள், பழங்கள், பூக்கள், விலங்குகள் முதலானவற்றைக் காணமுடிகிறது. மேலைநாட்டினர் இந்தியாவிற்கு வருகைதந்த பின்னர் ஏற்பட்ட பல்வேறு மாற்றங்களைப் பிற்காலத்திய ஓவியங்களில் காண முடிகின்றன.

## சிற்பக்கலை

தஞ்சைப் பெரியகோயில் கோபுரம் சிற்பக்கலையின் உயர்நிலைக்குச் சிறந்த சான்றாக விளங்குகிறது. தமிழ்நாட்டிலுள்ள கோயில்களின் எண்ணிக்கையில் சரிபாதி தஞ்சை மாவட்டத்தில்தான் உள்ளன. முற்காலச் சோழர், நாயக்கர், மராத்தியர் ஆகியோர் காலத்தைச் சார்ந்த சிற்பங்கள் கோயில்களின் சுவர், விமானச்சுவர், பிற வெளியிடங்கள், சத்திரங்கள் போன்றவற்றில் காணப்படுகின்றன. சைவ, வைணவச் சமயம் சார்ந்த சிற்பங்கள், அரசர்-அரசியர் உருவச் சிற்பங்கள், சிற்றுருவச் சிற்பங்கள், நாட்டியச் சிற்பங்கள், அடியார்களின் வாழ்க்கை நிகழ்ச்சிகளைச் சித்தரிக்கும் சிற்பங்கள் போன்ற பல்வேறு வகையான சிற்பங்களைச் செதுக்கியுள்ளனர். கருங்கல், சலவைக்கல், மரத்தூண், மரத்தேர், சுதை போன்றவைகளில் மராத்திய மன்னர்கள் சிற்பங்களைச் செதுக்கி வைத்துள்ளனர்.

## இசைக்கலை

பிற்காலச் சோழர்காலத்தைச் சேர்ந்த கல்வெட்டுகள், இலக்கியம் முதலானவற்றில் இசைப்புலவர்கள், இசைக்கருவி வாசித்தோர் போன்ற செய்திகள் காணப்படுகின்றன.



இரகுநாத நாயக்கர் 'சங்கீதசுதா' என்ற இசைநூலை இயற்றியுள்ளார். மராத்தியர் காலத்தைச் சேர்ந்த மோடி ஆவணங்களில் இசை தொடர்பான பல்வேறு குறிப்புகளைக் காணமுடிகிறது.

பல்வேறு இசைக்கருவிகள் வாசிப்பதிலும், இசைக்கருவிகளைச் செய்வதிலும் சிறந்து விளங்கிய கலைஞர்கள் தஞ்சைமண்ணில் வாழ்ந்துள்ளனர். பிற்காலத்தில் மேலை நாட்டினருடன் தொடர்பு ஏற்பட்டபிறகு அவர்கள்நாட்டிலிருந்த இசைக்கருவிகளும் இம் மண்ணில் அறிமுகப்படுத்தப்பட்டு வேரூன்றியுள்ளன. வீணை, தமபுரா, கோட்டு வாத்தியம், மிருதங்கம், டோலக், கஞ்சிரா, புல்லாங்குழல், நாகசுரம், சுருதிப்பெட்டி, ஆர்மோனியம், காற் சலங்கை போன்ற இசைக்கருவிகள் தஞ்சையிலேயே செய்யப்பெற்று உலகின் பல இடங்களுக்கும் இன்றும் ஏற்றுமதி செய்யப்பட்டு வருகின்றன. 'தஞ்சாவூர் பாண்டு' இசை என்பது இம்மண்ணுக்கே உரிய ஒன்றாகும்.

மகாராட்டிரத்திலிருந்து தமிழ்நாட்டுக்கு 'இலாவணி' என்ற நாட்டுப்புறப் பாடல்வகை வந்துள்ளது. இந்த இசைவடிவம் தஞ்சை, திருச்சி, மதுரை ஆகிய மாவட்டங்களில் மக்களின் பொழுதுபோக்கு நிகழ்ச்சியாக வசந்த விழாவின்போது (காமன் பண்டிகை) நடத்தப் பெறுகிறது. அதேபோன்று கதாகாலட்சேப வடிவில் புராணம், அடியார்களின் வரலாறுகளைப் பாகவதர்கள் இன்றும் திருவிழாக் காலங்களில் நிகழ்த்தி வருகின்றனர்.

## நாடகக்கலை

தஞ்சையில் குறவஞ்சி, விலாசம், யட்சகானம், பாகவதமேளம் ஆகிய நாடக வகைகள் மராத்தியர் ஆட்சிக்காலத்தில் மறுமலர்ச்சி அடைந்துள்ளன. கோயில் திருவிழாக்களிலும், பண்டிகை நாட்களிலும் நாடகங்கள் நடத்தப்பெறுகின்றன. தஞ்சைப் பெரியகோயிலின் உட்சுற்றுவட்டத்தில் அமைந்துள்ள 'குறவஞ்சி மேடை'யில் இராசராசசோழ நாடகம், சரபேந்திர பூபாலக் குறவஞ்சி நாடகம் ஆகிய நாடகங்கள் நடத்தப்பெற்றுள்ளன. அரண்மனையில் பல விலாச நாடகங்கள் அரங்கேற்றம் செய்யப் பட்டுக் கலைஞர்களால் நடத்தப்பட்டுள்ளன. இசைக்குச் சிறப்பிடம் கொடுத்து மக்கள் மகிழும் வண்ணம் அமைக்கப்பட்ட 'யட்சகான நாட்டிய நாடகங்கள் நடத்தப்பட்டுள்ளன. தஞ்சைக் கருகிலுள்ள மெலட்டூரில் ஆண்டுதோறும் பாகவதமேளா நாட்டிய நாடகங்கள் நடத்தப்பட்டு வருகின்றன. தஞ்சை நாயக்க மன்னர்கள் காலத்தில் தோன்றிய இக்கலை இன்றுவரை தொடர்ந்து 'நரசிம்ம செயந்தி' விழாவின்போது நடத்தப்பட்டு வருகின்றது. முற்றிலும் ஆண்களே எல்லாப் பாத்திரங்களையும் ஏற்று நடிப்பது இவண் குறிக்கத்தகும்.



## நாட்டியக்கலை

தஞ்சைப் பெரியகோயிலிலும் மற்றும் இங்குள்ள பிற கோயில்களிலும் நாட்டியம் தொடர்பான பல்வேறு சிற்பங்கள் செதுக்கப் பட்டுள்ளன. வழிவழியாகத் தொடர்ந்து போற்றப்பட்டுவரும் நாட்டியக்கலையில் 'தஞ்சை நால்வர்' எனப்பெறும் பொன்னையா, சின்னையா, சிவானந்தம், வடிவேலு ஆகியோர் குறிப்பிடத் தகுந்தவர்களாவர். இவர்கள் அலாரிப்பு, ஜதிஸ்வரம், ஸ்வரஜதி, பதவண்ணம், சப்தம், தில்லானா, கீர்த்தனைகள் போன்றவற்றை இயற்றி இப்பொழுதிருக்கும் நாட்டிய வடிவத்தை உருவாக்கியவர்களாவர். இரண்டாம் சரபோசி, சிவாசி ஆகிய தஞ்சை மராத்திய மன்னர்களின் ஆதரவில் தஞ்சை



அரண்மனையில் இருந்து இக் கலையைச் சிறப்புடன் வளர்த்துள்ளனர். அரண்மனையில் நாட்டியமகளிர் பலர் இருந்துள்ளனர்.

## பிற கலைகள்

பொய்க்கால் குதிரையாட்டம், பொம்மலாட்டம், தெருக்கூத்து, பகல்வேடம், மோடி நடனம், கிஞ்சின் நடனம், தப்பாட்டம் போன்ற பல கலைகள் இன்றும் தஞ்சையில் சிறப்பாகப் போற்றப்பெற்றுக் கலைஞர்களால் நிகழ்த்தப்பெறுகின்றன. பல்வேறு அரசு சார்ந்த விழாக்களில் தஞ்சையிலிருந்து இக் கலைஞர்கள் அழைக்கப்பெற்று நிகழ்ச்சிகளை நடத்தி வருகின்றனர்.

தஞ்சாவூர்த் தட்டு என்பது கலையழகு மிளிரும் ஒன்றாகும். இத் தட்டுக்களின் நடுவில் பல்வேறு உருவங்களைக் கலைநயத்துடன் பதித்து அழகுடன் திகழச் செய்துவருகின்றனர். தஞ்சாவூர்த் தலையாட்டிப் பொம்மை என்பதும் குறிப்பிடத்தக்க கலையாகும். சந்தனமாலை, சவ்வாதுமாலை, நெல்லால் செய்யப்பெற்ற மாலை போன்ற விலையுயர்ந்த மாலைகள் மிகவும் புகழ்பெற்றவை.

குளங்களில் வளரும் நெட்டி என்னும் ஒருவகைப் பூண்டைக்கொண்டு பல்வேறு பொம்மைகள், தஞ்சைப் பெரியகோயில் போன்ற பல வடிவங்கள் செய்யப்பெற்றுக் கண்ணாடியால் சுற்றிலும் சட்டம் அமைக்கும் கலையிலும் தஞ்சை சிறப்பிடம் பெற்றுத் திகழ்கிறது.

ஏற்கெனவே இருந்த பழமை வாய்ந்த பல கலைகள் புத்துயிர் பெற்றுத் திகழ்வதற்குத் தஞ்சைநகர் தென்னகத்திலேயே சிறந்து விளங்குகிறது. தஞ்சை மராத்திய மன்னர்கள் அளித்த பேராதரவினால் பல புதிய கலைகள் உருவாவதற்கும் இத் தஞ்சை தாய்போல் விளங்குகிறது. இதனால் பல நாடுகளிலிருந்தும் பல மாநிலங்களிலிருந்தும் பல கலைஞர்கள் இத் தஞ்சைக்குக் குடிபெயர்ந்து நிலையாகத் தங்கிவிடவும் செய்தனர். இரண்டாம் சரபோசி மன்னர் கலைகளின்மீது பேரார்வம் கொண்டு, கலைஞர்களுக்கு ஆக்கமும் ஊக்கமும் அளித்துக் 'கலைகளின் காவல்'னாக வரலாற்றில் இடம்பெற்றுள்ளார். பொதுவாகத் தஞ்சை மராத்திய மன்னர்கள் தங்கள் அரசவையில் பல கலைஞர்களை அரசவைக் கலைஞர்களாக அமர்த்தியுள்ளனர். அவர்களுக்குப் பரிசுகளும், பாராட்டுகளும், பட்டங்களும், நிலமானியங்களும் வழங்கிச் சிறப்புச் செய்துள்ளனர். தென்னகத்தைப் பொறுத்தஅளவில் அன்று முதல் இன்றுவரை தஞ்சை கலைகளின் தாயகமாக விளங்கி வருகிறது.

### 'குடந்தை உடையான்'



நன்னிலம் வட்டத்தில் புகழ்வாய்ந்த ஒரு பேரூர் 'கண்கொடுத்த வனிதம்'. அதன் பழம்பெயர் ஆலத்தாங்குடி. அவ்வூர் அருமொழிதேவ வள நாட்டு மங்கலநாட்டுப் பிரமதேயம் ஜயதரனான ஜயதுங்கச் சதுர்வேதி மங்கலத்தில் ஒருபகுதியாக அதாவது பிடாகையாக இருந்தது.

அவ்வூரில் உள்ள நயன வரதேசுவரர் கோயிலில் முதல் மாறவர்மன் குலசேகரபாண்டியன் கல்வெட்டு ஒன்று உள்ளது (கி. பி. 1298). அக் கல்வெட்டில் அவ்வூர் மத்யஸ்தனாக (நீதிபதி) ஸ்ரீ குடந்தையுடையான் ஸ்ரீ சேனாபதி அழகிய மண வாளப்பிரியன் என்பவர் குறிக்கப் பெறுகிறார்.

நயன வரதேசுவரர் என்பது சிவபெருமான் பெயர். அப்பெயராலேயே ஆலத்தங்குடி 'கண் கொடுத்த வனிதம்' ஆயிற்று.

# தஞ்சைக் கலைக்கூடம்

சா. ஜனகராஜன்

உலக நாடுகளில் உல்லாசப் பயணிகளைக் கவரும் இடங்கள் பலவுள்ளன. அவைகள் குறித்து வழிகாட்டிப் புத்தகங்களும் தயாரிக்கப்பட்டுள்ளன. அங்ஙனமாகத் தயாரிக்கப்பட்டுள்ள இந்திய நாட்டின் வழிகாட்டிப் புத்தகத்தில், சோழ நாட்டின் பண்டைத் தலைநகராம் தஞ்சையில் வெளிநாட்டவரும், உள்நாட்டவரும் கண்டு களிக்கக் குறிப்பிடப்பட்டுள்ள இடங்கள் மூன்றாகும். அவை

1) இராஜராஜ சோழனால் கட்டப்பட்டுள்ள 'பெரிய கோவில்' எனப்படும் பெருவுடையார் திருக்கோவில்.

2) சரசுவதி மகால் நூலகம்.

3) அரண்மனை வளாகத்தில் நாயக்கர் கொலுமண்டபம், ஆயுதக்கிடங்கு, கோபுரம் மற்றும் மணிமண்டபத்தை உள்ளடக்கிய தஞ்சைக் கலைக்கூடம்.



இந்தக் கலைக்கூடம் உருவாகிய வரலாறே ஒரு சுவைமிக்க சிறு நிகழ்ச்சியாகும். கல்கத்தா அருங்காட்சியகத்தின் புதைபொருள் ஆராய்ச்சியாளர் டாக்டர்.. சிவராமமூர்த்தி அவர்கள் தஞ்சையை அடுத்த கருந்தட்டாங்குடியில் படைப்புத் தொழிலுக்கு அதிபதியான, மும்மூர்த்திகளில் ஒருவரான, பிரமதேவனின் கற்சிலையொன்று வடவாற்றின் வடகரையில் கவனிப்பாரற்று இருப்பதைக் கண்டார். அதன் கலையழகில் மயங்கினார். அதனைக் கல்கத்தா அருங்காட்சியகத்திற்கு எடுத்துச் செல்லவேண்டுமென்று பேரவாக் கொண்டு, அப்போதைய மாவட்ட ஆட்சித் தலைவராக இருந்த உயர்திரு. டி. கே. பழனியப்பன் இ.ஆ.ப., அவர்களிடம் தொடர்பு கொண்டார். இந்த நிலையில் அப்பகுதி மக்களுக்கு ஒரு விழிப்புணர்ச்சி ஏற்பட்டு இச் சிலையினை வெளிமாநிலத்திற்கு எடுத்துச் செல்லும் முயற்சி வெற்றிபெறாவண்ணம் தடுத்தனர். ஆனால் அதேசமயம் இந்தச் சிலையைத் தஞ்சையிலேயே பாதுகாப்பாக வைத்துக்கொள்ள மாவட்ட ஆட்சித்தலைவர் அவர்களிடம் தங்கள் சம்மதத்தைத் தெரிவித்தனர். அதன்படி இந்தச் சிலை ஆற்றங்கரையிலிருந்து அரண்மனை வளாகத்துக்குக் கொண்டு வரப்பட்டது.

பிரபஞ்சத்தை உருவாக்கும் பிரமதேவன் கலைக்கூடம் ஒன்றினை உருவாக்க அரண்மனைக்கு எழுந்தருளியதாகக் கொண்டு, மாவட்ட ஆட்சித்தலைவரவர்கள் தஞ்சை நகரத்தைச் சேர்ந்த கலைஆர்வம் மிக்க அன்பர்களைக்கொண்டு ஒரு குழு அமைத்தார்கள். சாலையோரங்களிலும், ஆற்றங்கரைகளிலும் கவனிப்பாரற்றும் சமூக விரோதிகளால் பின்னப்படுத்தப்பட்டும் இருக்கும் சிலைகளை, கலைக்கூடம் அமைக்கும் பொருட்டு, கொண்டு வந்து சேர்க்கும் பணியினை அப்போது தஞ்சையில் துணை ஆட்சியராகப் பணி புரிந்துவந்த திரு. தொ.மு. பாஸ்கரத் தொண்டைமான் மற்றும் மாவட்டத்திலிருந்த வருவாய்த்துறை அலுவலர்களிடம் ஒப்படைத்தார்கள். இதனை அறிந்ததும் சில கோவில்களின் பொறுப்பாளர்களும், மடாதிபதிகளும், மராட்டிய பரம்பரையைச் சேர்ந்த மூத்த இளவரசர் திரு. இராஜாராம் ராஜா சாகேப் அவர்களும் வழிபாட்டில் இல்லாது தங்களிடமிருந்த விக்கிரகங்களைக் கலைக்கூடம் அமைத்திட மனமுவந்து அளித்தனர். இங்ஙனமாக உருவாக்கப்பட்ட தஞ்சைக் கலைக்கூடம் 9-12-1951 அன்று அப்போதைய தமிழக முதல்வர் மாண்புமிகு. பி.எஸ். குமாரசாமிராஜா அவர்கள் தலைமையில் அன்றைய பொதுப்பணித்துறை அமைச்சர் மாண்புமிகு எம். பக்தவத்சலம் அவர்களால் திறந்துவைக்கப்பட்டு, கடந்த நாற்பதாண்டு களாக உலக அரங்கில் ஒரு முக்கிய இடத்தை வகித்து வருகிறது.



தஞ்சை மாவட்டத்தில் பூமிக்கடியிலிருந்து புதைபொருளாகக் கண்டெடுக்கப்பட்ட பல செப்புத் திருமேனிகள் முறையான விசாரணைக்குப் பின் கலைக்கூடத்திற்கு ஒதுக்கப்பட்டுள்ளன. கலைக்கூட நிதியிலிருந்து அவைகள் வாங்கப்பட்டுத் தற்போது சுமார் இருநூற்றைம்பது செப்புத் திருமேனிகளும், நாற்றைம்பது கற்சிலைகளும் இக் கலைக்கூடத்தில் உள்ளன.





கலைக்கூடத்தினுள் நுழையும்போது நடுநாயகமாக வீற்றிருக்கும் பிரமதேவன் சிலையினையும் அதனைச்சுற்றியும், அதன் தெனபுறக்கூடத்திலும் அடுத்து ஆயுதக் கிடங்குக் கோபுரத்தின் அடிப்பாகக் கூடத்திலும் பல்வேறு தெய்வங்களின் கற்சிலைகள் பாங்குறப் பீடங்களில் வைக்கப்பட்டுள்ளன. நாயக்கர் கொலுமண்டபத்தில் செப்புத் திருமேனிகள் காட்சிக்கு வைக்கப்பட்டுள்ளன. இங்கு சைவ, வைணவ, பௌத்த மற்றும் சமண சமயங்களைச் சார்ந்த திருவுருவங்கள் உள்ளன. மேலும் இவை அனைத்தும் தஞ்சை மாவட்டத்திலிருந்து சேகரிக்கப்பட்டவை என்பதும் குறிப்பிடத்தக்க தாகும். இங்கு



கி.பி.7-ஆம் நூற்றாண்டிலிருந்து 20-ஆம் நூற்றாண்டுவரையிலான சிற்பங்கள் உள்ளன.

பிற்காலச் சோழர்கள் ஆட்சிக் காலத்தில் சைவசமயம் புத்துயிர் பெற, பிற சமயங்களான பௌத்தம் சமணம் ஆகியவற்றின் பிடியிலிருந்து மக்களைத் திருப்ப சைவநாயன்மார்கள், வைணவ ஆழ்வார்கள் பாடிய பாசுரங்களுக்கேற்பப் பெருமளவில் செப்புத் திருமேனிகள் செய்யப்பட்டுள்ளன. பல கோவில்கள் புதுப்பிக்கப்பட்டும் உள்ளன. மக்களிடையே சமய உணர்வையும் பக்தியுணர்வையும் உண்டாக்கக்கோவில்களில் விழாக்கள் எடுத்துத்

தெய்வ உருவங்கள் வீதியுலாவர ஏற்பாடுகள் செய்யப்பட்டன. எனவே சோழர்கள் காலத்தில் செய்யப்பட்ட கவின்மிகு செப்புத் திருமேனிகளை இங்கு மிகுதியாகக் காணலாம்.

உலகப் புகழ்பெற்ற, கலையம்சங்கள் நிறைந்த திருவெண்காட்டுச் செப்புத் திருமேனிகள் - ரிஷபவாகன தேவர், அம்பிகை, பிட்சாடனர், கண்ணப்பர் மற்றும் பலவற்றை இங்குக் காணலாம். எந்தவொரு அருங்காட்சியகத்திலும் அல்லது கலைக்கூடத்திலும் இவ்வளவு அதிகமான எண்ணிக்கையிலான செப்புத் திருமேனிகளை ஒரு சேரக் காண இயலாது.

இக் கலைக்கூடத்தில் உள்ள செப்புத் திருமேனிகளிலும், கற்சிலைகளிலும், புராணப் பின்னணி கொண்ட திருவுருவங்களும், சரித்திரப் பின்னணி கொண்டவைகளும், மனித உணர்ச்சிகளைச் சித்தரிப்பவைகளும் உள்ளன.

தாருகாவனத்து முனிவர்களால் ஏவி விடப்பட்ட யானையினைக் கொன்று அதன் தோலைப் போர்த்திக்கொண்ட சிவனின் ‘கஜசம்ஹாரர்’ சிலையினையும், முனிவர்களின் ஆணவத்தை அழிக்கச் சிவன் பிட்சாடனர் வேடம் பூண்டு சிவகணங்களுடன் பாடிக்கொண்டு ரிஷிபத்தினிகளின் இருப்பிடத்திற்கு வரும் காட்சியைச் சித்தரிக்கும் எழில்மிகு சிற்பங்களும், தன் புன்சிரிப்பாலேயே முப்புரங்களை எரித்த சிவபிரானின் ‘திரிபுராநதகர்’ சிலையும், செப்புத் திருமேனிகளில் கல்யாணசுந்தரர் கோலமும், எட்டுக் கரங்களுடன் அக்னிப் பிழம்பாக விளங்கும் ‘எண்தோள் முக்கண் எம்மானும் புராணப் பின்னணியில் அமைந்தவை.



சரித்திரப் பின்னணிக்கு மேலைச் சாளுக்கிய நாட்டு மன்னன் ஆகவ மல்லனை வென்று அவனது தலைநகர் கல்யாணபுரத்தை எரித்து அங்கிருந்து விஜயராஜேந்திர சோழன் கொண்டுவந்துள்ள துவாரபாலகர் கற்சிலையும், திருவெண்காடு அருள்மிகு சுவேதாரண்யேஸ்வரர் கோவில் கல்வெட்டுக்களில் காணப்படும் சான்றுகளுக்கேற்பவுள்ள ரிஷபவாகன தேவர், பார்வதி மற்றும் பிட்சாடனர் செப்புத்திருமேனிகளும் அமைந்துள்ளன.



ஆடலுக்கு நடராஜப்பெருமானின் பல திருவுருவங்களும், பாடலுக்கு வீணாதரர் செப்புத் திருமேனியும், கற்சிலையில் நாரதர் சிலைகளும் உள்ளன.

கலையழகுக்கு 'நர்த்தன விநாயகர்' சிலையும், காதலுக்கு ஒரே கல்லில் செதுக்கப்பட்டுள்ள சிவ-பார்வதி சிலையும், ஊடலுக்குப் பார்வதியின் சினத்தைச் சிவன் சமாதானம் செய்யும் 'கங்காதரர்' சிலையினையும் காணலாம்.

பல்வேறு காலகட்டங்களில் செய்யப்பட்ட, தெய்வீகக்களையுடன் கூடிய பலவகைப் பாவங் களைக்கொண்ட இந்தச் சிலைகள் உள்ள இந்தக் கலைக்கூடம் கலா ரசிகர்களுக்கும், ஆராய்ச்சி யாளர்களுக்கும், உல்லாசப்பயணிகளுக்கும் ஒரு கலைச் சுரங்கமாக அமைந்துள்ளதென்றால் மிகையாகாது.

## திவ்வியப் பிரபந்தத்துள் குடந்தை

ஐந்தாம் திருவாய்மொழியின் "ஆரா அமுதே" என்னும் எட்டாம் திருப்பதிகம் இத்தலத்திற்குரிய தாகும். (3194-3204)

திருமங்கையாழ்வார் பாடியுள்ள திருவெழு கூற்றிருக்கை குடந்தைக்குரியது தான் (2672).

நாலாயிரத் திவ்வியப் பிரபந்தத்தில் இவ்வூர் 51 இடங்களில் கூறப்பட்டுள்ளது.



# நடந்தாய் வாழி காவேரி

வெ.பாலுசாமி பி.இ., எம்.ஐ.இ.,

தரணி செழிக்கத் தஞ்சை மண்ணைத் தமிழ்நாட்டின் நெற்களஞ்சியமாக்கியவர்கள் நம் முன்னோர்கள்.

"மருங்கு வண்டு சிறந்து ஆர்ப்ப
மணிப்பூ ஆடை அது போர்த்துக்
கருங்கயல் கண் விழித் தொல்கி
நடந்தாய் வாழி காவேரி"

"வாழி யவன்தன் வளநாடு
மகவாய் வளர்க்கும் தாயாகி
ஊழி யுய்க்கும் பேருதவி
ஒழியாய் வாழி காவேரி"

என்று காவிரியின் புகழ் பாடுகிறது சிலப்பதிகாரம். காவிரித் தண்ணீரும், வளமான வண்டல் மண்ணும் இழைந்து விளைந்தவை செந்நெல்லும் வாழையும் மட்டுமல்ல; தரமிக்க தமிழர்களின் சீரிய பண்பாடும் கலை செறிந்த வளமிக்க வாழ்க்கையுமாகும். காவிரி சென்ற இடமெல்லாம் செழிப்புத்தான் என்றாலும், தஞ்சை மண்ணில்தான் வளங்களையெல்லாம் கொழிக்கிறாள். கொழித்துவிட்டுச் சேரவேண்டிய இடத்துக்குச் செல்ல மனமில்லாமல் தஞ்சைத் தரணியிலேயே ஊறிவிடுகிறாள். ஆற்றுப் பெருக்கற்று அடி சுடும் நாட்களில் கூட, ஊற்றுப் பெருக்கால் தஞ்சை மக்களை ஊக்குவிக்கிறாள்.

காவிரியின் இரு மருங்கிலுமுள்ள வளமிக்க நிலங்களில் செந்நெல்லும், வாழையும், செங்கரும்பும் செழித்து மக்களின் நலம் காட்டுகின்றன. வெள்ளத்தை மட்டுமின்றி, நம் உள்ளத்தையும் அள்ளிக் கொண்டு ஆழ்ந்து அகன்று வரும் காவிரி – வெள்ளம் கொள்ளுமிடம் போதாமல் – திருச்சிக்கு மேற்கே பத்து மைல் தூரத்தில் எலமனூர் எனுமிடத்தில் காவிரி கொள்ளிடம் என இரண்டாகப் பிரிகிறது. பிரியும் கொள்ளிடம் திருச்சிக்குக் கிழக்கே கல்லணைக்கருகில் காவிரியின் மிக அருகே வருகிறது. இங்கு உயர்ந்த மட்டத்தில் உள்ள காவிரிக்கும் தாழ்ந்த மட்டத்தில் உள்ள கொள்ளிடத்திற்கும் உள்ளாறு மூலம் இணைப்பு ஏற்படுகிறது. காவிரிக்கும் கொள்ளிடத்திற்கும், உள்ளாற்றுக்கும் இடைப்பட்ட நிலப்பரப்பு தெய்வமணங்கமழும் திருவரங்கத் தீவு.

## கல்லணை:

வளங்கொழிக்கும், தஞ்சைத் தரணியின் நுழைவாயில்களில் திருச்சியிலிருந்து 16 கல் தொலைவில் காவிரி ஆறும் கொள்ளிடமும்



உள்ளாறு என்ற நீர்த்தடத்தால் இணைக்கப்படுகின்றன. மேலணையில் இருந்து காவிரியில் வரும் தண்ணீர் உள்ளாறு வெள்ள நீர்த் தடத்தின் வழியாகத் திரும்பவும் கொள்ளிடத்தில், பாய்வதால் பாசன நீர்த் தட்டுபாடு ஏற்பட்டது. கரிகால் சோழன் காவிரியின் கரையை ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே பலப்படுத்தினான் என்பதை இலக்கிய வாயிலாக அறிகிறோம்.

தண்ணீரும் காவிரியே!
தார்வேந்தன் சோழனே!
மண்ணாவதும் சோழ மண்டலமே!

என்று கம்பனாலும், வான் பொய்ப்பினும் தான் பொய்யாக் காவிரி என்று நம்

முன்னோர்களாலும் சிறப்பிக்கப் பெற்ற காவிரித்தாய் இயற்கை அன்னையின் புறக்கணிப்பால் கடந்த பதினைந்து ஆண்டு காலமாகப் பொய்க்கத் தொடங்கினாள். விளைவு தமிழ்நாட்டில் – குறிப்பாகத் தஞ்சை மாவட்டத்தில் – வறுமையின் நிழல் படரத் துவங்கியது. சோற்றால் மடை அடைத்த சோழநாடு கடந்த பதினைந்து ஆண்டுகளாகத் தன் மண்வளத்தை இழக்கத் துவங்கியது.

தமிழக அரசின் சீரிய முயற்சியால் கிடைக்கின்ற குறைந்தளவு தண்ணீரைக் கொண்டு எப்படியெல்லாம் சிக்கனமாகவும் திறமையாகவும் பயன்படுத்தலாமோ அவ்வாறெல்லாம் பயன்படுத்திக் கடைமடைப் பகுதியிலுள்ள பயிர் நிலங்களிலும் பயன் பெறுகின்றவகையில் – தேவையான போது முறை வைத்தும் – நீர்ப் பங்கீடு செய்து வருகின்றனர்.

இருபுனலும் வாய்ந்த மலையும் வருபுனலும்
வல்லரணும் நாட்டிற்கு உறுப்பு

ஊற்றும் மழையுமாகிய இருவகை நீர் வளமும், தக்கவாறு அமைந்த மலையும், அந்த மலையிலிருந்து ஆறாகி வரும் நீர் வளமும், வலிய அரணும் நாட்டிற்கு உறுப்புகளாகும் என்கிறார் வள்ளுவர்.

## காவிரி கழிமுகப் பகுதியில் 1991-92ம் ஆண்டு நீர் பங்கீடு செய்யப்பட்டது தொடர்பான சிறுகுறிப்பு

மேட்டூர் நீர்த்தேக்கத்தில் நீர் இருப்பு 53.80 அடியாகவும் கொள்ளளவு 20 ஆயிரம் மில்லியன் கனஅடி இருப்பின் ஜூன் 12-ஆம் தேதி மேட்டூர் அணை திறக்க அரசு ஆணை நடப்பில் இருந்து வருகின்றது. மேலும், கர்நாடக நீர்த்தேக்கங்களின் தண்ணீர் இருப்பைப் பொறுத்தும், சாதகமான தென்மேற்குப் பருவ மழையைப் பொறுத்தும் மேட்டூர் அணை ஜூன் 12-ஆம் தேதி திறக்கப்படும்.

நடப்பாண்டில் (1991-92) காவிரி கழிமுகப் பகுதிப் பாசனத்திற்காக மேட்டூர் அணை 21-7-91 அன்று மாலை 6.00 மணிக்கு நீர் மட்டம் 84.20 அடி, கொள்ளளவு 46,270 மில்லியன் கனஅடி இருந்த நிலையில் திறக்கப்பட்டது. முதற்கட்டமாக 5000 கனஅடி வீதமும் படிப்படியாக வினாடிக்கு 12500 கனஅடி வீதமும் 25-7-91வரையிலும் அதன் பின்னரும் தொடர்ந்து திறந்து விடப்பட்டது. மேட்டூரில் திறக்கப்பட்ட தண்ணீர் கல்லணைத் தலைப்பில் 25-7-91அன்று அடைந்தது. அதே நாளில் காவிரி, வெண்ணாறு, கல்லணைக் கால்வாய், மற்றும் உள்ளாறு (கீழ்க் கொள்ளிடம்) பாசனத்திற்குத் திறந்து விடப்பட்டது.

கல்லணைத் தலைப்பிலிருந்து மேற்கண்ட நான்கு ஆறுகளிலும் வினாடிக்கு 30,000 கனஅடி வீதம் திறந்துவிடப்பட்டு, நீர் பங்கீடு செய்யப்பட்டுக் கடந்த 21-7-91 முதல் இதுநாள் வரையிலும் மேட்டூர் நீர்த்தேக்கத்திலிருந்து 280 டி.எம்.சி. வரப்பெற்று 240 டி.எம்.சி. பாசனத்திற்காக வழங்கப்பட்டுள்ளது. கல்லணைத் தலைப்பிலிருந்து 25-7-91 முதல் நாளது தேதி வரையிலும் 207 டி.எம்.சி. பெறப்பட்டு முறையே காவிரி, வெண்ணாறு, கல்லணைக்கால்வாய் மற்றும் கொள்ளிடம் ஆறுகளில் 73, 71, 42 மற்றும் 21 டி.எம்.சி. நீர் பங்கீடு செய்யப்பட்டது.

தஞ்சைத் தரணியை நெற்களஞ்சியமாக்கிப் பவனிவரும் காவிரித்தாயை வணங்கி மகிழ்வோமாக!

# செப்புத் திருமேனி

சுவாமிமலை
எஸ். தேவசேனாபதி ஸ்தபதி



மண்ணும் மரமும், கல்லும் காகிதமும், உருகும் உலோகமும் மனிதனின் கைவண்ணத்தால் பல்வேறு உருவங்களை அடைகின்றன. திருக்கோயிலில் எழுந்தருளி யிருக்கும் தெய்வச் சிலைகளாகவும் அவை உருவாகின்றன. பல பாரம்பரியமிக்க கலைகளை உலகிற்கு அளித்த மாவட்டமான தஞ்சையில் உள்ள சுவாமிமலை உலோகச் சிற்பக் கலைக்குத் தாயகமாக விளங்குகின்றது. உலகில் நாகரிகங்கள் வளர்ந்தது நதியின் கரையில்தான் என்பது வரலாற்று உண்மையாகும். அதேபோல இச் சிற்பக்கலையும் காவிரிக்கரையில் வளர்ந்து வந்திருக்கிறது. தற்போது இந்திய மண்ணில் பாரம்பரிய, உலோகச் சிற்பக்கலை வளர்ந்து வரும் இடங்களில் சுவாமிமலையும் ஒன்று.

கோயில்களில் கர்ப்பக்கிரகத்தில் நிலையாக ஸ்தாபிக்கப்படும் படிமங்கள் மூலப்படிமம் அல்லது மூலவிக்ரகம் எனப்படும். இந்த மூல விக்ரகத்திற்கு மூலபிம்பம், மூலபேரம், துருவ பேரம் என்று பல பெயர்.

திருவிழாக் காலங்களில் திருவுலாக் கொள்வதற்குரியதாகப் படிமங்கள் இயற்றப் படுகின்றன. இப்படி இயற்றப்படும் படிமங்கள் மூலப்படிமத்திற்கு இயைபு உடையதாகவும், மூலப்படிமத்தின் உயர அளவோடு தொடர்பு கொண்டதாகவும் அமைப்பது வழக்கம். எனினும், சில சமயங்களில் சமயக் கருத்துக்களுக்கு ஏற்பச் சிறப்பு அளவுகளிலும் அமைப்பது உண்டு.

பொதுவாக மூல விக்ரகத்தின் உயரத்திற்குச் சமம், முக்கால் அல்லது பாதியளவு செப்புத் திருமேனி இருத்தல் வேண்டும். அல்லது மூலபிம்பத்தின் உயர அளவை 9 சமபாகங்களாகப் பிரித்து, அதில் ஒரு பாகம்முதல் ஒன்பது பாகம்வரை ஏதேனும் ஒன்றைக் கொள்ளலாம். அல்லது மூல பிம்பத்தின், கேசாந்தம், புருவமட்டம், கண்மட்டம், மூக்குமட்டம், மோவாய் மட்டம், ஸ்தனமட்டம், மார்பு மட்டம் அல்லது நாபி மட்டம் ஆகிய இந்த ஏதேனும் ஒரு மட்டத்திற்கு உத்சவ பிம்பத்தை அமைக்கலாம்.

தினசரி பூசைக்குரிய படிமம் "கௌதுக பேரம்" எனப்படும். இது உத்சவ பிம்பத்தின் உயரத்தை 9 பாகங்களாக்கி, ஒன்றிலிருந்து ஒன்பது பாகம் வரையிலுள்ள பாகங்களில் ஏதேனும் ஒரு உயரத்தைக் கொடுத்துப் பிம்பத்தின் உயரமாகக் கொள்ளலாம்.

உத்சவ விக்ரகங்களை மாணாங் குலத்திலும், பேராங்குலத்திலும், ஆத்மார்த்த வழிபாட்டிற்குரிய செப்பு விக்ரகங்களை மாத்ராங்குலத்தினும் கொள்ளலாம். இப்படி உயரத்தை நிர்ணயிக்கும்பொழுது ஆயாதிப்



பொருத்தம் பார்த்து நல்ல அளவினைக் கொள்ளுதல் வேண்டும்.

ஆயாதி கணிதம்: ஆயாதி கணிதம் என்பது, மக்கள் எல்லா நன்மைகளும் அடையும் பொருட்டுக் கூறப்பட்டுக் கையாளப்படும் விதிமுறையாகும். இந்தக் கணிதப்படி அமைத்து வழிபடப்படும் படிமங்கள், நிறைந்த செல்வத்தையும், மிகுந்த சிறப்பையும் நல்குமென்று நூல்கள் கூறுகின்றன. ஆகவே, ஆயாதி இலக்கண விதியைப் பயன்படுத்திப் படிமங்களை அமைப்பது மிக்க நன்று. இந்த ஆயாதி சூத்திரங்கள் பலவகைப்படும். இதில் ஆறு பொருத்தங்களை மட்டும் ஆராய்வதை "ஷடயாதி" என்றும், பத்துப் பொருத்தங்களை ஆராய்வதை "தசாயாதி" என்றும், பதினாறு பொருத்தங்களை ஆராய்வது "ஷோடச ஆயாதி" என்றும் சொல்லப்படும். ஷோடச ஆயாதியினைப் "பூர்ண ஆயாதி" என்றும் கூறுவர். ஆயாதி கணிக்கும்முறை பலவகை உள்ளது. அதில் ஒன்றினைமட்டும் இங்குக் கூறுவோம். இதற்கு அடிப்படைத் தேவை 1. உத்சவ படிமத்தைச் செய்விப்போனின் ஜென்ம நட்சத்திரம் அல்லது நாம நட்சத்திரம் 2. அதேபோல் அவ் விக்ரகத்தை வைக்கப் போகும் ஊர் நட்சத்திரம். (இதற்கு வாஸ்த்து நட்சத்திரம் என்றும் பெயர் உண்டு.) பண்டைக்காலத்தில் ஒவ்வொரு கிராமமும், நகரமும், பட்டணமும், ஒரு குறிப்பிட்ட காலத்தில் குறிப்பிட்ட நட்சத்திரத்தில் தோற்றுவிக்கப்பட்டது: அந்த நட்சத்திரத்திற்கு ஏற்ப அவ் விடத்திற்குப் பெயர் சூட்டுவது மரபு. இங்ஙனம் முறைப்படிக் கிடைக்காவிடில், அவ் வூர்ப்பெயரின் முதலெழுத்துக்குரிய நாம நட்சத்திரத்தையே எடுத்துக் கொள்ளலாம். மூன்றாவதாக ஒவ்வொரு மூர்த்திக்கும், சிற்ப ஆகம நூற்படி நட்சத்திரங்கள் உண்டு. உதாரணமாக ஸ்ரீ கணபதிக்குச் சதயமும், ஸ்ரீ சுப்பிரமணியருக்குக் கார்த்திகையும், சிவனுக்குத் திருவாதிரையும், பார்வதிக்குப் பூரமும், துர்க்கை, சரஸ்வதிக்குச் சுவாதி நட்சத்திரமும் மூர்த்தி நட்சத்திரம் ஆகும். இப்படியாகக் கர்த்தாவின் நட்சத்திரம் வாஸ்து நட்சத்திரம், மூர்த்தி நட்சத்திரம் ஆகிய இம் மூன்று நட்சத்திரங்களையும் அறிந்து கொள்ளவேண்டும். மேலே கூறியுள்ளபடி ஓர் படிமத்தின் உயரத்தைப் பதினோரு வகையாகக் காணலாம். அதில் ஏதேனும் ஓர் அளவைத் தேர்ந்து, நிர்ணயித்துக் கொள்ள வேண்டும். ஒவ்வொரு அளவிற்கும் சிற்ப சாஸ்திரப்படி நட்சத்திரம் உண்டு. இதற்கு ஆயாதி நட்சத்திரம் என்று பெயர். இப்படியாக நிர்ணயித்த ஆயாதி நட்சத்திரம், கர்த்தா, வாஸ்து, சுவாமி ஆகிய மூவரின் நட்சத்திரத்திற்குப் பொருத்த முடையதா என்று அறிந்தகொண்டு, படிமத்தின் உயரத்தை அமைத்தால் அது கர்த்தா, அவ்வூர் அல்லது இடத்திற்குப் பரம சௌகர்யத்தையும், க்ஷேமத்தையும் நல்கும்.

இப்படியாகப் படிமத்தின் உயரத்தை நிர்ணயித்துக்கொண்டு, அப் படிமத்தின் பல்வேறு உறுப்புக்களின் நீள, அகலங்களையும்





ஒன்றுக்கொன்று ஒப்பு நோக்கி, தொடர்புபடுத்தி, அப் படிமங்களை அழகுறச்செய்ய, அப் படிமத்தின் முக நீளத்தையே மூல அளவாகக் கையாளப் படுகிறது. முக அளவினாலேயே பிற உறுப்புக்களின் உயர நீளம் நிர்ணயிக்கப் படுகிறது. இதில் நெற்றி முதல் முகவாய் வரை உள்ள அளவே 'முகம்' என்று சொல்லப்படுகிறது. இந்தச் சிற்ப இலக்கண நூல்கள் "தாளம்" என்றும் கூறுகின்றன.

முக அளவை மூல அளவாகக் கொண்டு, படிமத்தின் உடல், கால், கை, தோள், தொடை முதலிய பெரிய உறுப்புகளின் அளவுகளும் சிரசு, கழுத்து, முழங்கால், பாதம் ஆகிய உறுப்புகளின் அளவைகளும் கீழ்க்கண்டவாறு நிர்ணயிக்கப் படுகின்றன.

| | | | |
|---|---|---|---|
| தலை | .. | 1/4 | முகம் |
| முகம் | .. | 1 | முகம் |
| கழுத்து | .. | 1/4 | முகம் |
| மார்பு | .. | 1 | முகம் |
| நாபி | .. | 1 | முகம் |
| அரை (குய்யம்) | .. | 1 | முகம் |
| தொடை | .. | 2 | முகம் |
| முழங்கால் | .. | 1/4 | முகம் |
| கால் | .. | 2 | முகம் |
| பாதம் | .. | 1/4 | முகம் |
| படிமத்தின் மொத்த உயரம் | .. | 9 | முழு. முகம் |

இப்படியாகப் பாதம்முதல் தலை வரையில் உள்ள உயரம் ஒன்பது முக உயரம் ஆகும். இது நவதாள படிமத்தின் உயர விகிதமாகும். மேற்படி படிமத்தின் கண், காது, மூக்கு, வாய், விரல் போன்ற சிறு உறுப்புகள் "முக/ நாள" அளவின் பல உட்பிரிவுகளைக் கொண்டு நிர்ணயிக்கப்படுகின்றன. ஒரு தாள/முக நீளத்தை 12 சம பங்காகப் பிரிக்க, ஒவ்வொரு பாகத்தையும் "யவை" என்று கொள்ளப்படும். ஆக நவதாள படிமத்தின் உயரத்தை ஒன்பது தாள உயரம் என்பதற்குப் பதிலாக 12 x 9 = 108 விரல் என்றும் கூறலாம். விரலை அங்குலம், கம்சம் என்றும் கூறுவதுண்டு.

நவதாள மானத்தை நடுவாகக் கொண்டு அதற்குப் பெரிதாகப் பத்துத் தாளமும் சிறிதாக எட்டுத்தாளமும் மிகவும் முக்கியமான 3 தாள வகையாகும். மேலும் ஏழு, ஆறு, ஐந்து, நான்கு, மூன்று, இரண்டு, ஒன்று ஆகிய தாள வகைகளும் உண்டு.

ஏழு தாள உயரத்தை "வாமனம்" என்றும், எட்டுத்தாள உயரத்தை "மானுடம்" என்றும், ஒன்பது தாள உயரப் படிமத்தைத் 'தெய்வீகம்' என்றும் சிற்ப சாஸ்திரம் கூறுகிறது. குழந்தை உருவங்கள் ஐந்து தாள அளவினதாகும். குமரப் பருவத்தைச் சேர்ந்த படிமங்கள் ஆறு தாள அளவினதாகும்.

உலோகப் படிமங்கள் பெரும்பாலும் உத்சவப் படிமங்களாகவே பயன்படுத்தப் படுகின்றன. ஸ்திரப்பிரதிஷ்டை அதாவது மூல விக்ரகமாகச் சிறிதே பயன்படுத்தப் படுகிறது. உலோகப் படிமங்களை மிக அழகாகவும், நுட்பமாகவும், படிம லட்சணங்கள் முற்றிலும் அமையுமாறும் செய்யலாம். பெரும்பாலும் படிமங்கள் செம்பு, பித்தளை, ஈயக் கலவையில் செய்யப்படுகின்றன. சிறிய படிமங்களை வெள்ளியிலேயும் மிகச் சிறிய படிமங்களைத் தங்கத்திலேயும் கோயில் வழிபாட்டிற்கும், வீட்டு வழிபாட்டிற்கும் செய்வதுண்டு.

உலோகப் படிமங்கள் இரண்டுவகையாம். ஒன்று கெட்டியானது. மற்றது உள்ளீடற்றது (ஹாலோ). வழிபாட்டுப் படிமங்களைக் கெட்டியாகவே செய்தல் வேண்டும்.

## உலோகப் படிமங்களின் செய்முறை

மெழுகினால் படிமத்தினைச் செய்து, உருவாக்குவதே இத் தொழிலின் முதன்மையாகும். மெழுகுப் படிவம் எப்படி அமைகிறதோ அங்ஙனமே உலோகப் படிமமும் அமையும். ஆகையினால் சிற்பியின் திறமை முழுவதும் மெழுகுப் படிமத்திலேயே வெளிப்பட்டுவிடும்.

மெழுகினால் படிமங்களை உருவாக்குவதற்குத் தேன்மெழுகு, குங்கிலியம், எண்ணெய் ஆகிய மூன்று மூலப்பொருள்கள் தேவைப் படுகின்றன. இக் கலவையை ஓர் குறிப்பிட்ட



பக்குவத்தில் காய்ச்சினால் ஓர் திடப்பொருள் கிடைக்கும். இக் கலவையைச் சூடு செய்தால் மென்மைத் தன்மையும், தண்ணீரில் இட்டுக் குளிரச் செய்தால் கெட்டித்தன்மையும் அடையும். இந்த மெழுகைக்கொண்டு சிற்பி தேவையான படிமத்தை உருவாக்குகிறார். பிறகு அப் படிமத்திற்கான கை, கால், மூக்கு, காது மற்ற எல்லா அங்கங்களையும் மேலே கூறிய அளவை நிர்ணயித்தபடி, உத்சவப் படிமத்திற்கான மெழுகு வடிவத்தைத் தயாராக்குகிறார். பிறகு இதன்மேல், மிகவும் மெல்லியதாக வண்டல் மண்ணினால் பூச்சுக்கட்டி, உலர்த்தி அதனை நெருப்பிலிட்டுச் சுட்டு, அதற்குள் அமைந்த மெழுகுப் படிமத்தை உருக்கி வெளியேற்றியபின் உள்ள கூடு "கரு" எனப்படும்."

உலோகப் படிமங்களில் செம்பு, பித்தளை, ஈயம், வெள்ளி, தங்கம் ஆகிய பஞ்சலோகம் சேர்க்கப்படுகின்றன. இதில் வெள்ளியும் தங்கமும் மிகவும் குறைவாகவே சேர்க்கப்படும்.

குறிப்பிட்ட எடையில் செம்பு, பித்தளை, ஈயம் முறையே 82%, 15%, 3% என்ற விகிதத்தில் சேர்க்கப்பட்ட இக் கலவையைக் குடுவையில் வைத்துச் சூடுசெய்தால், 1200 டிகிரி சி. வெப்ப நிலையில் இவ்வுலோகக் கலவை நன்றாக உருகி நீர்போல் ஆகிறது. அதே சமயத்தில் மேலே கூறிய கருவையும் நன்றாகப் பழுக்கக் காய்ச்சி வைத்துக் கொண்டு, கருவில் முன்பே அமைத்துள்ள தாள்வாய் எனப்படும் புனலின் வழியாக உலோகத் திரவத்தை ஊற்றவேண்டும். நன்றாகக் கருவும், உலோகமும் குளிர்ந்தவுடன் கருவை உடைத்துப் படிமத்தைப் பெற்றுப் பிறகு அதைச் செதுக்கி, ராவி, நகாசு வேலைகள் செய்து மெருகேற்றித் தீர்மானம் செய்தல் வேண்டும். படிமத்திற்கு ஏற்ற பீடத்தையும் அளவிட்டு, மெழுகினால் பிடித்துக் கருக்கட்டி, வார்த்துச் சுத்தம் செய்து படிமத்தின் ஜடியோடு (பீடம்) பிணைத்தல் வேண்டும். இதற்கு ஜடி பந்தனம் என்று பெயர். இதுவே பஞ்சலோக உற்சவப் படிமங்களை உருவாக்கும் முறையாகும்




சோழர் காலத்தில் சிற்பிகள் மிகவும் போற்றிப் பாராட்டப்பட்டதாகவும், மன்னர்கள் சிற்பிகளுக்கு மானியம் கொடுத்துச் சிறப்பித்ததாகவும் பல கல்வெட்டுகள் கூறுகின்றன. இன்று விடுதலைக்குப்பின் இந்தச் சிற்பக்கலையை மத்திய மாநில அரசுகள் ஊக்கம் கொடுத்து வளர்த்து வருகின்றன.

இப்பொழுது இச் சிற்பக்கலை இந்தியாவில் மட்டும்அல்லாது வெளிநாடுகளுக்கும் பரவுகின்றது. இலண்டன், அமெரிக்கா, பிரான்ஸ், ஆஸ்திரேலியா, மொரீஷியஸ், சிங்கப்பூர், மலேசியா, இலங்கை ஆகிய நாடுகளில் அமைந்துள்ள இந்துக் கோவில்களுக்கு இங்கிருந்து சிலைகள் அனுப்பப்படுகின்றன.



# தஞ்சை டபீர் பண்டிதர்

எஸ். இராமச்சந்திரன், எம். ஏ.,

பதினெட்டாம் நூற்றாண்டில் தமிழகத்தை உலுக்கிய ஆர்க்காட்டு நவாப் பதவிப்பூசல் கி. பி. 1752-இல் முடிவடைந்தது. நவாப் பதவிக்குப் போட்டியிட்ட சந்தா சாகிப், தஞ்சை அரசர் பிரதாபசிம்மனின் படைத்தலைவர் மானோஜி ராவால் கொல்லப்பட்டான். தஞ்சைப் பகுதியில் அமைதி திரும்பிற்று இதன் பின்னர், காஞ்சிபுரத்திலிருந்து சங்கரமடம் தஞ்சைப் பகுதிக்குத் தனது தலைமையிடத்தை மாற்றிக் கொள்ளத் தீர்மானித்தது. பிரதாபசிம்மனின்கீழ் நிதித்துறை மற்றும் வெளியுறவுத்துறை அமைச்சராக இருந்தவர் விஸ்வநாத பண்டிதர் ஆவார். டபீர் என்ற பாரசீகச் சொல் இந்த அமைச்சர் பதவியைக் குறிக்கும். டபீர் விஸ்வநாத பண்டிதர், பிரதாபசிம்மரின் ஆணைப்படிக் காஞ்சி சங்கரமடத்தைக் கும்பகோணத்துக்கு மாற்றுவதற்கு ஏற்பாடுகள் செய்தார். தமது பெயரால் உருவாக்கப்பட்டிருந்த டபீர் அக்கிர ஹாரத்தில் இடமும் வழங்கினார். இவ்விடத்தில் காஞ்சி மடத்திற்குரிய கட்டடங்கள் அமைக்கப்பட்டன. கும்பகோணத்தில் சங்கரமடம் இருந்த காலத்தில் தஞ்சை மராட்டிய அரச குடும்பத்தினரிடம் செல்வாக்குடன் திகழ்ந்த சங்கரமடாதிப்திகள், குடந்தை மகாமக விழாவினை நடத்துவதிலும் முதன்மையான பங்கு வகித்தனர்.

விஸ்வநாத பண்டிதர் டபீர் பதவியை ஏற்றபோது ஆர்க்காட்டு நவாப் போர்களால் ஏற்பட்ட பஞ்சத்தின் விளைவு தஞ்சையில் கடுமையாக இருந்தது. அதனால், கடந்த பத்து பசலிகளில் (ஆண்டுகளில்) ஊரின் மொத்த விளைச்சலைக் கணக்கிட்டு அந்தப் பசலிக்குச் சராசரியாக வரிவிதிக்கும் நிலவரி விதிப்பு முறையை அறிமுகப்படுத்தினார். டபீர் முறி எனப்படும் இம் முறை, மனிதாபிமானத்தின் அடிப்படையில் ஏற்படுத்தப்பட்டதாயினும், ஆர்க்காட்டு நவாபும், ஆங்கிலேயக் கிழக்கிந்தியக் கும்பினியும், தமக்கு வரவேண்டிய கப்பப்பணம் சரியாக வசூலாகவில்லை யென்பதால் இம் முறையை மாற்ற வேண்டித் தஞ்சை அரசரை நிர்ப்பந்தம் செய்தனர். எனவே நேரடியாக அரசு அதிகாரிகளின் பொறுப்பில் அறுவடை செய்து, நிலவரி வசூலிக்கும் "அமானி" முறை மீண்டும் தஞ்சையில் அமுல்படுத்தப்பட்டது. "பத்தாம் பசலி" என்ற சொல், உருட்டி மிரட்டிக் காரியத்தைச் சாதித்துக் கொள்ளத் தெரியாத அப்பாவிகளைக் குறிக்கும் வழக்கம் இதிலிருந்தே ஏற்பட்டிருக்க வேண்டும்.

டபீர் பண்டிதரின் பரம்பரையைச் சேர்ந்த காலஞ்சென்ற திரு. கணபதிராவ், அவர்களின் உறவினர் திரு. அ. பாலசுப்பிரமணியம் என்பவர், தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறையின் பொறுப்பிலுள்ள தஞ்சை மராட்டியர் அரண்மனை அகழ்வைப்பகத்திற்கு டபீர் பண்டிதரின் ஓவியம் ஒன்றினையும் ஓலைச்சுவடிகள் சிலவற்றையும் அன்பளிப்பாக வழங்கியுள்ளார். இவற்றில் ஓர் ஓலைச்சுவடி கி. பி. 1856 ஆம் ஆண்டில் நடைபெற்ற நில விக்கிரய சாசனமாகும். இச் சுவடியில், "டபீர் தெருவிலிருக்கும் சங்கராச்சாரியார் அறிவேன்" என்ற சாட்சிக் கையொப்பம் காணப்படுகிறது.



# மகாமக அந்தாதிக் கும்மி

எம். சீராளன் பி.ஏ., எம்.எல். ஐ.எஸ்.,



தஞ்சைச் சரசுவதி மகால் நூல்கத்தில் தமிழ் அச்சுநூற் பிரிவில் வரிசை எண் 2008_ல் மகாமக அந்தாதிக்கும்மி என்ற மிகச்சிறிய நூலொன்று பாதுகாத்து வைக்கப்பட்டு உள்ளது. இந் நூலில் 50 அந்தாதிப் பாடல்களும், நான்கு கடவுள் வாழ்த்து மற்றும் காப்புச் செய்யுள்களும் உள்ளன. நூலாசிரியர், அச்சிட்ட இடம், ஆண்டு போன்ற விவரங்கள் ஒன்றும் அறியமுடியவில்லை. ஆகவே பாதுகாப்பு நோக்குடன் சிறுகுறிப்புடன் வெளியிடப்படுகிறது.

கவிஞர் இப் பாடலில் சுந்தரதாதார்யன் பாதங்காப்பாம் எனக் குறிப்பிட்டுள்ளார். எளிய பாடல்களில் கன்னியா தீர்த்த மென்பதற்கு விவரம் அமிர்தசர சென்பதற்கு விவரம், ஞானவான் சரித்திரம், கும்பகோணம் என்பதற்கும் கும்பேசரென்பதற்கும் விளக்கம், ஏமவாகுவின் மனைவிக்கு வேதாளம் நீங்கியது, சுதர்மாவும் வீரவர்மாவும் புத்திரனையடைதல், அஸ்தி என்பவள் பரிசுத்தமான கதை முதலிய செய்திகள் மங்களத்துடன் நிறைவு செய்யப்பட்டுள்ளது.

## மகாமக அந்தாதிக் கும்மி

### காப்பு

மாமக வைபவம் மாநிலந் தன்னிலே
பாமிகு தமிழினில் கும்மிபாட
நாமக டன்னொடு நான்முகன்
போற்றிடும்
கோமள வல்லிதன் கொழுநன்
காப்பாம் 1

அம்புவி தனக்கோ ரழகு மகுடமாம்
கும்பகோ ணம்மெனுங் குடந்தை
தன்னில்
கம்பீர மாமகக் கும்மியது சொல்லச்
சம்பு சதாசிவன் தானுங் காப்பாம் 2

வேலைசூ ழுலகினில் மேலான
குடந்தையில்
சீலஞ்சேர் மாமகச் செழிப்புரைக்க
வாலை சரஸ்வதி வந்தென்
நாவினின்று
பாலனஞ் செய்வாளே பாங்குடனே 3

அந்தாதிக் கும்மி யருந்தமிழ் தன்னிலே
விந்தையா மாமக மேன்மை சொல்ல



அந்தணர் போற்றிடும் அருந்தவ
மேற்றிடும்
சுந்தர தாதார்யன் பாதங்காப்பாம் 4

நூல்

மன்னிய மாமகம் மாநிலந்
தன்னிலோர்
பன்னிரண் டாண்டிற்
கொருமுறையாம்
வன்னியாம் சூரியன் கும்பத் திருந்திட
பன்னிய குருமதி பார்த்திடுநாள் 1

பார்த்திடு நாளதிற் குடந்தையின்
மாமக
தீர்த்தமது தன்னிற் றோய்ந்திடவே
பார்த்திப ரெல்லோரும் பயபக்தி
தன்னோடு
யாத்திரை செய்வாரின் னகரணுக 2

இன்னகர் தன்னிட வன்னியாந்
திசையிலே
சொன்னதோர் மாமகத் தீர்த்தத்தையே
கன்னியா தீர்த்தம் கனவமுத தீர்த்தம்
பொன்னன் தீர்த்தம் பகுதீர்த்த
மென்பார் 3

தீர்த்த மதனுள்ளே தோன்றுமெண்
டிசையிலும்
நேர்த்தி யாய்த்திக்குப் பாலர்களும்
சீர்த்தியாய் நின்றங்குச் சோபன
மாகவே
பார்த்திபர் தங்கட்குப் பலனளிப்பார் 4

பலனது எந்நாளும் பாரினிலித்
தீர்த்தம்
நலமுடன் றோய்வோர்க்கு
நன்றளிக்கும்
மலமறு மாமக மாநாளிற்
றோய்வோர்க்குப்
பலபல பஞ்சமா பாதகம் போம் 5

கன்னியா தீர்த்தம்

பாதக மனைத்தையும் பாரினிற்
றீர்த்திடும்
தீதறு தீர்த்த வகைக ளெவ்வாம்
மாதரு வாகியே வந்தங்கு நின்றார்கள்
மாதவர் தன்னிட சன்னதியில் 6

மாதவ ரேயருள் போதக ரேதேவ
சாதக ரேஞரு நாத ரேநீர்
தீதுறு பாவங்கள் சேரவ னைத்தையும்
சேதஞ் செய்யும்வகை செப்பு
மென்றார்

செய்முறைக் கேட்ட திருவுரு நாதரும்
ஒய்யுடன் வந்தவர்ச் கருள்புரிந்து
இப்புவி தன்னிலே ஏர்குடந்தைசென்று
நுட்பமா மாமக நாளதிலே 8

மாமக நாளதில் மன்னிய குடந்தையில்
மாமக தீர்த்தத்தி லாடியபின்
சோமனை வல்லிக் குறைவிட மாகிய
ஏம தீர்த்தமதி லாடிடுவீர் 9

ஆடுவீர் குடந்தைக் கலங்கார மாகவே
ஓடு மாலையாம் காவிரியில்
நாடிய பாவங்கள் நாசம தாய்விடும்
வாடிய மங்கைகாள் மனமகிழ்வீர் 10
மனமகிழ் வீரென்று மாதவர்
சொல்லலும்
இனப்பிரி யாமலெல் லோரும்சென்று
குணமுடன் குடந்தையிற்
குருசிங்க மேறவோர்
தினம்வரு மென்றங்குத் தேறிநின்றார் 11

தேறிய கும்பத்தில் செகச்சோதி யாகிய
சூரிய பகவானும் சேர்ந்தபின்பு
பூரண கலைமதி பொங்கு சிங்கமாய்
நாரிய ரெல்லோரும் புனல்
குடைந்தார் 12

புனல்கு டைந்தவப் பொழுதது
தன்னிலே
புனிதரா யெல்லோரும் பொறுமை
யொடு
கனதவம் செய்தவர் கைகொள்ளும்
பெருமையைத்
தினமொன்று தன்னிலே சேர்ந்தோ
மென்றார் 13

சேர்ந்திவர் கன்னிகைத் தேகங்
கொண் டின்னீரில்
தோய்ந்ததாற் கன்னிகா தீர்த்த
மென்றும்



வாய்த்தநோர் அமிர்த தீர்த்தப்பேர்
வந்ததை
ஆய்ந்தபே ருரைத்ததை யறிந்து
சொல்வேன் 14

அமிர்தசரசு

அறிந்துமே நான்முகன் ஆதி பரவனைச்
சிறந்தடி பணிந்துநான் தோத்தரித்து
பரந்தவிப் பாரினைப் பரவைதான்
மூடிடப்
பொருந்தும் பிரளயம் போந்திடுமே 15

போந்திடப் பாரினில் பீஜ
வகையெல்லாம்
சோர்ந்துமே நாசமாய்த் துவைந்திடுமே
ஏந்தும் வகையெனக் கேதேனு
மோதுவீர்
பாந்தட் பரிவனே பணிந்தே
னென்றார் 16

பணிந்த நான்முகன் தன்னைப்
பரமனும்
குணமுடன் குடமொன்று கொண்டதிலே
நனிபீஜ வகையெல்லாம் நல்லமுத
மாக்கி
நினைவுடன் குடமதில் நிரப்பு
மென்றார் 17

நிரப்பிய குடமதை நூலதனாற் சுற்றித்
தருப்பை புரிநூலும் சாத்தியபின்
திருப்பொலி குடவாயைத்
தேங்காய தால்மூடி
பொருப்பதின் தென்பாகம்
வையுமென்றார் 18

வையுமென்று சொன்ன வார்த்தையது
கேட்டு
துய்ய நான்முகனும் தோத்தரித்து
நொய்ய பீஜமெலாம் நுண்ணமுத
மாக்கிச்
செய்யமேருமலையின் தென்
பாகம்வைத்தார் 19

வைத்தவர் மேருவின் வன்முடி
தான்சென்று
மெத்தஅச்ச மாகி மேவி நிற்க
உத்தபிரளய மோர்மாரி
பொழிந்திடச்
சுத்த ஜலமாகத் தோன்றிட்டதே 20

ஜலமது பெருகவே ஜகமனைத்தும்
மூழ்கிச்
சிலநாளிற் சிவன்மலை மூழ்கியதே
குலவரை மீதிட்ட கும்பத்
திடைசெல்லச்
சலமதில் மிதந்ததே தண்குடந்தான் 21

மிதந்த குடந்தெற்கில் வெகுதூரம்
வருகவும்
உதகம் வற்றிப் பாரில் உற்றுநிற்கப்
பதறுங் கிராதனாய்ப் பார்ப்பதி
பாகனும்
சிதற அமுதகடம் தேடலுற்றார் 22

தேடிவரு மந்தச் சிவபிரான் குடமதை
நாடி யொருகணை நய்ய வெய்தார்
வீடிய வக்கணை வன்குட வாய்ப்பர்ய
ஓடிய தேசுதை யோஜனைக்கே 23

ஓடிய வமுதம் உற்றபொற் றாமரை
கூடிய மாமகக் குளமதிலும்
நாடியே தங்கிய நற்கா ரணமதால்
சூடினா ரமுத சரசெனப்பேர் 24
அமுத கடமதில் ஐம்முகக் கடவுளும்
அமர்ந்து பரஞ்சோதி யாகிநின்று
எமதடைக் கலமா கின்றவடி
யார்க்குச்
சடையுடன் தரிசனந்
தருவோமென்றார் 25

கும்பகோணம் கும்பேசுர்

தருவோ மென்றுசொல்லித் தானு
மக்கடத்தின்
உருவங் கொண்டவொரு
காரணத்தால்
திருவமுத கடேச ரென்று பேராம்
திருக்கு டந்தையென ஊரின்
பேராம் 26

பேரா மாமகப் புண்ணிய
தீர்த்தத்தில்
நீராட நேர்பலன் நேர்ந்துரைப்பேன்





தீரா வினைகளைத் தீர்ப்ப
துடன்பின்னும்
கோரிய வரங்களைக் கொடுத்திடுமே 27

கொடுத்திடு மேவரன் தொழுநரர்
சுரருக்கும்
தொடுத்திடும் விரதத்து நாரியர்க்கும்
விடுத்திடும் நாரியர் வந்தி
வகைகளை
மடுத்திடும் பஞ்சமா பாதகத்தை 28

## ஞானவான் சரித்திரம்

பாதகத்தைத் தீர்த்த பழைய
க்கதையொன்று
மாதவர் சொன்னதை
மகிழ்ந்துரைப்பேன்
தீதினிற் சிந்தையைச் செல்ல
விடாமலே
காது கொடுத்திதைக்
கண்டுகொள்வீர் 29

கண்டுகொள் வீர்தவக் கண்வரின்
மரபினில்
உண்டா கியயக்ய சிலரென்போர்
பண்டை முறைப்படி பைங்கூர்ம
யாகத்தால்
அண்டர்க் கவிர்ப்பாக
மளிப்போமென்று 30

அளிப்போ மென்றுசொல்லி யக்கணம்
சங்கர்ப்பம்
களிப்பாகச் செய்தவர் கான்முளையை
விளித்துநீ கச்சபம் விரைவினிற்
கொணர்வாயேல்
களுவினில் யாகத்தைச்
செய்வோமென்றார் 31

செய்வோ மென்றுசொன்ன
தந்தைசொல் தான்கேட்டுச்
செய்யதோர் ஞானவான்
சுறுசுறுப்பாய்
வெய்ய வருணனை வேண்டி
யவணிற்க
நொய்ய வினையதால் நேரவில்லை 32

நேராம னாட்சென்று நேர்கூர்மம்
வருமுன்னே
தீராத பசிதாகத் தீம்பதனால்
பேராம் சிலவதி பதியக்ய சிலரும்
மாறாத பதவியை மகிழ்ந்தடைந்தார் 33

பதவி யடைந்ததன் மாதா பிதாவையும்
பதறி ஞானசிலன் பார்த்தழுது
சிதறாமற் கிரியைகள் சீராக
முடித்திட்டுச்
சதிராக நைமிசம் சாரலுற்றார் 34

சாரவும் நான்மறை தேர்ந்தவ
ரெல்லோரும்
ஆராமந் தன்னுள் ளடங்கிநின்று
பேரான பாதகன் பேய்முகங்
கண்ணினில்
நேராத படிக்கிங்கு
நிற்போமென்றார் 35

என்றவர் பாதத்தில் ஏம
தண்டமெனச்
சென்றடி பணிந்து தோத்தரித்து
எந்தனிட பாபம் எவ்விதந் தீருமோ
அந்த வகையெனக் கருள்புரிவீர் 36

அருள்புரி வீரென் றந்தணன்
சொல்லவே
அருந்தவர் இவன்முக நோக்கிச்
சொல்வார்
பொருந்திய ஊழ்வினை
போந்திப் பிறவியில்
வருந்திய தென்றுமே
வகுத்துரைத்தார் 37

வகுத்ததோர் பாதகம் வலியற்றுப்
போகவே
தகுத்ததோர் சாந்திநீர் தயைபுரிவீர்
தொகுத்த புராணங்கள் சோர்வறக்
கற்றோரே
புகுந்தேன் சரணென்றான்
பாதத்திலே 38

பாதத்தில் விழ்ந்ததோர் பக்குவ
ஞானிக்கே
ஏதுரைப் போமென்று யேங்கியிந்த
பாதகந் தனக்குப் பிராயச்சித்த
மெங்கும்
ஓதவில்லை யென்று மோர லுற்றார் 39



ஓர்ந்தவர் சொன்னார்கள் உற்ற
கும்பகோணம்
தேர்ந்ததோ ரமுதத் தீர்த்தங்களில்
சார்ந்துமே மாமக நாளது
கண்டுநீர்
தோய்ந்திட வேயாபந் தீர்ந்திடுவீர் 40

பாபந் தீருமென்ற பரிசுத்த
வார்த்தையை
நேமமாய்க் கேட்டவன் வன்னொடி
தன்னிலே
கோப மடக்கியே கும்பகோ
ணஞ்சென்று
மாமகந் தன்னினீ ராடலுற்றான் 41

உற்றதோர் ஞானவான் உறுபாப
நீங்கவே
சற்றுங் குறைவன்றித் தாரணியில்
நற்றவந் தன்னோடு நற்குழவி
யோடும்
மற்றுங் குறைவின்றி
வாழ்ந்திருந்தான் 42

## ஏமவாகுவின் மனைவியைப் பிடித்த வேதாளம் நீங்கியது

வாழ்ந்திருந்தான் யேம வாகுவெனும்
வேந்தன்
வேதாளம் பிடித்த மனைவியோடு
மாழ்கிய மனத்தனாய்ப் பூசுரரைக்
கண்டு
தாழ்ந்தொரு சாந்திதான்
சாற்றுமென்றான் 43

என்றதோ ரரசனை யோர்தவத்
தோர்களும்
சென்றுமே கங்கையிற்
றோய்கவென்றார்
நன்றென்று சென்றவர் கங்கையில்
மூழ்கவும்
மசென்றன ரமுத மாவாவியிலே 44

அமுதமா வாவியி னருங்கரைச்
சேரலும்
குமுறிய வேதாளம்
சுலோசனையைத்
தமியேனைக் கரையேற்றித் தந்ததாய்
நீயென்று
அமர வடிவொடு அறையலுற்றான் 45

அறைந்தவன் றன்னை நீ யாரென்று
வினவலும்
உறைந்த வேதாள நானுன்னருளால்
துறந்து நான்கதி தொல்லுலகோ
ரேத்தச்
சிறந்ததோர் சொர்க்கம்
சேர்வேனென்றான் 46

என்றவந் தனைநீ எங்கள் வரவையும்
நன்றாகச் சொல்லென நயந்திரப்பத்
தொன்றுசேர் பாவங்கள் தொலையவிந்
நீராடச்
சென்றன னுங்களைச்
சேர்த்தே கங்கை 47

## சுதர்மாவும் வீரவர்மாவும் புத்திரனை யடைந்தது

சேர்ந்த கீர்த்தியுடை திறல்வீர
வர்மாவும்
தேர்ந்ததோர் வேதியன் சுதன்மனுமே
ஓர்ந்திந் நீராடியே உற்றதோர்
மகப்பேறு
நேர்ந்தார்க ளென்பதை நெடியோர்
சொன்னார் 48

## அஸ்தி என்பவள் பரிசுத்தமான சுதை

நெடியமா காலமாய் நீள்பாப மியற்றிய
கொடிய வஸ்தியென்ற
குறைநடையாள்
வடிவாய மாமக வாவிநீ ராடமின்
இடையாகி மங்கள ரூபமுற்றாள் 49

## மங்களம்

மங்களம் மாமகக் கும்மி -
படித்தோர்க்கும்
மங்கள மிதனைப் பாடினோர்க்கும்
மங்கள மிக்கும்மி கேட்போ
ரனை வோர்க்கும்
மங்களம் மன்னிய மறையோர்க்குமே. 50

முற்றிற்று.



# இந்தியாவின் முதல் நடமாடும் நூலகம்

த. பத்மநாபன் எம்.ஏ., எம்.எல்.ஐ.எஸ்.

தமிழ்நாட்டு மக்களுக்குக் கல்லாமை என்ற தூக்கம் நீங்கினால்தான், நாட்டுச் சுதந்திரம் என்ற ஏக்கம் எழும் என்ற நோக்கம் படைத்தவர்கள், இளமையில் கல்லாதவர்களுக்கு 'வாலிபர் கல்வி' என்ற ஒரு இயக்கத்தைத் துவக்கினார்கள். இந்திய நாட்டின் முதியோர்கல்வி இயக்கங்களில் முதியது தஞ்சை மாவட்டத்தில் மன்னார்குடி கௌமார குருகுலம் 1920களின் தொடக்கத்தில் நிறுவியதாகும். கிராமங்கள் தோறும் வீட்டு வாசலுக்குச் சென்று அறியாமைஇருள் நீங்கிட நூல்களை வழங்கும், நடமாடும் நூலகம் 1931 இல் 95 கிராமங்களில் உலாவரத் தொடங்கிற்று. இந்திய நாட்டிற்கே முதல் நடமாடும் நூலக வண்டியை அமைத்து, வெற்றியுடன் தொடர்ந்து பல்லாண்டுகள் நடத்திய பெருமை தஞ்சை மாவட்டத்திற்கே உரியதாகும்.

## சென்னைப் புத்தகாலயப் பிரசார சங்கம்

தமிழ்நாட்டு மக்களின் கல்வியறிவு எழுச்சிபெற ஊர்கள்தோறும் இலவசமான





பொதுநூலகங்கள் அரசாங்கத்தின் செலவில் அமைக்கப்பெற வேண்டும் என்று நூலறிவுப் போராட்ட எழுச்சிக் குரல் எழுப்பியவர் தஞ்சை மாவட்டத்தின் மண்ணின் மைந்தர் சீர்காழி எஸ். ஆர். ரங்கநாதன் அவர்கள் ஆவர். இந்திய நாட்டின் நூலகத் தந்தை என்று பெயர்பெற்ற இவர் சென்னைப் பல்கலைக்கழக நூலகராக இருக்கும்போது தோற்றுவித்தது சென்னைப் புத்தகாலயப் பிரசார சங்கம் என்பதாகும்.

## 1933ஆம் ஆண்டு மகாமகத் திருவிழாவில் நூலகக் கண்காட்சி

பல இலட்சக்கணக்கான மக்கள் கூடுகின்ற மகாமகத் திருவிழாவில் சென்னைப் புத்தகாலயப் பிரசார சங்கம் ஒரு நூலகக் கண்காட்சியினை அமைத்தது. இக் கண்காட்சியின் நோக்கம் வெளிநாடுகளில் எவ்வாறு பொதுநூலகங்கள் கல்வியறிவை மேம்படுத்தப் பயன் படுகின்றனவோ அவ்வாறே தமிழ்நாட்டிலும் அரசாங்கத்தால் அமைக்கப்பட்டு பயன்படுத்தப்பெறல் வேண்டும் என்பதே. இது ஒரு மறைமுகமான சுதந்திரப் போராட்டத் தூண்டுகோல் என்றே கூறலாம்.



## 1933 - நூலகக் கண்காட்சி விவரம்

கும்பகோணம் நகர உயர்நிலைப்பள்ளி மைதானத்தில் 25_2_1933_ஆம் நாளிலிருந்து 20_3_1933_ஆம் நாள்வரை மகாமகத் திருவிழாவினையொட்டி இக் கண்காட்சி அமைக்கப்பெற்றது.

கும்பகோணம் நகராட்சித் தலைவர் ராவ்பகதூர் என். திருவேங்கடத்தான் அய்யங்கார் அவர்கள் திறந்து வைக்க, இக் கண்காட்சி நிர்வாகப் பொறுப்பைக் கும்பகோணம் நகர உயர்நிலைப்பள்ளியில் ஓய்வுபெற்ற தலைமையாசிரியர் திரு. ஆர். சுவாமிநாத அய்யர் அவர்கள் ஏற்றார்கள்.

## கும்பகோண நகரைச் சுற்றிய நூலக வண்டிகள்

மன்னார்குடி ராவ்சாகிப் எஸ். வி. கனகசபைப் பிள்ளை அவர்களின் இரட்டை மாட்டு வண்டியில் அமைக்கப்பெற்ற நடமாடும்



நூலகமும், தென்ஆர்க்காடு மாவட்டத்தில் இயங்கிய மிதிவண்டிச் சக்கரங்கள் பொருத்தித் தள்ளப்பட்ட நடமாடும் நூலகமும் பகல் நேரங்களில் கும்பகோணம் நகர மக்களைக் கவர்வதற்காகத் தெருக்கள்தோறும் கிராமபோன் கருவியின் இசையோடு ஊர்வலம் வந்தன.

இரவு நேரங்களில் கண்காட்சி மைதானத்தில் வண்டியில் பொருத்தியிருந்த திரைப்பட ஒளிவில்லைக் கருவியைப் பயன்படுத்தி மக்களுக்கு, வண்ணங்களோடு ஒளிவில்லைகள் காட்டப்பட்டன. இவை பெரும் திரளான மக்களை ஈர்த்தன. ஏனெனில் தமிழ்நாட்டில் முதல் பேசும் திரைப்படம் துவக்கப்பட்ட ஆண்டு 1931 ஆகும். 1933 ஆம் ஆண்டில் கருப்பு வெள்ளைப் படம் பார்த்த மக்களுக்கு வண்ணங்களோடு ஒளிவில்லைகள் இலவசமாக காட்டப்பட்டது ஒரு சிறப்பு.

## ஒளிமயமான 1933 ஆம் ஆண்டின் மகாமகக் கண்காட்சி

கும்பகோணம் நகரத்திற்குப் பிப்ரவரி 1932 இல்தான் முதன்முதலாக மின்விளக்குகள் பொருத்தப்பட்டன. ஒரு தனியார் நிறுவனம் மின்சாரத்தை உற்பத்தி செய்து நகரத்திற்கு வழங்கியது. 1933 ஆம் ஆண்டு மகாமகத் திருவிழா தலைத் தீப ஒளித் திருவிழாவாக மின்னியது.

## சிறப்புச் சொற்பொழிவுகள்

கும்பகோணம் அரசு கல்லூரி முதல்வர் திரு ஏ. சக்கரவர்த்தி அவர்கள் பொறுப்பேற்று அக்காலத்தில் சிறப்புடன் விளங்கிய அறிஞர் பெருமக்களின் சிறப்புச் சொற்பொழிவுகளை அமைத்தார்.

## இதர செய்திகள்

கல்கத்தா, மைசூர், பெஜவாடா போன்ற நகரங்களிலிருந்து பலர் வந்து கலந்து கொண்டனர்.

கண்காட்சியில் பொதுநூலகங்களின் தேவையை வலியுறுத்தி அறிக்கைகள் அச்சடிக்கப்பட்டு வழங்கப்பட்டன.

மகாமகம் முடிந்தபிறகு சில நாட்களில் கனத்த மழை பெய்தது. இருப்பினும் மக்கள் கண்காட்சிக்கு வந்தவண்ண மிருந்தனர்.

கண்காட்சிக்கூடத்தில் வைக்கப்பட்டிருந்த பார்வையாளர்கள் குறிப்பேட்டில் கையெழுத்திடப் பலர் பயந்து மறுத்தனர்.

1933ஆம் ஆண்டு மகாமகத் திருவிழாவில் நூலகக் கண்காட்சி நடத்த அமைப்பாளர்களுக்கு ஏற்பட்ட செலவு ரூ. 516ம் அணா 15ம் ஆகும்.

1992 ஆம் ஆண்டின் மகாமக ஆண்டு இந்திய நூலகவியல் தந்தை சீர்காழி ரங்கநாதன் அவர்களுக்கும், வரலாற்று அறிஞர் டி. வி. சதாசிவ பண்டாரத்தார் அவர்களுக்கும் நூற்றாண்டு விழா ஆண்டு என்பது குறிப்பிடத்தக்கது.

## கும்பகோணத் தலத்தொடர்பான தமிழ் இலக்கியங்கள்

1. திருக்குடந்தைப் புராணம்-மகாவித்வான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்கள் -2388 பாடல்
2. கும்பகோணப்புராணம்-அகோரமுனிவர் -1118 பாடல்
3. கும்பகோணப்புராணம்-சொக்கப்பநாவலர்? -1406 பாடல்
   அச்சாகவில்லை உ. வே. சா. நூலகச்சுவடி எண் 520
4. திருக்குடந்தை மான்மியம் - ஸ்ரீனிவாச அய்யங்கார்
5. மங்களாம்பிகை பிள்ளைத்தமிழ்- மகாவித்வான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்கள்
6. திருக்குடந்தைத்திரிபந்தாதி -மேற்படியார்
7. திருக்குடந்தைப் பதிற்றுப்பத்தந்தாதி குடந்தை கும்பநாதன் செட்டியார்
8. திருக்குடந்தைக் கலம்பகம் - எட்டிசேரி, தி. சங்குப்புலவர்
9. குடந்தை வெண்பா மாலை-பூ. முருகேச பண்டிதர்
10. கும்பேசர் குறவஞ்சி - பாபநாச முதலியார்
11. குடந்தை பெரியநாயகியம்மை பதிகம்- ரா. சபாபதி பிள்ளை



# தஞ்சைக்குத் தனிப்பெருமை சேர்க்கும் சரசுவதிமகால் நூலகம்

அ. பஞ்சநாதன் எம்.ஏ., எம்.எல்.ஐ.எஸ்.

திசைகளின் கவனத்தைத் தன்பால் திருப்பி ஈர்க்கின்ற சிறப்புடன் இலங்குகின்ற அருஞ்சுவடிக் களஞ்சியம் சரசுவதி மகால் நூலகமாகும்.

பல மொழிகளைச் சேர்ந்த ஆராய்ச்சி வல்லுநர்களும், பல மாநிலங்கள் - தேசங்களை - சேர்ந்த சுற்றுலாப் பயணிகளும், வாசக அன்பர்களும் மட்டற்ற ஆர்வத்துடன் கண்டு மகிழ்ந்து பயன் மொண்டு செல்கின்ற திருத்தலமாகவே திகழ்கின்றது சரசுவதி மகால் நூலகம்.

மராட்டிய மாமன்னர் சரபோஜி அவர்களால் முழுக்கவனம் செலுத்தப்பெற்று முன்னேற்றங் கண்ட சரசுவதி மகால் நூலகம் மராட்டிய; நாயக்க மன்னர்களின் காலத்திற்கு முன்பே உருப்பெற்ற தொன்மையை உடையது என்பது பலரும் அறியாத ஓர் உண்மையாகும்.

தமிழ்நாட்டுத் திருக்கோயில்களிலும் அரண்மனைகளிலும் "சரஸ்வதி பண்டாரகம்" என்னும் பெயரில் சுவடி நூல்கள் திரட்டப்பெற்று நூலகங்கள் இயங்கிவந்தன என்பது வரலாறு. தஞ்சைப் பகுதிகளில் நாயக்கருக்கு முன்னிருந்த சோழர் ஆட்சிக்காலத்திலேயே இந் நூலகம் 'சரஸ்வதி பண்டாரக'மாக இருந்தமையை அறிஞர் பெருமக்கள் எடுத்துக் கூறியுள்ளனர்.

சுவடி நூலகமாகவும் புத்தக நூலகமாகவும் விளங்கும் இந்நூலகம் இந்திய ஒருமைப்பாட்டுக்கு ஓர் எடுத்துக்காட்டு ஆகும். தமிழ், மராத்தி, சமஸ்கிருதம், தெலுங்கு முதலிய மொழிகளைச் சார்ந்த ஓலைச்சுவடிகளும், காகிதச் சுவடிகளும் ஏராளமாக இங்கே பாதுகாக்கப்பெற்று வருகின்றன. தமிழ்த்துறை, மராத்தித்துறை, சமஸ்கிருதத்துறை, தெலுங்குத்துறை ஆகியன இந் நூலகத்தை அணிசெய்து வருகின்றன.

சோழர் காலத்தில் இருந்தும், நாயக்கர் காலத்தில் (1532-1674) வளர்ந்தும் வந்த இந் நூலகம் மாமன்னர் சரபோஜியின் தனித்த அக்கறையாலும் ஆர்வத்தாலும் பெருவளர்ச்சி பெற்றது; உலகப்புகழ் உற்றது. பல மொழிகளைச் சார்ந்த எண்ணற்ற ஓலைச்சுவடிகளையும் காகிதச்சுவடிகளையும் பிரதிசெய்வித்தும், புதிதாக இலக்கியங்களையும் மருத்துவ நூல்களையும் எழுதுவித்தும், பல்வேறு இடங்களிலிருந்து சுவடிகளைச் சேகரித்தும் மாமன்னர் சரபோஜி இந் நூலகத்தை விரிவு படுத்தி நமக்கு விட்டுச் சென்றுள்ளார். இந்திய நூல்கள் மட்டுமல்லாமல் ஆங்கில, பிரெஞ்சு, இலத்தீன் மொழிகளைச் சேர்ந்த அச்சு நூல்களையும் மாமன்னர் சரபோஜி வாங்கிச்



சேகரித்து இந் நூலகத்தை எழில்பெறச் செய்துள்ளார்.

## நூலகத்தில் இடம்பெற்றுள்ள சுவடிகள்

தமிழ், சமஸ்கிருதம், மராத்தி, தெலுங்கு முதலிய பல்வேறு மொழிகளிலுள்ள பனையோலை, காகிதச் சுவடிகள் இந் நூலகத்திலுள்ள அகன்ற உயரமான மரப்பேழைகளுள் தனித்தனியே வைத்துப் பாதுகாக்கப்பட்டு வருகின்றன.

பனை ஓலைச்சுவடிகள் 19,155ம் தாள் சுவடிகள் 17,768ம் சமஸ்கிருதப் பிரிவில் இடம்பெற்றுள்ளன. 3,322 ஓலைச்சுவடிகள் தமிழ்ப்பிரிவில் இடம் பெற்றுள்ளன. 766 ஓலைச்சுவடிகள் தெலுங்குப் பிரிவில் உள்ளன. இவற்றைத்தவிர 3,060 காகிதச் சுவடிகளும் இங்கு இடம்பெற்றுள்ளன. மேலும் மராட்டிய அரசர்களின் நடைமுறைகளை மோடி எழுத்தால் எழுதப்பட்ட 850 கட்டுகளும் இந் நூலகத்தில் உள்ளன. தஞ்சை அரண்மனையில் இருந்த சமஸ்கிருதச் சுவடிகட்கு டாக்டர் ஏ. சி. பர்னல் அவர்கள் பட்டியல் ஒன்றை மூன்று பகுதிகளாகத் தயாரித்து வெளியிட்டுள்ளார் என்பது சுட்டத்தக்கது. இந் நூலகத்தின் ஓலைச்சுவடிகளில் இடம்பெற்றுள்ள அரிய, சிறந்த இலக்கியங்களும் மருத்துவ நூல்களும் தகுந்த பதிப்பாசிரியர்களைக்கொண்டும் நூலகப் பண்டிதர்களைக் கொண்டும் பதிப்பித்து வெளியிடப்படுகின்றன. இதற்கான நிதிஉதவியை நடுவண் அரசு நல்கிவருகின்றது.

## அச்சுநூற் பிரிவு

இந் நூலகத்தில் 37, 000 க்கும் மேற்பட்ட அச்சிட்ட நூல்கள் இடம்பெற்றுள்ளன. மன்னர் இரண்டாம் சரபோஜி திரட்டிய 4218 புத்தகங்களும் இவற்றுள் அடங்கும். தமிழ், ஆங்கிலம், சமஸ்கிருதம், தெலுங்கு, மராத்தி, இந்தி, பிரெஞ்சு, இலத்தீன் நூல்கள் இந் நூலகத்தில் இடம்பெற்றுள்ளன.

இந் நூலகத்தில் உள்ள சுவடிகளும், புத்தகங்களும் இரசாயனமுறையில் பாதுகாக்கப் படுகின்றன. அரிய சுவடிகளும் நூல்களும் நுண்படமெடுக்கப்பட்டும் நகலெடுக்கப்பட்டும் பாதுகாக்கப்படுகின்றன. இந் நூலகத்திலேயே அச்சகம் ஒன்றும் உள்ளது.

## சரசுவதிமகால் நூலக அருங் காட்சியகம்

சுற்றுலாப் பயணிகளையும், கலை ஆர்வலர்களையும் ஈர்க்கும் சிறப்புமிக்க அருங்காட்சியகம் ஒன்றும் இந் நூலகத்தில் அமைந்துள்ளது. இவ் வருங்காட்சியகத்தில் அழகிய வண்ண ஓவியங்கள், தொன்மைவாய்ந்த சுவடிகள், மராட்டிய மன்னர்கள் பயன்படுத்திய வாள், துப்பாக்கி, பல்லக்கு முதலிய பொருட்கள் ஆகியன பார்வைக்கு வைக்கப்பெற்றுள்ளன. தஞ்சாவூர் ஓவிய மரபில் வரையப்பெற்ற சரசுவதி ஓவியம், சமர்த்த இராமதாசர் ஓவியம் ஆதிசங்கரர் ஓவியம் ஆகியன தனிச் சிறப்பானவை. சித்திரங்கள் இடம்பெற்ற ஓலைச் சுவடிகளும் காகிதச்சுவடிகளும் காண்போரைக் கவரும் திறத்தன. கங்கையில் உள்ள 64 நீராடும் துறைகளைக் காட்சிப்படுத்தும் ஓவியமும் சார்லஸ்-லி-புரஸ்-ன் மனித விலங்கு ஒப்புமைப் படங்களும் சித்திர ராமாயணமும், கஜசாத்திர அசுவசாத்திரப் படங்களும் காணும் உள்ளங் களைக் களிக்கவும் வியக்கவும் செய்வனவாகத் திகழ்கின்றன.







# புதிய பார்வையில் சார்ங்கபாணி கோயிற் கரணங்கள்

டாக்டர் இரா. கலைக்கோவன்

குடந்தையில் கண்பட்ட இடமெல்லாம் கலைக்கோயில்கள்தான். சோழர்களும், நாயக்கர்களும் இங்குச் செதுக்கி வைத்திருக்கும் கலையழகுகளை அளவிட்டு எழுத அந்த மயனே வந்தாலும் முடியாது. எத்தனைக் கோலங்கள்! எத்தனைக் காட்சிகள்! இவற்றின் அனைத்துப் பரிமாணங்களையும் பறவைப் பார்வையில் பார்ப்பதுகூடக் கடினமென்ற நிலையில் ஒரு துளி அமுதாய் ஒரு கோயில் சிற்பங்களில் ஒரு தொடரைப் பார்த்து மகிழ்வோம்.

குடந்தைநகரில் நடுநாயகமாய்ச் சோமேசுவரருக்கு இடப்புறத்தே மிக உயர்ந்த கோபுரத்துடன் வரவேற்பவர் சார்ங்கபாணி. புராணக் கதைகளின் படக்காட்சிகளாய்க் கோபுர அடுக்குகளில் வண்ணப் பூச்சு வேடம்போட்ட மண்ணீடுகள். காதலில் தொடங்கிக் கடவுளில் முடியும் வரிசை வடிவங்கள். நான்கு திக்குகளிலும் அடித்தள உச்சியில் கபோதப் பாதுகாப்பில் ஆடிக்காட்டும் இந்த அழகுக் கோலங்கள் பரதர் காட்டிய இலக்கண வரிகளின் இலக்கிய எழுச்சிகள்.

தஞ்சை, தில்லை, திருவண்ணாமலை, விருத்தாசலம் என்ற நான்கு பெரும் கோயில்களிலும் கரண வரிசைகளைக் காணமுடிந்தாலும் அங்கெல்லாம் இல்லாத சிறப்புகள் பல இங்குண்டு. தஞ்சையில் விமான உட்சுவரில் சிவபெருமான் ஆட, மற்ற மூன்று கோயில்களிலும் கோபுர உட்சுவரில் மகளிரின் கரணம். இங்கோ, அழகாய்ப் புனைந்து, அபிநயம் காட்டிக் கரணம் நிகழ்த்துபவர் ஆடவர். இவரைச் சிவபெருமான் என்றும், கண்ணபெருமான் என்றும் அறிஞர்கள் சிலர் அடையாளம் காட்டுகின்றனர். இதன் உண்மையை அறியும்முன், சார்ங்கபாணி கோயிற் கரணங்களை அறிமுகப்படுத்திக் கொள்வோம்.

கோபுரத் தாங்குதளம் கபோத பந்த அதிட்டான வகையைச் சேர்ந்தது. துணைத் தளங்களின்மேல் எழுந்துநிற்கும் இத் தாங்குதளப் பட்டிகைக்கு மேலாக அரைத்தூண்களுக்கு இடையில் அழகாய்ப் பதிக்கப்பட்டுள்ள கரணச் சிற்பங்கள் இக் கோயிலைச் சேர்ந்தவையல்ல. அழிந்து போன கோயிலொன்றின் கலை வரலாற்று எச்சங்களாய்க் கோபுரக் கட்டுமானப் பணியின்போது பயன்படுத்திக் கொள்ளப்பட்டவை. பதிக்கப்பட்டுள்ள முறையும், எண் வரிசைகள் மாறுபட்டிருக்கும் விதமும், சிற்ப அமைப்பும், அவற்றின் கீழிருக்கும் கிரந்த எழுத்தமைப்பின் காலமும், இவற்றுள் சிதறிய இரண்டு சிற்பங்கள் கும்பேசுவரர் கோயிலில் காணப்படும் அதிசயமும் இந்தக் கருத்துக்கு வலிவூட்டும் சான்றுகள். கோபுரக் கட்டுமானக் கலைமுறையில் இருந்து பெரிதும் மாறுபட்டிருக்கும் இக் கரணச் சிற்பங்கள் முதலாம் இராசராசன் காலத்திற்கோ அல்லது அவருக்குச் சற்று பிற்பட்ட காலத்திற்கோ உரியவை என்பதை இவற்றின் சிற்ப அமைதியில் இருந்தும் இவற்றின் கீழுள்ள கிரந்தக்





கல்வெட்டுகளின் எழுத்தமைப்பில் இருந்தும் தெளிவாய் உணரலாம்.

இக் கோபுரத்தின் துணைத் தளத்திலும், மடைப்பள்ளிச் சுவரிலும் காணப்படும் துணுக்குக் கல்வெட்டுகள் இச் சிற்பங்கள் எங்கிருந்து வந்திருக்கலாம் என்ற ஊகத்திற்கு விதைபோடுகின்றன என்றாலும், இவை திரிபுவன வீரதேவனாம் மூன்றாம் குலோத்துங்கனின் கல்வெட்டுகளாக இருப்பதால், சில அறிஞர்கள் இவற்றின் துணைகொண்டு இச் சிற்பங்களைச் சோழப் பேரரசின் சரிவுக் காலத்திற்குத் தள்ளிப் போடுவது பொருத்தமாகத் தோன்றவில்லை.

கோபுரத்தின் நான்கு திசைகளிலும் இக் கரணச் சிற்பங்கள் பதிக்கப் பெற்றுள்ளன. கோபுரத்தின் வட தென் பகுதிகள் மதில்சுவரால் இரண்டு பகுதிகளாகப் பிரிக்கட்டுள்ளன. கிழக்குப் பட்டிகைக்குமேல் நாற்பத்து நான்கு சிற்பங்களும், மேற்குப் பட்டிகைக்குமேல் முப்பத்தெட்டு சிற்பங்களும் உள்ளன. தெற்கில் மதில் சுவருக்குக் கிழக்கே ஐந்து சிற்பங்களும் மேற்கில் பத்து சிற்பங்களும் இருக்க, வடக்கில் மதில் சுவருக்குக் கிழக்கே ஒன்பது சிற்பங்கள் உள்ளன. வடமேற்குப் பகுதி சிற்பங்கள் இன்றி வெறுமையாக உள்ளது. இந்த நூற்று ஆறு சிற்பங்களுள் ஐந்து சிற்பங்கள் தவிர பிற கரணச் சிற்பங்களாகவே தோன்றுகின்றன. சிவபெருமானின் ஊர்த்வ தாண்டவம், காளியின் தாண்டவம், ருத்ர தாரணம், தனிப்பூதம், ஒரு முதியவரும் இரண்டு இளைஞர்களுமாய் நிற்கும் தொகுதி என்னும் இந்த ஐந்து சிற்பங்களுள் இரண்டு கிழக்கிலும், இரண்டு மேற்கிலும், ஒன்று தென்கிழக்கிலும் உள்ளன. இவை தவிர்ந்த ஏனைய நூற்றொரு சிற்பங்களுள் 96 சிற்பங்களையே கரண வகையின என்று டாக்டர் கபில வாத்ஸ்யாயனும், திரு. சிவராமமூர்த்தியும் தத்தம் நூல்களில் குறிப்பிட்டுள்ளனர். பிற ஐந்து சிற்பங்களை ஏன் கரண வகையினவாய் இவர்கள் கொள்ளவில்லை என்பதற்கு இரண்டு அறிஞர்களுமே காரணங்கள் தரவில்லை.

இந்தச் சிற்பங்க்ளுள் நான்கு தவிர ஏனைய நூற்றிரண்டும் தனித்தனிப் பலகைகளில் செதுக்கப்பட்டுள்ளன. இப்படித் தனித்தனியாக செதுக்கப் பட்டவை சார்ங்கபாணி கோபுரத்தில் பதிக்கப்பெற்றபோது தனித்தும், சேர்த்தும் பொருத்தப்பட்டுள்ளன. நாற்பத்தைந்து



சிற்பங்கள் தனித்தும், முப்பது சிற்பங்கள் இரண்டிரண்டாகவும், இருபத்தேழு சிற்பங்கள் மும்மூன்றாகவும் பதிக்கப் பட்டுள்ளன. இவை தவிர்ந்த நான்கு சிற்பங்கள், செதுக்கப்பட்ட காலத்திலேயே இரண்டிரண்டாக இரண்டு தனிக் கற்பலகைகளில் செதுக்கப்பட்டுள்ளன. இந்த நூற்றி ஆறு சிற்பங்களுள் எட்டு மட்டுமே சிதைந்துள்ளன. ஆனால் கரணத்தைக் குறிக்கும் கிரந்தக்கல்வெட்டு பல சிற்பங்களின் கீழ் அழிந்துள்ளது. இச்சிற்பங்களுள் ஒவ்வொன்றும் சராசரியாக 43.50 செமீ. அகலமும், 44 – 45 செ. மீ. உயரமும் உள்ளவை.

ஆடல்மேடை யொன்றில் ஆடல் நிகழ்வது போலவே சிற்பம் வடிக்கப்பட்டுள்ளது. ஆடுபவரின் பின்புறம், அரங்கத்தின் பின்திரையாய், சிற்பம் வடிக்கப்பட்ட பலகை இருக்க, அதன் மேற்புறம், திரையின் மேல்வளைவுகளாய். அலங்காரிக்கப்பட்டுள்ளது. பூச்சரங்கள் தொங்கும் மடிப்புகள் போல இந்த வளைவுகள் அழகுபடுத்தப்பட்டுள்ளன.



ஆடலுக்குத் தேவையான இசையைத் தர பெரும்பாலான சிற்பங்களுடன் இரண்டு இசைவல்லாரும், சில சிற்பங்களுடன் ஓர் இசைவல்லாரும் காட்டப்பட்டுள்ளனர். பதினொரு சிற்பங்களுக்கே இசைகூட்ட யாருமில்லாத நிலை. இந்த இசைவாணர்கள் குள்ளச் சிறு பூதகணங்களாய்க் காட்டப்பட்டுள்ளனர். நான்கு இடங்களில் வேறுபட்ட வடிவங்களைப் பார்க்க முடிகிறது. நந்திகேசுவரரும், சிங்கமுகக் கணமொன்றும் வடமேற்கில் விளங்க, குரங்கு முகக் கணமொன்றும், சிங்கமுகக் கணமொன்றும் கிழக்கில் காணப்படுகின்றன.

இசைவாணர்கள் பொதுவாகப் பருத்த வயிறும், பிதுங்கிய விழிகளுமாய்ப் பனையோலைக் குண்டலங்களுடன் காட்டப்பட்டுள்ளனர். அரையாடை அனைவர்க்கும் உள்ளது. பெரும்பாலோர் நின்ற வண்ணமிருக்க, ஒரு சிலர் சாய்ந்தும், சரிந்தும், குனிந்தும், வளைந்தும் இசையெழுப்பக் காணலாம். மிகச்சிலர் இளைத்த வடிவினராய்ச் சிறுபிள்ளைகள் போல் காட்சிதருகின்றனர். பதித்தலில் நேர்ந்த தவறால் சில வடிவங்கள் சிதைந்து போயுள்ளன; சடாபாரம், சடாமண்டலம், சடாமகுடம் எனப் பல்வகைத் தலையமைப்புகள். ஒரு சில கணங்கள் ஆடுபவரைவிட அதிகமான மெய்ப் பாடுகளைக் காட்டி நம்மை மயக்கத்தில் ஆழ்த்துகின்றன.



குறைந்த அணிகளும், உதர பந்தமும் சில வடிவங்களுக்கு உள்ளன. வடகிழக்குப் பூதமொன்று சன்னவீரத்தோடு புன்னகைபுரிய, அதே திசையிலுள்ள மற்றொன்று முப்புரிநூலோடு மகிழ்ந்து நிற்கிறது.

மேற்கில் நுழைவாசலுக்கு அருகில் தனிப் பூதகணமொன்று காட்டப்பட்டுள்ளது. கைகளில் செண்டு தாளம். யாருக்கு வாசிக்கிறது என்பது நமக்குப் புரிந்தாலும் தனிப் பலகையில், தனித்ததொரு சிற்பமாய் இடம்பெற இப் பூதகணம் செய்த பேறுதான் நமக்கு விளங்கவில்லை. ஆனால் அதன் அழகைப் பார்க்கும்போது, அதுவும் காலை வெயிலின் கதிர்கள் பட்டு, அது மின்னும் போது, அதன் தனித்துவம் உள்ளங்கைக் கனியாய் உள்ளத்தில் பதிகிறது. எத்தனை அழகாய் உதடுகள்! எத்தனை இதமான சிரிப்பு! கால்களின் வளைவுகளில் எனக்கும் ஆடத்தெரியும் என்ற அறிவிப்பு! கன்னக் கதுப்புகள் கடித்து விடலாமா என்று துடிக்க வைக்கின்றன. பூத கணத்தைக் கூட இத்தனை அழகாய் ஒருவர் வடிக்க முடியுமா? கழுகுமலைக் கணங்களையும், காஞ்சி கயிலாசநாதர் கணங்களையும் சிற்பச் செறிவில் போட்டிக்கு அழைக்கும் பொல்லாத செல்லக்கணம் இது!

இந்த இசைவாணர்களுள் பெரும்பாலோர் வகைவகையான முழவுகள் இடக்கை போன்ற தோற்கருவிகளையும், பல்வகைத் தாளங்களையும் இயக்கி ஆடலுக்குத் தாளம் தர, ஒரு சிலர் வீணையும் சங்கும் கொண்டு இசையெழுப்புகின்றனர். வீணையேந்திய ஐவருள், நால்வர் வலப்புற இசைவாணர்களாகவும் ஒருவர் மட்டும் இடப்புற இசைவாணராகவும் இருக்க, நந்திகேசுவரர் ஐமுகக் குடமுழவை நின்றபடி இயக்கி மகிழ்கிறார். மற்றோர் இடத்தில் புல்லாங்குழலின் நாதவெள்ளம்! கிழக்கிலோ கணமொன்று தன் வடிவத்தை மீறிய மிகநீள முழவை, மிக எளிதாய்த் தாங்கி, மிக நயமாய் இயக்கிக் காட்டுகிறது. இந்த முழவின் நீளம் எட்டு சென்டி மீட்டர். இத்தனைக் கனமான கருவியிருந்தும் இதன் முகத்தில்தான் எத்தனை



மகிழ் வுணர்வு! எத்தனை லயிப்பு, வியப்பு! அப்பப்பா! இந்தச் சோழச் சிற்பிகளுக்குத்தான் எத்தனைக் கலைநோக்கு! ஒரு சில இசைவாணர்கள் இந்நாளைய இசைஇயக்குநர்கள் போலக் கருவிகள் இன்றிக் கைகளை வெறுமனே உயர்த்திப் போற்றி மெய்ப்பாட்டில், இசை இயக்கம் செய்து காட்டுகின்றனர்.

நான்கு சிற்பங்களில் மேகக் கூட்டம் காட்டப்பட்டுள்ளது. இவற்றுள் இரண்டு கரணச் சிற்பங்கள். இரண்டிலும் கிடந்த கோலக் கரணங்கள் காட்டப்பட்டுள்ளன. ஒன்றைக் கல்வெட்டு மயூரலலிதமென்கிறது. மேற்குக் கரணத்தில் கல்வெட்டு சிதைந்துள்ளது. 'சூத்ர' என்பதை மட்டுமே படிக்க முடிகிறது. மேகக் கூட்டம் காட்டப்பட்டுள்ள ஏனைய இரண்டு சிற்பங்கள் சிவ, காளி தாண்டவங்களாகும். இந்த மேக வடிப்பு ராஜராஜீசுவரத்து ஓவியக் காட்சியைக் கண்முன் நிறுத்துவதும் இவற்றின் காலத்தை நிர்ணயிக்க உதவுகிறது.

கரணம் காட்டும் ஆடவர் வடிவத்தின் உயரம் பெரும்பாலும் அனைத்துச் சிற்பங்களிலும் 39 - 41 செ. மீ. அளவுக்குள் அமைந்துள்ளது. சடா மகுடத்துடன் காணப்படும் இந்தக் கரணரை மகுடப் பூரிமம், மகர குண்டலங்கள், வாகுவளையம், கண்டிகை, சரப்பளி, வீரச்சங்கிலி, தோள்வளை, கைவளைகள், சிங்கமுக அரைக்கச்சு, குறங்குசெறி, தாள் செறி, நூபுரம், சிலம்பு, வீரக்கழல் எனப் பட்டியலாய் நீளும் அணிகளுள் பெரும்பான்மையானவை அழகு செய்கின்றன. வீரச்சங்கிலி ஒன்றையொன்று எதிர் கொள்ளும் இடத்தில் முதுகுப்புறத்தே அமையும் தூக்கம் என்னும் பதக்க வடிவம் சில சிற்பங்களில் மிக அழகாகக் காட்டப்பட்டுள்ளது. சில கரணர்கள் உதரபந்தம் கொண்டிருக்க, ஒரே ஒரு கரணர் மட்டும் முப்புரிநூலராய்க் காட்சி தருகிறார். இவர் வடகிழக்கில் வாசம் செய்கிறார். சில கரணர்கள் மாலையுடன் காட்சி யளிக்கின்றனர். இம் மாலைகள் மேலிருந்து கீழாகஅளவில் பருத்துள்ளன. ஆடுபவரின் கரண அசைவுகளுக்கேற்பச் சரிந்தும், பறந்தும் காணப்படும் இம் மாலைகள் பெருமாளின் வனமாலையை நினைவூட்டுகின்றன.

இரு பிரிவுகளாய் மகுடத்தின் கீழ்ப் பிரிந்து தோள்களைத் தழுவிப் பக்கவாட்டில் கைப்புறத்தே சரிந்து தொங்கும் ஸ்கந்த மாலையின் அழகு சில சிற்பங்களில் கண்கொள்ளாக் காட்சியாய் அமைந்துள்ளது. இந்த மாலைச் சரிவுகளில் பல்வேறு பூக்களைத் தொடுத்தும், பொருத்தியும் சிற்பிகள் கூட்டியுள்ள அழகுப் பொலிவு சொல்லுந்தரமன்று. பார்வையுள்ளோர்



பார்த்துப் பார்த்துப் பூரிக்க வேண்டிய நுணுக்கமான அழகுகள் இவை. ஆடலுக்கேற்ப இந்த ஸ்கந்த மாலைகளும் அங்குமிங்குமாய் அலைபாய்ந்து சுழலும் கலைச் சிறப்பு சோழச் சிற்பிகளின் திறன் காட்டி நிற்கின்றது.

இந்தக் கரணச் சிற்பங்களின் இடையாடை மிகுந்த கலைநயத்தோடு செதுக்கப்பட்டுள்ளது. பக்கவாட்டு முடிச்சுகள் சோழர் கலைமுறைக்கே உரிய நளினச் செறிவுடன் காட்டப்பட, இடைத் தொங்கல்கள் பூவிரியாய் இறங்கி ஆடுவார் தம் அழகுக்கு அழகூட்டி, அசையும் பாங்கில் ஆட்ட விரைவையும் எடுத்துரைக்கின்றன.

கரணங்களில் முக்கியமானவை மூன்று. ஒன்று காலசைவு. மற்றொன்று கையசைவு. மூன்றாவது உடல் நிலை. காலசைவை நாட்டியசாத்திரம் சாரி என்றும் கையசைவை நிருத்தக்கை என்றும், உடல் நிலையை ஸ்தானம் என்றும் வகைப்படுத்தும். பரதரின் அட்டவணைப்படி கால் நிலைகள் விண்கால்கள்,



மண் கால்கள் எனப் பிரியும். மண்ணில் படிய அமையும் கால்கள் மண் கால்கள். மண்ணில் படாது அமைபவை விண்கால்கள். சார்ங்கபாணி கோயிற் சிற்பங்களின் பார்வையாளர் தொகுதி, மற்றும் தனிப் பூதகணம் தவிர்த்த ஏனைய நூற்றுநான்கில் அறுபத்தெட்டு மண்கால்கள் காட்ட, முப்பத்தாறு விண்கால்கள் காட்டுகின்றன. பெரும்பாலான சிற்பங்கள் முன்புறம் காட்டிக் கரணம் நிகழ்த்த சில பக்கவாட்டைக் காட்டியும், சில பின்புறம் திரும்பியும் கரணம் செய்கின்றன. நிருத்தக்கைகளும், உடல்நிலைகளும் பல சிற்பங்களில் கரண இலக்கணங்களுக்கேற்ப அமைக்கப் பட்டுள்ளன. பொதுவான உடல்நிலையாக மண்டலம் கையாளப்பட்டுள்ளது.

இந்தக் கரணச் சிற்பங்கள் மிக அற்புதமாக வடிக்கப்பட்டுள்ளன. ஒவ்வொன்றின் முகமும் உணர்வலைகள் மோதும் கடற்கரையாய்க்



காட்டப் பட்டுள்ளது. புன்னகை மாறாத இளம் உதடுகள், உருண்டை முகம், எடுப்பான நாசி, வில்லைப்போல் புருவங்கள், அழகாய்க் கண்கள்; திரண்ட தோள்கள், பரந்த மார்பு, சரியான அளவில் இடையும், பின்புறமும், ஆடலில் உரமேறிய கால்கள் என, அழகாய் அமையாத உடற்பகுதியே இல்லை என்னுமளவுக்குத் தேர்ந்த சிற்பிகளால் இவ்வடிவங்கள் தெரிந்து செய்யப் பட்டுள்ளன. சூசி, அக்ரதல சஞ்சாரம், அஞ்சிதம், உத்கட்டிதம், குஞ்சிதம் போன்ற பாத அமைப்புகள் இச் சிற்பங்களில் காட்டப்பட்டிருப்பதுபோல் தஞ்சையிலோ, தில்லையிலோகூடக் காட்டப் படவில்லை என்றால் அது மிகையாகாது. தமிழகத்தில் உள்ள ஐந்து கரணக் கோயில்களில் அழகு, அங்கசுத்தம், கரணக்கோலம் இவற்றைக் கொண்டு பார்த்தால் சார்ங்கபாணி கோயிற் சிற்பங்களுக்கே முதலிடம் தரவேண்டி யிருக்கும். இலக்கண வழுக்கல்கள் ஆங்காங்கே இல்லாமல் இல்லையென்றாலும் சிற்பச் செறிவில் சார்ங்கபாணிக்கு இணை சார்ங்கபாணிதான்.

இங்குள்ள சிவபெருமானின் ஊர்த்வ தாண்டவச் சிற்பம் தன்னிகரில்லாத கலைப்புதையலாகும். இதை லலாட திலகமென்று சில அறிஞர்களும், காளிகா ஊர்த்வ தாண்டவமென்று டாக்டர் பத்மா சுப்பிரமணியமும் தத்தம் நூல்களில் குறித்துள்ளனர். பதினெட்டுக் கைகளுடன் ஊர்த்வ தாண்டவமாடும் சிவபெருமானை வலப்புறத்தே விஷ்ணுவும் நான்முகனும் வணங்கி வழிபடுகின்றனர். மேற்புறத்தே மேகக் கூட்டங்களிடையே கந்தர்வ வணக்கம். கீழே வலப்புறம், அமர்ந்த நிலையில், கால்களால் அணைத்த ஐமுகக் குடமுழவொன்றை முன்னிரண்டு கைகளால் இயக்கியபடியே, பின்னிரண்டு கைகளால் ஆடலைப் போற்றி மகிழ்கிறது, அழகு கொஞ்சும் முகத்தோடு கூடிய ஆடவர் வடிவமொன்று. இந்த முப்புர வாசிக்கு எதிரே ஊர்த்வருக்கு இடப்புறம் பின் கைகள் போற்ற முன் கைகளால் செண்டு தாளம் இசைக்கப் பூதகணம். சிவபெருமான் வலக்காலைத் தோளுக்குப் பக்கவாட்டில் வலமேற்கைக்கு முன்புறத்தே, புறங்கால் முகம்



நோக்கியிருப்பது போல் மேலே உயர்த்தி, இடப் பாதத்தைப் பார்சுவத்தில் வைத்து ஊர்த்வ தாண்டவராய்க் காட்சியளிக்கிறார்.

வலப்புறக் கைகளுள் முன்கை காப்பு முத்திரை காட்டுகிறது. பின்கைகள் கீழிருந்து மேலாகக் கடகம், சூசி முத்திரை காட்டி, கேடயம், ஈட்டி, சிறு முத்தலை ஈட்டி, மழு, உலக்கை, பெரு முத்தலை ஈட்டி ஆகிய கருவிகளைக் கொண்டு அமைந்துள்ளன. இட முன்கை மேல் நோக்கி உயர்த்தித் திருப்பிய பதாகத்தில் கூரையைத் தாங்குவது போல் காட்டப்பட்டுள்ளது. பிற இடக்கைகளுள் மூன்று கடகம், சூசி, வியப்பு காட்டி, இரண்டில் மணியும் பாசமும் உள்ளன. ஒரு கை அர்த்தரேசிதமாய் நீண்டுள்ளது. இரண்டு கைகளில் உள்ள கருவிகளை அடையாளம் காண்பது எளிதாக இல்லை. கண்டிகை, சரப்பளி, வீரக்கழல், பாடகம், சதங்கை என அணிவகைகள் மிளிர, எழிலார்ந்த ஆடைத்தொங்கல்களும் பக்கவாட்டு முடிச்சுகளும் பெருமானின் அழகுக்கு அழகு சேர்க்கின்றன.

இந்தக் கரணச் சிற்பங்களுள் சிலவற்றின் பக்கத்தில் உள்ள அரைத் தூண்கள் சற்றே பெரிய அளவினவாய் அமைந்து, சிற்பிகள் தம் கைவண்ணம் காட்டிட இடம்தந்துள்ளன சிவபெருமானின் பல்வேறு தோற்றங்களே பெரும்பாலான தூண்களில் இடம் பெற்றுள்ளன. பிச்சையேற்கும் பெம்மான், உமையை அணைத்தவர், உமாசிவர், ஆலமர் அண்ணல், நந்தி அண்மையர், யானையை அழித்தவர், கிராதார்ச்சுனர் எனப் பல தோற்றங்கள். பிச்சையேற்றவர் கோலமும், வீராசன ஆலமர்க் கோலமும் கண்ணில் நிற்கும் கவிதைகள். சில தூண்கள் ஆடற்சிற்பங்களைக் கொண்டுள்ளன. ஒரு தூணில் யானையொன்றின் மீது சிங்கம் பாய்ந்து கடித்துக் குதறும் காட்டுக் காட்சி. இந்தச் சிங்கத்தின் தோற்றம் தஞ்சை ராஜராஜீசுவரத்து இராசராசன் திருவாசலின் கிழக்கு முகச் சிற்பத் தொகுதியிலுள்ள சிங்கத்தின் தோற்றத்தை ஒத்திருப்பது குறிப்பிடத்தக்கது. பிள்ளையாரும் யானைத்திருமகளும் கூடத் தூண் சிற்பங்களாய் இடம் பெற்றுள்ளனர்.

சிற்ப அமைப்புமுறை, இலக்கணக் கோட்பாட்டை அதிகம் மீறாத ஆடல் அசைவுகள், மெய்ப்பாட்டு முத்தாய்ப்பாய் முகத்தோற்றங்கள் என்ற இம் மூன்று சிறப்புகளாலும் சார்ங்கபாணி கோயிற் கரணச் சிற்பங்கள், இதுவரை அடையாளம் காணப்பட்டுள்ள கரண வரிசைச் சிற்பத் தொகுதிகளில் முதலிடத்தைப் பெறுகின்றன. இதைவிடப் பெரும் சிறப்பு இங்கு ஆடல் நிகழ்த்துபவராலும், அதைக் கண்டு நிற்பவராலும் இக் கரணவரிசைக்குக் கிடைத்துள்ளது.

சிவராமமூர்த்தி நடராசரைப் பற்றிய தன்னுடைய மிகப்பெரும் நூலில் சார்ங்கபாணி கரணங்களைக் கண்ணன் நிகழ்த்துவதாக எழுதி தம் கூற்றுக்குச் சான்றாகச் சிற்பங்களில் காணப்படும் வனமாலை போன்ற மாலையையும், மார்பணி ஒன்றையும் சுட்டுகிறார். இந்த மார்பணியை அவர் சுவர்ண வைகாக்ஷம் என்று குறிப்பிட்டு, இது இளவயதியனர் அணி என்றும் இது பாலசுப்ரமணியர், கிருஷ்ணர் படிமங்களில் அதிகம் காணப்படுவது என்றும் கூறுகிறார். வைகாக்ஷம் என்பதற்குத் திரு.மோனியர் வில்லியம்ஸ் தோளிலிருந்து தொங்கவிடப்படும் ஒரு மாலை என்று பொருள் தருகிறார். திருசிவராமமூர்த்தி சுட்டும் மார்பணி உண்மையில் சன்னவீரமாகும். இதை ஏன் அவர் வைகாக்ஷமாகக் கொண்டார் என்பது புரியவில்லை. இங்கு ஆடும் வடிவங்களுள் பெரும்பான்மையான இந்த மார்பணியை அணிந்துள்ளன. இதன் அமைப்பு திருவைகணபதி ஸ்தபதி தன் சிற்பச் செந்நூலில் விளக்கும் சன்னவீரத்தோடு மிகப் பொருந்துகிறது. சன்னவீரம் வீரத்தின் அடையாள அணியாகும். இதை இந்தக் கரணச் சிற்பங்கள் பெற்றிருப்பது முற்றிலும் பொருத்தமேயாகும். தாண்டவத்தில் இரண்டு பிரயோகங்களைக் குறிப்பதுண்டு. ஒன்று உத்ததப் பிரயோகம். இது சிவபெருமானுக்குரியது. மற்றொன்று சுகுமாரப் பிரயோகம். இது பார்வதிக்குரியது. சிவபெருமானுக்குரிய உத்ததப் பிரயோகம் வலிமை நிறைந்தது; சக்தி வாய்ந்த வீச்சுக்களோடு கூடியது. இதை நிகழ்த்திக் காட்டுபவர் சன்னவீரத்தை ஓர் அணியாகக் கொள்வது இயல்பானதே.

இங்குள்ள நூற்றியொரு கரணச்

சிற்பங்களுள் இருபது வடிவங்களில் மட்டுமே திரு.சிவராமமூர்த்தி வனமாலை என்று குறிப்பிடும் மாலை காணப்படுகிறது. இது பார்க்க வனமாலை போலக் காணப்படுகிறதே தவிர வனமாலையல்ல. வனமாலை முழங்கால்கள்வரை தொங்குவது போல அமைக்கப்படும். இந்த் மாலைகளோ சில இடுப்புவரையிலும், ஒன்றிரண்டு தொடைவரையிலும் காட்டப்பட்டுள்ளன. இருபதே சிற்பங்களில் காணப்படும் இம் மாலைகளைக் கொண்டு இந்த வடிவங்களைக் கண்ணன் என்று கொள்வது எப்படி நியாயமாகும்?

இக் கரணச் சிற்பங்கள் கண்ணனைச் சுட்டவில்லை என்பதற்கு மிகப்பெரும் சான்றுகளாய்ப் பூதகண்ங்களும், நந்திகேசுவரரும் நிற்கிறார்கள். கண்ணனின் ஆடலுக்கு நந்தி எப்படிக் குடமுழா வாசிப்பார்? மேலும் குடமுழா கைலாயத்துக்குரியது; எந்த வைணவ வடிவத்தோடும் அல்லது மரபுகளோடும் பேசப்படாதது. எல்லாவற்றையும்விடக் கரணங்களைச் சிவபெருமான் வழங்கியதாகத்தான் பரதசாத்திரமே பேசுகிறது. ஒருவேளை வைணவ ஆர்வலர் சிலர் இக் கரணங்கள்ளக் கண்ணனுக்கு ஏற்றிக் காட்ட விரும்பி இவற்றைப் படைத்தனர் என்று கொள்ளலாம் என்றாலோ, இரண்டு விஷயங்கள் தடுக்கின்றன. ஒன்று இச் சிற்பங்கள் தோன்றிய காலகட்டம். சைவப் பெருவேந்தன் சிவபாத சேகரன் முதலாம் இராசராசன் தஞ்சையில் கரணக்கோவையை அந்தச் சிவபெருமானே ஆடுவது போல் அமைத்த காலத்தை ஒட்டியெழுந்த சார்ங்கபாணி கோயிற் சிற்பங்கள் கரணங்களைக் கண்ணனுக்குத் தாரை வார்த்துத் தந்திருக்க முடியாது. இரண்டாவது இசை கூட்டும் பூதகணங்கள். கண்ணனுக்கு எப்படிப் பூதகணங்கள் இசை கூட்டும்? புராண வரலாறே இல்லையே!

டாக்டர் பத்மா சுப்பிரமணியமும், டாக்டர் கபில வாத்ஸ்யாயனனும் இவ் வடிவங்களைச் சிவபெருமான் என்று கூறுகின்றனர். சான்றாக அவர்கள் காட்டுவது பூதகணங்களை. பூதகணங்களும், நந்தியும் சிவச் சார்புடையவை என்பதில் எள்ளத்தனையும் ஐயமில்லைதான். ஆனால் அதனாலேயே இங்கு ஆடுபவரைச் சிவபெருமான் என்று எப்படிச் சொல்ல முடியும்? நெற்றிக்கண்ணில்லை. ஆகம



விரோதமாய் இரண்டே கைகள். இவர் சிவபெருமான்தான் என்பதற்குத் தோற்ற அமைதியில் எந்தச் சான்றுமில்லை. ஆகமங்கள், எந்த இறைவடிவாக இருந்தாலும், தனியாக வடிக்கப் பெறும் போது அவை நான்கு கரங்களுடன்தான் அமையுமென்கின்றன. அதனால்தானே தஞ்சையில் கரணங்களைச் சிவபெருமான் நிகழ்த்துவதாகக் காட்டவிரும்பிய நித்தவிநோதன் அங்கே ஒவ்வொரு வடிவத்திற்கும் நான்கு கைகளைத் தந்து சிவபெருமானுக் குரிய கருவிகளையும் அந்தக் கைகளில் வைத்து நம்மைக் காப்பாற்றியுள்ளான்.





இந்தக் கரணச் சிற்பங்கள் சைவச் சார்புடையவைதான். ஆனால் டாக்டர் பத்மாவும் டாக்டர் கபிலாவும் சொல்வது போல் இங்கு ஆடுபவர் சிவபெருமான் அல்லர். இச் சிற்பங்கள் தண்டுவைக் குறிக்கின்றன. நாட்டிய சாத்திரத்தில் சிவபெருமான் தண்டுவை அழைத்துப் பரதருக்கு அங்ககாரங்களைக் கற்றுத்தரச் சொன்னதாகவும், அதன்படி தண்டு தனக்குக் கற்றுத் தந்ததாகவும் பரதரே கூறுகிறார். மேலும் சிவபெருமான் கண்டுபிடித்துத் தமக்குச் சொன்ன ரேசகங்கள், அங்ககாரங்கள், பிந்திகளைக் கற்று அவற்றைக் கொண்டு இசையுடன் கூடிய ஆடலைத் தண்டு உருவாக்கியதாகவும், அதனாலேயே இவ்வாடல் தாண்டவம் என்று பெயர் பெற்றதாகவும், தண்டு தமக்குக் கற்றுத் தந்த அந்த செவ்விய ஆடலைத் தாம் கற்றவிதமாகவே இங்குச் செய்வதாகவும் பரதர் நாட்டிய சாத்திரத்தில் மிகத் தெளிவாகக் கூறுகிறார்.

சார்ங்கபாணி சிற்ப வரிசையில் கிழக்கு முகத்தின் வடபுறத்தில் நுழைவாசலில் இருந்து ஆறாவது சிற்பமாக மூன்று ஆடவர்கள் காட்டப்பட்டுள்ளனர். இவர்களுள் முதலாமவர் முதியவர். தாடி, மீசையும், பட்டாடையுமாய்க் காட்சி யளிக்கும் இவரையடுத்து இளைஞர்களாய் இருவர். முதியவரின் வலக்கைக் கரணங்களை இரசித்துப் போற்றும் மெய்ப்பாட்டில். இடக்கை இடுப்பில். அவரை ஒட்டி நிற்கும் இரண்டு இளைஞர்களுள் ஒருவர் இடக்கையைக் கட்யவலம்பிதமாய்க் கொண்டு வலக்கையைப் பதாக முத்திரையில் காட்டி நிற்கின்றார். பதாகத்திற்குள்ள விநியோகங்களில் 'இது, அது என உரைத்து' மகிழ்தலும் ஒன்றாகும். இந்த இளைஞர் தண்டுவின் ஆடல் அமைவுகளை இது, அது என இனம் கண்டு மகிழ்கின்றார். மற்றோர் இளைஞர் இந்த அதிசயக் கரணங்களைக் கண்டு வியந்து போற்றி நிற்க, முதியவரோ பெரிதும் சிலாகித்துப் போற்றிப் பெருமகிழ்வில் மூழ்கியிருக்கிறார். இவர்களை டாக்டர் கபிலா கரண ஆசிரியர்களாகக் குறிப்பிடுகிறார். டாக்டர் பத்மா தன்னுடைய தொலைக்காட்சித் தொடரில் இச் சிற்பங்களைக் காட்டவே யில்லை. கபிலா சொல்வது போல் இவர்கள் கரண ஆசிரியர்களல்ல. சாட்சாத் பரதரும் அவருடைய பிள்ளைகளும்தான்!

நாட்டியசாத்திரம் பரதர் ஆடலைத் தன் நூறு பிள்ளைகளுக்கும் கற்றுத் தந்ததாகக் கூறுகிறது. பிறகு நான்முகன் அறிவுரைப்படி நாட்டிய நிகழ்ச்சி சிவபெருமான் முன்னிலையில் நிகழ்கிறது. நிகழ்ச்சியைக் கண்டு மகிழ்ந்த சிவபெருமான் நான்முகனிடம் ஆடல், அங்ககாரங்களாலும் கரணங்களாலும் அழகு பெறுவதாகக் கூறி அவற்றை நாட்டிய நிகழ்ச்சியின் பூர்வரங்கத்தில் சேர்த்துக்கொள்ளச் சொல்கிறார். நான்முகன் அங்ககாரங்களின் பயன்பாடுபற்றிச் சிவபெருமானிடம் கேட்க, சிவபெருமான் தண்டுவை அழைத்துப் பரதரிடம் அங்ககாரம் பற்றிப் பேசுமாறு பணிக்கிறார். தண்டு அந்த ஆணையைத் தலைமேல்ஏற்றுக் கற்றுத்தருகிறார். அதைத்தான் சார்ங்கபாணி கோயிற் கரணச் சிற்பங்கள் படம் பிடித்துள்ளன. தண்டுவின் கரண விளக்கங்களைப் பரதரும் அவருடைய பிள்ளைகளும் கண்டு மகிழ்ந்து கண்களில் நிறைப்பதைக் கிழக்கு முகத் தொகுதி காட்டுகிறது. தண்டுவின் ஆடலுக்கு இசைகூட்ட கயிலாயத்தில் பூதகணங் களையும், நந்தியையும் விட்டால் வேறு யார் வரமுடியும்?

சிற்பிகள் பரதரையும் காட்டி, தண்டுவையே கரண இயக்கங்களில் படம்பிடித்து அற்புதமான இலக்கியமாய் இந்தச் சிற்ப வரிசைகளைச் செதுக்கி வைத்தனர். ஏனோ அறிஞர்கள் சிவ வைணவச் சார்புகளைப் பிடித்துக்கொண்டு பாதை மாறிவிட்டனர். இந்தக் கரணச் சிற்பங்களில் காளியையும் சிவபெருமானையும் அவர்கள் இடம்பெற வைத்தது கூட உத்தத, சுகுமாரத் தாண்டவ மரபுகளையும் சிவச்சார்பையும் சுட்டிக் காட்டத்தான்.

சார்ங்கபாணி கோயிற் சிற்ப வரிசையில்தான் பரதர் முதன்முதலாக இடம் பெறுகிறார். மாமல்லை தர்மராசர் தளியின் இடையடுக்கில் இரண்டு உருவச் சிற்பத் தொகுதிகள் உள்ளன. இவை இரண்டிலும் சிவபெருமான் உள்ளார். ஒரு தொகுதியில், சிவபெருமானுடன் காட்டப் பெற்றிருக்கும் ஆண் வடிவம் தன் இடக் காலைத் தூக்கி



விண்கால்நிலை காட்டுகிறது. இந்த வடிவத்தைத் தண்டு என்று அறிஞர்கள் அடையாளம் கண்டு எழுதியுள்ளனர். தம்மிடம் ஆடலைக் கற்ற தண்டு ஆட, அதைச் சிவபெருமான் சரி பார்ப்பதாக இத் தொகுதியை அறிஞர்கள் விளக்கியுள்ளனர். ஆனால் டாக்டர் பத்மா தன்னுடைய அண்மைக்கால தொலைக் காட்சித் தொடரில் சிவபெருமானுடன் காணப்படும் வடிவத்தைப் பரதர் என்று கூறியுள்ளார். பரதரின் ஆடலைச் சிவபெருமான் காண்பதாக அவர் குறிப்பிட்டுள்ளார். நாட்டிய சாத்திரத்தில் சிவபெருமானின் முன்னால் தாம் ஆடியதாகப் பரதர் குறிப்பிடவில்லை. பேச்சு நடப்பதே சிவபெருமானுக்கும், நான்முகனுக்கும் இடையில்தான். பிறகு சிவபெருமானுக்கும் தண்டுவுக்கும் இடையில் உரை நிகழ்கிறது. நாட்டியசாத்திர நிகழ்வுகள் கொண்டு பார்க்கும்போது இச் சிற்பத் தொகுதியில் இருக்கும் ஆடல் வடிவத்தைத் தண்டு எனக் கொள்வதே பொருத்தமாகத் தோன்றுகிறது.



தர்மராசர் தளியிலுள்ள மற்றொரு சிற்பத் தொகுதியில் சிவபெருமானுடன் இருக்கும் ஆடவரைத் திரு சிவராமமூர்த்தி தம்முடைய நூலொன்றில் அர்ச்சுனனாகவும், மற்றோர் நூலில் ஓரிடத்தில் பரதராகவும், வேறோர் இடத்தில் சண்டீசராகவும் அடையாளம் காட்டுகிறார். டாக்டர் பத்மா இந்த வடிவத்தைத் தண்டு என்கிறார். திரு கே. ஆர்சீனிவாசன் இந்த வடிவம் சண்டீசராக இருக்கலாம் என்று கூறுகிறார். இதுதான் பொருத்தமாகத் தோன்றுகிறது. சிவபெருமானின் வல முன் கையிலிருந்து தொங்கும் பரிவட்டம் இதை உறுதி செய்யும். இதனால் தர்மராசர் தளியில் எந்த இடத்திலும் பரதரின் வடிவமில்லை என்பது தெளிவாகிறது.

தமிழகத்துச் சிற்பக்கலை வரலாற்றில் சிவபெருமான் தண்டுவின் ஆடலைப் பார்க்கும் தர்மராசர் தனித் தொகுதியில்தான் நாட்டியசாத்திரக் கல்வி மரபு அப்ப..யே பின்பற்றப்பட்டு முதன்முதலாக இடம்பெறுகிறது. நாட்டியக் கல்விமரபின் இந்த இரண்டாம் நிலையைத் தர்மராசர்தளி தர, ...டர்ச்சி விடுபட்டு விடக் கூடாதென்று அதன முதன் நிலை...த் தஞ்சையில் உருவாக்கினார் ...லாம் இராச...ன். அவரோ அல்லது அவருக்குப் பின்வ... லையார்வம் கொ...ட எந்தச் சோழ மன்னன்... நாட்டிய சாத்திரமரபின் அடுத்த நிலையை சார்ங்கபாணித் தொ...ரில் பின்பற்றினார். சிவபெருமான் ...ஞ்சையில் ஆடிக் காட்டியதைக் கற்ற தண்டு மாமல்லையில் அதைச சிவபெருமானுக்கு ஆடிக்காட்டி, சரிபார்த்துக் கொண்டு, ...ங்கபாணியில் பரதருக்குக் கற்றுத்தருகிறார். பரதர் அதைத் தன் பிள்ளைகளுக்கும் நான்முகன் அனுப்பிய பெண்களுக்கும் சொல்லித் தந்ததைக் கருத்தில் கொண்டே பின்னால் வந்த அனைத்துக் கரணவரிசைகளிலும் பெண்களை இடம்பெற வைத்தனர் மரபறிந்த சிற்பாசிரியாகள். தில்லை, திருவண்ணாமலை, விருத்தாசலம், திருவதிகை, குடந்தை நாகேசுவரர், திருச்சி மதுரகாளியம்மன் என்று அனைத்துக் கோயில்களிலும்



பெண்களே கரணக் காரிகைகளாய்க் காட்சி தருகின்றனர்.

நாட்டியசாத்திர மரபுகளை அடியொட்டிய நிலையிலும், தண்டுவின் கரணக் கோலங்களைக் கொண்டிருக்கும் ஒரே சிற்ப வரிசை என்ற முறையிலும், தமிழகத்துச் சிற்பக் கலை வரலாற்றில் தனிச் சிறப்பு பெற்றுவிடும் சாரங்கபாணி கோயிற் சிற்பங்கள் மற்றோர் மகுடத்தையும் சூட்டிக் கொள்கின்றன. ஆம்! நாட்டிய வேதத்தை நமக்குத் தந்த பரதரைத் தமிழகத்துப் பழங் கோயில்களில் இங்கு மட்டுமே காண முடிகின்றது. அதுவும் அவரெழுதிய நாட்டியசாத்திர மரபுப்படியே! அவர் படைத்த கரணங்களைக் கண்டபடியே!

பரதரின் பெயரைச் சாளுவன் குப்பத்தில் கல்வெட்டாய்ப் பொறித்து நாட்டிய சாத்திரத்தின் காலநிர்ணயத்துக்குக் கை கொடுத்தார் ராஜசிம்மப் பல்லவர். அந்தப் பரதரையே சிற்பமாய் வடித்துச் சிறப்பைப் பெற்றதோ பெயர் தெரியாப் புகழ்ச் சோழர் ஒருவர். தண்டுவும் பரதரும் இடம் பெற்றதாலேயே இந்தக் கரணத் தொகுதிகள் அழியாப் புகழ் பெற்று விட்டன. சொல் இலக்கியத்துக்குக் கல் இலக்கியம் படைத்து விட்ட சோழ நாட்டுச் சிற்பிகளின் செம்மாந்த திறனை என்னென்பது! எப்படி வியப்பது?





# தண் குமரியும் தஞ்சைச்சோழரும்



டாக்டர்.எஸ்.பத்மநாபன்

கன்னியாகுமரி மாவட்டத்தில் சோழ புரம், சோழநல்லூர் போன்ற ஊர்களும், சோழநங்கை கோயில், சோழராஜா கோயில், மும்முடிச்சோழ விநாயகர் கோயில் ஆகிய கோயில்களும், பழையாற்றுச் சோழன் அணையும் சோழரின் தொடர்பைச் சுட்டிக் கூறுவனவாக உள்ளன.

முதல் பராந்தகன் கல்வெட்டுக்கள் சுசீந்திரம், கன்னியாகுமரி ஆகிய இடங்களில் கிடைக்கின்றன. முதற் பராந்தகன் சிறப்புப் பெயருள் ஒன்று வீரநாராயணன் என்பது. குமரி மாவட்டத்தில் உள்ள வீரநாராயண மங்கலம், வீரநாராயணச்சேரி என்ற ஊர்கள் பராந்தகன் சிறப்புப் பெயரில் அமைந்த ஊர்களாக இருக்கலாம்.

இராசாதித்தன் படைத்தலைவன் 'மலை நாட்டு நந்திக்கரைப் புதூர் வல்லங்குமரன் என்பவன் குமரியில் கோட்டாற்றை அடுத்துள்ள 'வல்லன் குமாரவிளை' • அப் படைத்தளபதி பெயரில் அமைந்த ஊராக இருக்கலாம். நந்திக்கரைப் புதூரும் குமரி மாவட்டத்து ஊரே.

முதல் இராசராசன் காலத்தில் நாஞ்சில்நாடு 'இராஜராஜவளநாடு' 'இராஜ ராஜப் பாண்டிநாடு' 'உத்தமசோழ வளநாடு' என்ற பெயர்களால் அழைக்கப்பட்டுள்ளது. கன்னியாகுமரி குகநாதேச்வரர் கோயில் 'இராஜராஜேஸ்வரம்' என்றே அக்காலத்தில் அழைக்கப்பட்டது. சோழர் கலைக்கு அக் கோயில் சிறந்த எடுத்துக்காட்டாகும்.

இராசராசனின் திருநந்திக்கரைக் கல்வெட்டு அவன் ஐப்பசிச் சதயத்தில் பிறந்தவன் என்பதை உறுதிப்படுத்துகிறது.

'சதய நாள்விழா உதியர்மண்டலம்
தன்னில் வைத்தவன்'

என்று இராசராசனைக் கலிங்கத்துப்பரணி புகழுகிறது. உதியர் மண்டலம் கன்னியா குமரி மாவட்டத்து உதயகிரிக்கோட்டை என்ற கருத்தும் உண்டு.

நாகர்கோயில் ஒழுகினசேரிக் கோயில் 'இராஜேந்திர சோழீஸ்வரம்' என்று அழைக்கப்பட்டது. முதல் குலோத்துங்க சோழன் இன்றைய கன்னியாகுமரி மாவட்டக் கோட்டாற்றைப் பெரும் படையுடன் தாக்கினான் என்று கலிங்கத்துப்பரணி கூறும்.

'வெள்ளாறும் கோட்டாறும்
புகையால் மூட
வெந்தவனம் இந்தவனம் ஒக்கும் ஒக்கும்'

என்பது கலிங்கத்துப்பரணித் தாழிசை யாகும்.

கன்னியாகுமரியில் இரண்டாம் இராசேந்திரன் காலத்தில் 'ராஜராஜப் பெருஞ்சாலை' என்னும் பெயரில் உயர்கல்வி நிலையம் ஒன்று இருந்தது. முதலாம் இராஜாதிராஜன் கல்வெட்டுக்களும் இங்கு உள்ளன.

மேற்கண்ட பல வரலாற்றுச் சின்னங்கள் கன்னியாகுமரி மாவட்டத்துடன் தஞ்சைச் சோழர்கள் கொண்ட தொடர்பை வலியுறுத்துகின்றன.



# சக்கர சாமந்தம் கல்வெட்டு

பெ. கௌதமபுத்திரன்

தஞ்சை மாவட்டத்தில் தஞ்சை - பூதலூர் சாலையில் 10 கிமீ தொலைவில் சக்கரசாமந்தம் என்ற ஊர் உள்ளது. அவ் வூரில் சமுதாயக்கூடத்திற்கு அருகில் நிறுத்தப்பட்டிருந்த தூண் ஒன்றில் தஞ்சை நாயக்கர்காலக் கல்வெட்டு ஒன்று உள்ளது. அத்தூண் இப்போது தமிழக அரசு தொல்பொருள் ஆய்வுத்துறையின் தஞ்சை மராட்டியர் அரண்மனை அகழ்வைப்பகத்தில் காட்சிக்கு வைக்கப்பட்டுள்ளது.

தஞ்சை செவ்வப்ப நாயக்கன் மகன் அச்சுதப்ப நாயக்கன் புண்ணியமாகத் தஞ்சைச் சிங்கப்பெருமாள் கோயிலுக்கு அளித்த கொடையை இக் கல்வெட்டு குறிக்கிறது. தஞ்சைக் கோட்டையின் மேற்கேயுள்ள செக்கடிமேட்டில்தான் சோழர் அரண்மனை இருந்தது என்ற கருத்தும் உண்டு. அப் பகுதியில் உள்ள மேலவெளித்தோட்டம் என்னும் பகுதியில்தான் முன்பு சிங்கப்பெருமாள் கோயில் இருந்தது. இன்றும் அதற்கு அடையாளமாக அங்கு 'சிங்கப்பெருமாள் குளம்' என்ற பெயரில் குளம் ஒன்று உள்ளது.

நாயக்கர் காலத்தில் அச் சிங்கப் பெருமாள் கோயில் 'வம்புலாம் சோலைத் திருமால் ஆலயங்களுடன் வெண்ணாற்றங் கரையில் எழுந்தருள்விக்கப்பட்டது. அக்கோயிலை 'மேலசிங்கப்பெருமாள்' என்று அழைப்பர். தஞ்சை நகரில் கொண்டி ராஜபாளையத்தில் உள்ள பெருமாள் கோயில் 'கீழை சிங்கப்பெருமாள் கோயில்' என்று அழைக்கப்பட்டது.

சக்கரசாமந்தத்தில் பூரணை, புஷ்கலை தேவியருடன் கூடிய சோழர்கால ஐயனார் சிற்பம் ஒன்று சிதைந்த நிலையில் உள்ளது.

## கல்வெட்டு

சுபமஸ்து அக்ஷய வருஷம் பங்குநி மாதம் 19 தேதி செவ்வப்ப நாயக்கர் குமாரன் அச்சுதப்ப னாயக்கர் தமக்கு புண்ணியமாக சிங்கபெருமாளுக்கு செற்ற புதலூர் சீராளூர் போதகலேரி எல்லைக்கு கிழக்கு வெண்ணில ஓடைக்கு தெக்கு எல்லையும் கீழ்பாற்கெல்லைக்கு வேலைநத்தம் கயிலாசர் நல்லூர் எ. . . .

இக் கல்வெட்டு மூலம் அச்சுதப்ப நாயக்கர் காலத்தில் 16.3.1667 இல் மேல சிங்கப்பெருமாள் கோயில் கொடை பூதலூரில் அளிக்கப்பட்டது என்பது தெரிகிறது.

### தத்துவ ஒருமைப்பாடு

கும்பகோணம் பன்னிரு திருமுறைகளில் இடம் பெற்றுள்ள ஒரு சிவத்தலமாக விளங்குவ தோடு ஆழ்வார்களால் மங்களா சாசனம் செய் யப்பெற்ற 108 வைணவத் திருப்பதிகளில் ஒன் றாகவும் உள்ளது.

இதுவேயன்றி வேதாந்த தத்துவத்தில் அத்து விதத்திற்குரிய சங்கரமடம், விசிஷ்டாத்துவிதத் தைப் போதிக்கும் வைணவமடம், துவிதத்திற்கு ரிய இராகவேந்திரர் மடம் ஆகிய மூன்றும் இவ் வூரில் சிறப்பாக விளங்குகின்றன.

மகாமகக் குளத்திற்கு எதிரே உள்ள பெரிய மடம் வீரசிங்காதனமடம் எனப் பெயர்பெற்ற வீரசைவமடமாகும். ஒட்டக்கூத்தரோடு தொடர்புடைய இம்மடத்தை அருணகிரிநாதரும் பாடியுள்ளார்.



# நீராட்டப்பெருவிழா

முனைவர், ஔவை நடராசன்

தமிழகத்தின் முதன்மைவாய்ந்த நகரங்களில் குடந்தையும் ஒன்று. குடந்தையைக் கோயில் மாநகரம் எனலாம். சிறு கோயில்கள் தவிர, பெரிய கோயில்களும் குடந்தையில் பல்கியுள் என. குடந்தையைச் சுற்றிலும் ஊர்நடுவில் கோயில்கள் அமைந்து மக்கள் உள்ளத்தையும் உணர்வையும் வானளாவ உயரச் செய்கின்றன. கலைகளும் மொழியும் அறமும் கல்வியும் தழைக் கக் காரணமாகவும் குடந்தை விளங்குகின்றது. மக்கள் வாழ்க்கையை மையமாகக் கொண்டு துயர் களையும் பணியிலும் திருக்கோயில்கள் பங்கு கொண்டுள்ளன. இத்தகைய பெருங்கோ யில்கள் அமைந்த குடந்தையின் பெயர் பிற்காலத் தில் கும்பகோணம் என மாற்றம் பெற்றது. குடந்தை குடவாயில் என்ற பெயர்களில் உள்ள குடக்கு என்ற சொல் மேற்குத் திசையைக் குறிப் பதாக வேண்டும்.

ஒவ்வொரு ஊருக்கும் ஒரு சிறப்புண்டு குடந்தைக்குரிய பெருஞ்சிறப்பு மாசிமகத் திருநா ளில் அமைந்தது. 'மாசமகம் குடந்தையிலே' என்று புகழ்பாடும் அளவுக்கு இத்திருநாள் குடந் தைக்கே உரிய திருநாளாகக் திகழ்கின்றது. தமிழ் நாட்டில் முழுநிலா நாள்கள் எல்லாம் திருவிழா நாள்களே! கார்த்திகை முழுநிலா நாளில் விளக்கு வரிசை வைத்துக் கொண்டாடும் சிறப்பு சங்ககாலத்திலேயே பேசப்படுகின்றது. மார்கழித் திங்களில் திருவாதிரை, தைத் திங்களில் தைப் பூசம் என்னும் வரிசையில் இடம் பெறுகிறது மாசிமகம். ஆண்டுதோறும் வரும் மகத்தைவிடப் பனிரண்டு ஆண்டுக்கு ஒரு முறை மலரும் குறிஞ்சி மலர் போன்று பத்திரண்டு ஆண்டுகட்கு ஒருமுறை அமையும் மாமகமும் பெருமை பெறு கின்றது. மகாமகம் என்பதனைச் சேக்கிழார் மாமகம் என்று குறிக்கின்றார். மக்கள் வழக்கில் மாமாங்கம் எனவும் அச்சொல் வழங்குகிறது.

மாமாங்கம்ஆடி மாசிக் கடல்ஆடி என்பது நாட்டுப்புறப் பாடலாகிய ஒரு தாலாட்டு வரி. மாசிமகத்தில் மக்கள் கடலுக்குச் சென்று நீரா டுவார்கள். மாசிக் கடலாட்டு என்றே இதனைக் குறிப்பிடுகின்றார் திருஞானசம்பந்தர்.

நீராடுவது உடல் தூய்மையைத் தரும். புனித நீராடுவதோ அகத்தூய்மையும் சேர்த்துத் தரு வது. எனவே மக்கள் கங்கை, யமுனை என்று புனிதமான தீர்த்தங்களைத் தேடிச் செல்கின்ற னர். சென்றாடு தீர்த்தங்கள் ஆனார் என்று புகழ் கின்றார் திருநாவுக்கரசர். பொதுவாக மக்கள் தீர்த்தங்களைத் தேடிச் சென்றனர். ஆனால் குடந்தை நகரத்து அருளாளர் தீர்த்தங்களை யெல்லாம் குடந்தைக்கு வந்து கூடச்செய்துவிட் டனர்.

தீர்த்தங்களைத் நாம் தேடிச்செல்ல வேண்டாம். தீர்த்தங்கள் எல்லாம் குடந்தைக்குத் தம்மைத் தூய்மையாக்கிக்கொள்ள வந்து நீராடு கின்றன. எனவே மாமகம் ஆடுதற்கு மகிழ் வோடு வாருங்கள் என்று அனைவரையும் குடந்தை மாநகரில் வெள்ளத்தில் மக்கள் திளைத்து ஆடுமாறு செய்தனர். மக்கள் உள் ளத்தை அருள் வண்ணமாக்குவதோடு, அனை வரையும் ஒன்றுகூட்டி ஒருமைப்பாட்டுக்கும்கூட இத் திருநாள் வழிவகுத்துள்ளது. இவ் வகையில் சமுதாயப்பயனையும் இந்தத் திருநாள் வழ்ங்கு கின்றது.

நாம் சென்று தீர்த்தங்களில் நீராடுகின்றோம். இறைவன் நம்முடைய அன்பாகிய நீராடுவதற்கு ஆசைப்படுகின்றார் என்பார் சேக்கிழார். தொண்டர் அன்பு எனும் தூயநீர் ஆடுவதற்கு அன்பர்களைதேடித் தேடி இறைவன் எழுந்தருள் வான் என்பர். எனவே, நாம் அன்பினை வளர்த் துக்கொள்ள வேண்டும். அன்புநெறியே தமிழர் நெறி! அன்பே சிவம் என்பது நமது குறிக்கோள் மொழி!

தமிழக முதல்வர் புரட்சித்தலைவி அவர்கள் தனியார்வங் காட்டி, குடந்தை மாமகவிழா. இந்தியப் பெருவிழாவாக மிளிரும் வகையில் பொது நலத் திட்டங்களையும் துப்புரவுப் பணிக ளையும் நிறைவேற்றத் தூண்டியுள்ளார்கள். பனிரெண்டு ஆண்டுகட்து ஒருமுறை பொலிவும் புகழும் மிளிரும் வகையில் குடந்தைத் திருநகர மாமகவிழா பெருவிழாவாக மலர்கிறது.

# NRTTA KARANAS

## A Heritage Gliding Into Future

by

Padma Subramanyam



Sage Bharata Muni's *Bharatiya Natya Sastra* is the oldest extant literature on drama, dance, music and poetics. The three thousand years of tradition reflected in this magnum opus has permeated not only the length and breadth of the Indian sub-continent, but also has influenced vast regions in Asia and Far-East. According to this work, the term *Natya* denotes drama, while *Nrtta*, *Nrtya* and *Tandava* are synonyms of dance. *Natya* is said to be an *anukarana* or the imitation of the three worlds. *Abhinaya* is the art of communication; *bhava* is feeling. The aesthetic result of the enjoyment of the communication of ideas and feelings is *rasa* and *rasotpatti*, the flowering of *rasa*, is the goal of *Natya*. "*Nrtta* or dance is occasioned by no specific need," says Bharata. "It emerged because it creates beauty; naturally, everyone loves *Nrtta* and eulogises it. *Tandava* is essentially for the adoration of gods; its delicately tender usage *(sukumara prayoga)* is connected with the experience of the feeling of love." *(Natya Sastra*, Chapter IV) *Nrtta* has the power to please both human beings and gods. The perception of an involvement in *Nrtta* can be at different levels, such as, physical, emotional, intellectual and spiritual.

The modern atomic physicists have now turned to Saiva Siddhanta philosophy in particular and to eastern mysticism in general as they have come to acknowledge the overlapping concepts in science and mysticism. The scientific observation of the dancing particles in the sub-atomic world as found in their action and reaction as well as in the interchange of matter and energy, has revealed the existence of the constant ballets in the cosmic theatre. This concept was intuitively recognised by our mystics several centuries before the modern scientists could grasp it. The tangible representational form of the vision of the mystics is the dance of Siva, described as the *Karanas* in the *Natya Sastra*. For all practical and pragmatic definitions the *Karanas* are the units of dance. Our ancient seers had not only realised their visual effect, but recognised too their invisible efficacy. In fact, the later *Agama Sastras* (texts dealing with temple architecture, iconography and worship) have borrowed names and forms of the *Karanas* of *Natya Sastra* to give concrete shape to the formless Infinite, otherwise beyond our comprehension. In short, this is the supreme secret of the Eternal Wisdom *(Chidambara Rahasyam)* enshrined in the altar of Nataraja, the Lord of Dance, at the temple of Chidambaram. This holy combination of a dichotomy in worship of the Formless Space *(Akasa)* in a concrete dancing form, seems to unify the power of mantra and yantra, intuition and intellect, the mystic and the scientific.

It was characteristic of most of the ancient Indian Sastras to wrap the scientific or philosophic theories in some mythological stories. Moreover, they are usually found in the form of questions and answers. The *Natya Sastra* has this framework throughout its 36 chapters, thus cutting the monotony of just enlisting definitions. In the beginning of *Treta Yuga*, tells the story, people became addicted to sensual pleasures and they needed a diversion. So, Indra, along with a delegation of gods and demons, went to Brahma and demanded for the creation of an audio-visual diversion which could be enjoyed by all irrespective of sex, caste and class. Brahma meditated and created the 5th Veda—the *Natya Veda*, taking as its ingredients recitation from the Rik Veda, *abhinaya* from the Yajur Veda, music from the Sama Veda and *rasa* from the Atharva Veda. When Brahma presented this to Bharata, he and his



100 sons enacted the first drama, *Amrta Manthana*, in the presence of the gods and demons. When the story involved enacting the defeat of the demons, they were annoyed and created a disturbance in the arena. Indra brought them under control and then presented each of the artistes, with a piece of his flag staff as a ward against evil forces. Brahma then explained the concept of drama.

The gods later wished to have a permanent theatre built to give protection to the artistes and the spectators. Brahma, Bharata and his disciples then went to Kailas and enacted the story of *Tripuradaha*. On seeing his own story being enacted Siva was inspired to speak to Bharata about his own dance and he asked his devotee Tandu to teach Bharata the *Karanas*, which are the basic units of dance. The term *Tandavam* therefore derives its name from Tandu. Parvati is said to have taught the *Sukumara Prayoga* or the feminine, graceful usage of the same movements. It is with this prelude that Bharata introduces the enumeration and the detailed description of the *Karanas*.

From the above story it is evident that *tandava* or dance is made up of *Karanas*. The masculine handling is called *Uddhata Prayoga*, and the feminine usage of the same movements is called *Sukumara Prayoga*. The term *tandava* meant just dance during the time of *Natya Sastra*. That is why the chapter delineating *Karanas* was called *Tandava Lakshana*. The basic point to be noted here is that the 108 *Karanas* are common to both the sexes. Their psychological effect depends on the dancer handling them.

The technique of *Karana* had dominated the world of classical dance in our country till about the 14th century. This technique was mastered by dancers and also sculptors who were expected to learn dance. That is how the *Karanas* have influenced the art of iconography and painting. Gods were depicted in dancing or dance-like poses. The art of dance and sculpture grew together as twins, inspiring each other under the overall influence of religion. Even ordinary scenes like applying a *tilaka* on the forehead or removing a thorn from the sole are depicted in graceful poses peculiar to dance. Indian dance and sculpture are based on the common principle of filling space in consonance with laws of symmetry and proportions. That is why we describe a gracious pose of a dancer as 'sculpturesque', and a beautiful sculpture as 'a dancer come to life.'

Though there are dances and dance-like sculptures all over India, Tamilnadu has the pride of possessing 5 temples containing an authentic depiction of the 108 *Karanas* of *Natya Sastra*. Chronologically, they are Brihadiswara temple at Tanjavur (11th C), Sarangapaniswamy temple at Kumbakonam (12th C), Nataraja temple at Chidambaram (13th C), Arunachaleswara temple at Tiruvannamalai (15th C) and Vrddhagiriswara temple at Vrddhachalam (16th or 17th C). Except the *Karana* series at Tanjavur, the rest are all found at the entrances, on the respective *gopurams*. At Tanjavur, the figures are seen on the first tier of the gigantic Vimana above the sanctum. At Kumbakonam and Tiruvannamalai they are in the Eastern Gopuram while at Chidambaram and Vrddhachalam they are seen in all the four *gopurams*. At Tanjavur and Kumbakonam the figures are those of Siva, while in the other temples there are the statues of Parvati.

The sculptural representation of the *Karanas* have recently been attracting dancers from all over the world. Many of them are being used in their static attitude, by imitating the postures found in stone. The study of *Natya Sastra* reveals the intricate technique that is frozen in these figures. Each dance sculpture is a frozen moment of a movement and not just a posture. It represents either the beginning, the continuation or the end of each *Karana*. The sculptures relating to *Karanas* can be better appreciated only after getting acquainted with at least some basic ideas about its technique, as delineated in Bharata's *Natya Sastra*.





Bharata defines *Karana* as that movement in dance which is caused by the combination of the graceful action of hands and feet. Each *Karana* is the resultant of a union of three basic elements: *Sthaana, Nrttahasta* and *Chaari.*

1. *Sthaana* —(Position of the body)
This involves a detailed specification of the body lines including the proportion of the space between the feet, the direction in which they are turned and the height of the knees from the ground. Nine standing positions are described in the *Natya Sastra.*

2. *Nrttahasta*—(The hand movements)
These are thirty different varieties of movements of the hands, which involve specific courses of action of the entire arm from the shoulders to the tips of the fingers.

3. *Chaari*—(Movements of the leg)
The *Chaari* is the specified course of action of the entire leg from the root of the thigh down to the toes. The 16 *Bhumichaaris* are the actions in which the feet move close to the ground. The 16 *Akasachaaris* are those actions involving lifting or extension of the legs and they include the leaps and jumps.

The *Karana* as a term is derived from the root '*krn*', meaning action. Each *Karana* is a product of performing a *nrttahasta* and *chaari* together, in a definite *sthaana*. The result of the various combinations of these three basic elements are the 108 *Karanas* which form the infrastructure of the *Nrtta* technique. The *Karana* sculptures have managed to capture this dynamism and preserved for us an art, which would have otherwise been a lost heritage.

The first attempt to codify the 4th Chapter of *Natya Sastra* in stone was the incomplete venture of Rajaraja Chola I. The *Karanas* are seen sculpted in a circumambulatory passage on the first tier of the magnificent tower over the sanctum at the Tanjavur temple. This series portrays Lord Siva himself dancing with four arms. The unique feature is the meticulous authenticity of these figures in matters concerning details of movement as well as their serial order. These are like the direct descendants of Bharata Muni, uninfluenced even by the commentator Abhinava Gupta. Yet, it is a tragic fact that this series is incomplete



quantitatively and qualitatively: the rough chiselling of only 81 features are seen with slabs left empty to complete the series.

I recall that the erstwhile Chief Minister of Tamizhnadu, Dr. M. G. R. announced (at Tanjavur itself) acceptance of my humble suggestion to prepare authentic 'Line Drawings' of the rest of the 'Karanas' and placing them suitably above or below those blank slabs in collaboration with the Archaeological Survey of India. This would perhaps - atleast partially - fulfil the unfulfilled dreams of that great Royal Architect, Raja Raja Chozha.

At Kumbakonam, the East Gopuram of the Sarngapani Temple has another almost complete set of Bharata's 'Karana' sculptures, as being performed by Lord Siva. These figures are with two arms, unlike those at Tanjavur where the Lord is seen with four arms. These Siva figures seen at this Vishnu temple must have been transplanted from a different location. They are found along the stone base of the 'Gopura' at a height of about 12 feet from the ground. They have the advantage of the name and the serial number of the relevant Karana inscribed below the figure; but they are not found in proper serial order. Obviously, they must have been set in the serial order in the original location. Only 30 of them are well preserved with names and numbers; 43 inscriptions are partly corroded. I had to identify the rest on my own. They belong to the 12th century, as evidenced by the Chozha grantha inscriptions of that period. Karanas 91 & 92 of this series are found at the base of a mantapa near the tank of the neighbouring Kumbeswaraswamy temple. These Karana sculptures at Kumbakonam are a very



valuable link in reconstructing the great and ancient technique of Bharata's Karanas which are common to our whole country (and even beyond). The immediate need is for cleaning them very carefully by qualified experts under the supervision of the Archaeological Survey (of Govt. of India or Tamizhnadu) and their proper preservation for posterity.

The Chidambaram temple is virtually an encyclopaedia of dance in stone. It can be described as a visual library on the technique of Karana as found in the fourth chapter of Bharata's Natya Sastra. The four magnificent *gopurams* of this vast complex have figures of Goddess Parvati, performing the 108 *Karanas* described by Bharata. Though the temple is dedicated mainly to Nataraja, all the *Karanas* are seen sculpted as performed by His consort only. This decision of the builders to create these panels was a complete break from their predecessors

The Nataraja temple at Chidambaram has four sets of 108 *Karanas* in the inner walls of the four *gopurams*. These are found on seven pilasters on either side in perfect serial order, proceeding from the last pilaster on the right side as one enters the temple. The serial order can be perceived in the sculptures one above the other. In the eastern and western *gopurams*, the respective couplets defining the *Karanas* are seen quoted from the *Natya Sastra*. These are all figures of Goddess Parvati with two arms.

The Thiruvannamalai *Karana* series found in the main eastern *gopuram* is more or less a copy of the Chidambaram set. At Vrddhachalam, all the four *gopurams* have four incomplete sets of *Karanas*.

The *Karana* sculptures of our temples are not mere architectural embellishment; they are indeed a record of the contemporaneous technique of dance, reflecting the rich heritage of an artistic tradition. It has been possible to reconstruct the *Karanas* and perform them through an earnest and arduous correlated study of the *Natya Sastra* and its commentary. The *Karanas*, when authentically recreated, mirror the extraordinary technique of a mastery over the major and minor limbs of the human body. The movements are based on kinetic possibilities in the graceful flow of the body lines unlike modern dances in which exploiting all the possible movements of the limbs is the only aim. Bharata's *Karanas* show that these possibilities have been explored based on the law of *Saushtava*—symmetry and proportion. Just as the sculpture of our country are governed by this basic law, Indian dance also depends on *Anga Suddha* or execution of movements without the loss of symmetry.



The 108 *Karanas* were obviously practised by dancers all over India at least till 15th century. The sculptures and paintings of pre-15th-century reveal this amazing fact. However, all texts on dance written all over India in Sanskrit and regional languages also reveal this allegiance to Bharata's *Karanas*. The regional dance styles of today still have in them many traces of Bharata's *Karanas*. Quite a few of the movements are similar, if not same as the older ones While reconstructing the 108 *Karanas* we can recognise movements resembling the contemporary Sadhir (Bharata Natyam), Kathakali, Kuchupudi, Odissi, Kathak and Manipuri. In fact some *Karanas* are seen even in the Sri Lankan and Indonesian dance styles. In the latter, a few of the names of *Karanas* are also still preserved. One example is of the *Karana*, 'Mayura Lalitham', termed as 'Mayurat'.

In the modern context of a changing world, one may ask for the relevance and justification for regressing two millenniums in dance technique. The reconstruction of the *Karana* technique has come to mean two things, viz. breaking the norms of the last three centuries, and, reviving an older tradition. Kalidasa in his *Malavikagnimitra* says, "All that is old need not necessarily be good; nor is a piece of literature without charm because it is new; sound critics favour the one or the



other after scrutiny as while a blockhead is guided by another's judgment".

Bharata's *Karanas* belong to the Upanishadic period and are beautiful, graceful and godly. They are governed by artistic laws of permanent value. It is not for their antiquity that we should revive them; it is because they reflect the pinnacle of the glory of our rich heritage that we should try to preserve them.

The contemporary dance technique is based on a tradition of about three centuries only. This itself was the result of trying to revive what had already been forgotten. The new technique which was then accepted is practical and appreciated to this day. By incorporating Bharata's technique we can enlarge the framework of the contemporary tradition and at the same time infuse the past into future. Beauty lives in timelessness and so also do artistic achievements. An object of beauty, however old it may be, is ever fresh as a flower. Tagore had once said, "Empires may crumble to dust but if there is an atom of true artistry in our work it outlives time." It is precisely with this idea that His Holiness Sri Chandrasekarendra Saraswathy, the Senior Sankaracharya of Kanchi Kamakoti Peetam, is now deeply involved in setting up a new set of 108 *Karanas* at the Uttara Chidambaram temple built at Satara, Maharashtra. These sculptures anticipate the dance technique of the coming centuries. This sculpture series is a symbol of our hoary past moving toward the future. We would be presented with the twin figures of Siva and Parvati depicting each of the 108 *Karanas*. The animation of each *Karana* is worked out in such a manner that Parvati's posture shows the beginning and that of Siva shows the end of each action. The relevant couplets from the *Natya Sastra* are also being inscribed in Nagari script. These are being placed on the outer base of the Mukamantapa and Sanctum at the eye level, so that no visitor can miss their artistic ingenuity. This religio-cultural endeavour is perhaps the chapter of the future of Indian dance.

## சைவ புராணத்தில் வைணவப்பெருமை

திருக்குடந்தைப் புராணம் பாடியுள்ள மகா வித்வான் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் மறந்தும் புறந்தொழாத அழுத்தமான சைவர். சைவச் சார்பற்ற எத்தெய்வத்தையும் பாடாதவர். சைவ சித்தாந்தத்தில் ஆழங்காற்பட்டவர். அவரே இத்தலத்தில் திருமாலை வணங்கும் அடியார்கள் பெறும் பேறுகளைப் பின்வருமாறு கூறுகிறார்

அந்தமா தேவர் வாமபா கத்தில்
அருந்தவத்து ஏமமா முனிவன்
சந்தம்ஆர் மகளை மணந்துஒரு சார்ங்க
தரர்அரா வணைவிழி வளர்வார்,
முந்தஆ தரத்தின் அவர்பதம் பணிவார்
முழுப்பெரும் செல்வரே ஆகி,
எந்தநா ளினும்ஊறு ஒழிந்துவாழ்ந்து, ஈற்றில்
இலங்குவை குந்தம்வீற் திருப்பார்

(வாமபாகம்-இடப்புறம், சார்ங்கதரர்-சாரங்கபாணி, அராவணை-பாம்புப்படுக்கை, ஆதரத்தின் -அன்புடன்)

மன்னிய சார்ங்க பாணிஆ லயத்தின்
வடதிசை இனிதுஅமர் தருவார்
பன்னிய சுதரி சனர், அவர் பாதம்
பரவுவார் பாவம்முற்று ஒழிந்து,
துன்னிய பூதப் பிரேதபை சாசத்
தொடர்புஅறச் சந்ததி பெருக
முன்னிய உலகில் களித்துவாழ்ந் திருந்து
முத்தியும் அடைவர்பின் மாதோ

(சதரிசனர்ய -சக்ரபாணி, முத்தி- வீடுபேறு)
தல விசேடப்படலம் - 31, 32 ஆம் பாடல்கள்

இதற்கு அடுத்த பாடலில் வரதர், வராகர் ஆகிய திருமால் சன்னிதிகளை வணங்குவோர் இம்மை நலன்களைப் பெற்று மகிழ்வர் என்று கூறுகிறார்

இவ்வாறு ஒரு அழுத்தமான சைவப்பெரும் புலவரையே திருமாலைப் பணிந்தவர்களும் பாவம் முற்றும் ஒழிந்து முந்த்தியும் அடைவர் எனச் சொல்லவைத்த பெருமையையுடையது திருக்குடந்தை.

## கல்லணை

காவிரியையும் கொள்ளிடத்தையும் இணைக்கும் வாய்க்கால் உள்ளாறு என்பது. இதன் அருகில் கொள்ளிடத்தில் நீர்மட்டம் காவிரியின் நீர்மட்டத்தைவிடத் தாழ்வாக உள்ளது. கல்லணை இல்லாவிடில் காவிரிநீர் அனைத்தும் கொள்ளிடத்தில் பாய்ந்து வீணே கடலில்தான் கலக்கும். காவிரிநீர் கடுகளவும் வீணாகாது பாசனத்திற்குப் பயன்படச் சோழர்கள் கட்டிய தொன்மையான அணையே கல்லணை ஆகும்.

கல்லணையைப் பார்த்தே ஆந்திரமாநிலம் கோதாவரியின் குறுக்கே தவலேசுவரம் அணை 1836 இல் கட்டப்பட்டது.

## குடந்தையும் குடமூக்கும்

நாலாயிரத் திவ்வியப் பிரபந்தத்தில் மொத்தம் 51 பாசுரங்களில் கும்பகோணம் குறிக்கப்படுகிறது. இவற்றுள் பூதத்தாழ்வாரின் இரண்டாம் திருவந்தாதி 97 ஆம் வெண்பா ஒன்றில் மட்டும்.
படமூக்கின் ஆயிரவாய்ப் பாம்பணைமேல் சேர்ந்தாய் குடமூக்கில் கோயிலாக் கொண்டு (2278)
எனக் குடமூக்கு என்ற பெயர் வந்துள்ளது. மற்ற 50 இடங்களிலும் குடந்தை என்ற பெயரே ஆளப் பட்டுள்ளது.

## கும்பகோணம் இஷ்டகா மடம்

கி. பி. 15ஆம் நூற்றாண்டில் கும்பகோணத்தில் இஷ்டகா மடம் என்னும் பெயரில் ஒரு திருமடம் இருந்துள்ளது. அம் மடத்தைச் சேர்ந்த ஸ்ரீபுருஷோத்தமபாரதி ஸ்ரீ பாதங்கள் என்பவர் நன்னிலம் வட்டம் கூத்தனூரில் உள்ள சரசுவதி தேவிக்குக் கொடையளித்துள்ளார்.

இக் கூத்தனூரே ஒட்டக்கூத்தர் ஊர் என்ற ஒரு கருத்தும் உண்டு.

## கலைக்களஞ்சியம்

**குன்னக்குடி வைத்தியநாதன்**

தஞ்சை என்றாலே கலை என்று பொருள் கொள்ளலாம் கலைமகளை வாழவைத்த தாய் வீடு, தஞ்சை மாவட்டம்! தஞ்சை மாவட்டத் துக்கு, உலகப் பெருமைகள் பல உண்டு

காவிரித்தாயின் கருணை பெற்று. "சோழவள நாடு சோறுடைத்து" என்று விளங்கியது தஞ்சை மாவட்டம்! குடந்தை என்னும் கும்பகோணம் அதன் இதயமாக விளங்குகிறது. இதன் தனிச் சிறப்பு என்ன வென்றால் ..... மற்ற ஊர்களில் ஒன்றோ இரண்டோ கோயில்கள் இருக்கும். ஆனால் கோயில்களே நிரம்பப் பெற்று ஊரானது கும்பகோணம் மட்டும் தான். ஆம்! எட்டுத் திசைகளிலும் கோயில்கள்தான்! எங்கு நோக் கினும் கோபுரங்கள்தான்!

ஒரு ஊரையே கோவிலாக நிர்மாணித்த வரலாற்றுப் பெருமை, மாமன்னர் இராஜராஜ சோழனுக்கு உண்டு! அது தஞ்சைப்பெரிய கோயில்! அதன் பிரதிபலிப்புகளைச் சோழநாட் டுக் கோவில்கள் அனைத்திலும் காணலாம். அத்தகைய கோயில்களில் எத்தனைஎத்தனை சிற்நுணுக்கங்கள்! அத்தனைக்கும் அர்த்தம் சொல்கிறது மெய்ஞானம்!

இத்தகைய மெய்ஞானத்தின் ஊற்று, தஞ்சை சரஸ்வதி மஹாலில் பொக்கிஷமாகப் பாதுகாக் கப்பட்டு வருவது நாம் செய்த புண்ணியந்தான்!

நான்கு வேதங்களும், சமய நூல்கள் பலவும் விஞ்ஞானத்தின் முன்னலை என்பதை இப்போ துதான் உலகம் மெல்லமெல்லப் புரிந்து கொண் டிருக்கிறது.

உலகமே புகழுமாறு

கணிதமேதை ராமானுஜம்
சர். சி. பி. ராமசாமி ஐயர்
ஆங்கிலமேதை ஸ்ரீ சீனிவாச சாஸ்திரி
ஆன்மீகத்துறையில் ஸ்ரீ அனந்தராம தீக்ஷிதர்
இசைத்துறையில் ஸ்ரீ ராமானுஜ ஐயங்கார்
வயலின் ராஜமாணிக்கம் பிள்ளை

இத்தனை சிறப்பானவர்களிடையே. இன்றும் நம்மோடு தெய்வமாக வாழ்ந்துவரும் காஞ்சி பரமாச்சாரியார்களுக்கும் கும்பகோணம் பெரிய வர் என்ற சிறப்புபெயரும் உண்டு என்றறியும் போது கும்பகோணத்தின் மகாத்மியம் புரிகிறது!

மேலும், பரதக்கலை-பாகவத மேளா' போன்ற கலைக்ளின் பிறப்பிடமும் கும்பகோணம்தான்!

இந்த மஹாமக ஆண்டு கும்பகோணத்துக்கு, அருகேயுள்ள, திருவையாற்றில் உலகம் போற்றும் வகையில், ஒரு தனிச்சிறப்பைப் பெறஇருக்கிறது. சரியாகப் பன்னிரண்டு மஹாமகங்களுக்கு முன், அதாவது 144 வருடங் களுக்கு முன் வாழ்ந்து மறைந்த கர்னாடக சங் கீதத்தின் "தெய்வமாக"ப் போற்றப்படும் ஸ்ரீ தீயாகப் பிரும்மத்துக்குப் பெரும் பொருட்ச் செலவில் மாபெரும் நினைவாலயம் திருவையாற்றில் அமைய உள்ளது.

தமிழகமுதல்வர் புரட்சித் தலைவி மாண்புமிகு டாக்டர் செல்வி. ஜெ. ஜெயலலிதா அவர்களின் ஆட்சிக்காலத்தில் மகாமகம் வருவதும் ஒரு தனிச்சிறப்புதான்! மக்கள் மேன்மை பெற்று, இதுபோல் பல சிறப்புக்கள் தொடர இறைவனை வேண்டுகிறேன்.

### ஆழ்வார் ஆன பெருமாள்

நாதமுனிகள் என்னும் வைணவப்பெரியார் வாழ்ந்திருந்த காலத்தில் திருவாய்மொழியோ, திவ்வியப்பிரபந்தமோ வழக்கில் இருக்கவில்லை. இப் பெயர்களையே யாரும் அறியார். திருநகரி என்னும் ஊரைச் சேர்ந்த சில வைணவர்கள் "ஆரா அமுதே" என்னும் திருப்பதிகத்தைச் சொல்ல (5ம் திருவாய்மொழி 8 ம் பதிகம்) ஒரு நாள் நாதமுனிகள் கேட்டார். அதன் கடைசிப் பாடலில்,

**குருகூர்ச் சடகோபன் குழலில மலியச்<br>சொன்ன ஓர் ஆயிரத்துள் இப்பத்தும்**

என வருதலால் இப்பதிகம் ஆயிரம் பாடல்களை உடைய பெரியநூல் ஒன்றின் பகுதி என உணர்ந்தார்

அந்நூலைக் கண்டுபிடிக்க அரிதின் முயன்று திருவாய்மொழியோடு நாலாயிரத்தையும் தொகுத்து வழங்கினார். ஆழ்வார் பாசுரங்களைக் கண்டுபிடிக்கத் திருக்குடந்தை ஆராவமுதப் பெருமாளின் பதிகமே அடிப்படையாக அமைந்த தால் நாதமுனிகள் அப்பெருமாளுக்கே ஆராவ முதாழ்வார் எனப் பெயர் சூட்டிவிட்டார்



# பஞ்சமுக வாத்தியமும் எழுவகை ஆடலும்

மு. ராஜேந்திரன், எம்.ஏ. பி.எல்.

சதாசிவனின் அம்சமாகப் போற்றப்பெறும் தாளக் கருவி பஞ்சமுக வாத்தியமாகும். இதன் ஐந்து முகங்களையும் முறையே சத்யோஜாதம், தத் புருஷம், அகோரம், வாமதேவம், ஈசானம் என்று அழைக்கப்பெறுகின்றது. இதனை இயக்குபவர்கள் யாமளதந்தரம் போற்றும் பாரசைவர் எனும் வகுப்பினரே. அரிய இந்த இசைக்கருவி திருவாரூர் மற்றும் திருத்துறைப் பூண்டி திருக்கோயில்களில் மட்டுமே உள்ளன. இவை சோழர்காலத்து இசைக் கருவிகள்.

ஈசனின் அம்சமாக கருதப்பெறும் இவ் வாத்தியம். ஈசனின் பூஜைகளுக்கும், ஆரூர் இறைவன் ஆடும் அஜபா தாண்டவத்திற்கும், ஆரூர் இறைவன் முன்பு நாட்டிய மகளிர் ஆடும் ஆடலுக்கும் இசைக்கப்பெறுவதாகும். "பஞ்சமுக வாத்திய லக்ஷணம்" எனும் கிரந்த சுவடி நூல் இவ்வாத்தியம் பற்றியும், அதற்கென ஆடும் நடனங்கள் பற்றியும் விரிவாகக் கூறுகின்றது.

## சப்தவிடங்க நடனங்கள்

சப்தவிடங்க தலங்களின் தலைமையிடம் ஆரூர். ஆரூர் அமர்ந்த தியாகப்பெருமான் அஜபா நடனம் ஆடுபவர். இவ்விழா பங்குனித் திங்களில் நடைபெறுவதாகும். இந்நடனம் உயிரின் இயக்கமான மூச்சு உள்ளும் வெளியும் போய் வரும் உன்னத இயக்கத்தை உணர்த்தும் ஆடலாகும்.

இதேபோன்று மற்ற ஆறுவிடங்க தலங்களிலும் ஆறுவித நடனங்கள் பின்பற்றப் படுகின்றன. திருநள்ளாற்றில் உள்ள நாகவிடங்கர் "உன்மத்த நடனம்" ஆடுகின்றார். இது பித்தன் ஆடுவது போன்ற ஆட்டமாகும். நாகை காரோணத்தில் உள்ள சுந்தரவிடங்கர் "தரங்க நடனம்" ஆடுகிறார். இதுகடல் அலைகள் எழுவது போன்று இருக்கும். திருக்காராயிலில் அமைந்த ஆதிவிடங்கர் "குக்குட நடனம்" ஆடுகிறார். இது கோழியைப் போல் ஆடும் நடனமாகும். திருக்குவளையில் (திருக்கோளிலி) உள்ள அவனி விடங்கர் "பிருங்க நடனம்" ஆடுகிறார். இது வண்டு மலருக்குள் குடைந்து குடைந்து ஆடுதல் போன்றதாகும். திருவாய் மூரில் உள்ள நீலவிடங்கர் "கமல நடனம்" ஆடுகிறார். இது தாமரை மலர் அசைவது போல் ஆகும். வேதாரண்யத்தில் உள்ள புவனி விடங்கர் "ஹம்சபாத நடனம்" ஆடுகிறார். இது அன்னப் பறவை அடி எடுத்துவைத்தல் போல் இருக்கும். எனவே சப்தவிடங்க தலங்கள் அனைத்துமே நடனத்தை அடிப்படையாகக் கொண்ட வழிபாட்டுத் திருக்கோயில்களாகும்.

இந்த எழுவகை ஆடலுக்கும் இசைக்கப் பெற்றுவந்த பஞ்சமுக வாத்தியம் தற்போது மரபழியும் நிலையில் உள்ளது. கேரள நாட்டில் உள்ள ஒரு முக வாத்தியமான மிழவின் முழு வளர்ச்சி நிலையே பஞ்சமுகவாத்தியமாகும். இது தமிழகத்திற்கு மட்டுமே உரிய சிறப்புத் தாளக் கருவியாகும். கி. பி. 11-ஆம் நூற்றாண்டில்தான் குடமுழவம் பஞ்சமுக வாத்தியமாக வளர்ச்சி பெற்றது என ஆராய்ச்சியாளர்கள் கருதுகின்றனர்.

# மகாமகத் தீர்த்தங்கள் அளிக்கும் பலன்கள்

| | தீர்த்தம் | பலன் |
|---|---|---|
| 1. | 66 கோடி தீர்த்தம் | துன்பம் நீங்க இன்பம் கைகூடும். |
| 2. | கங்கை தீர்த்தம் | கயிலைப்பதவி அளிக்கும். |
| 3. | பிரம தீர்த்தம் | பிதிர்க்களைக் கரையேற்றும். |
| 4. | யமுனைதீர்த்தம் | பொன்விருத்தி உண்டாகும். |




மகாமகக்குளத் தீர்த்த விபரம்

(கும்பகோணம் ஆதிகும்பேசுவரர் கோயில் நூல்)



5. சிந்து தீர்த்தம் — கல்வியை அளிக்கும்.
6. குபேரன் தீர்த்தம் — சகல செல்வங்களும் உண்டாகும்.
7. நருமதை தீர்த்தம் — திடகாத்திரம் உண்டாகும்.
8. ஈசான்யன் தீர்த்தம் — சிவனடி சேர்க்கும்.
9. சரசுவதி தீர்த்தம் — ஞானம் உண்டாகும்.
10. இந்திரன் தீர்த்தம் — வானுலக வாழ்வு அளிக்கும்.
11. கோதாவிரி தீர்த்தம் — இஷ்ட சித்தி உண்டாகும்.
12. அக்கினி தீர்த்தம் — பிரமஹத்தி நீங்கும்.
13. காவிரி தீர்த்தம் — புருஷார்த்தங்களை நல்கும்.
14. யமன் தீர்த்தம் — யம பயமில்லை.
15. கன்னியாகுமரி — அசுவமேத பலனைக் கொடுக்கும்.
16. நிருதி தீர்த்தம் — பூத, பிரேத, பைசாச குற்றம் நீங்கும்.
17. தாமிரபரணி தீர்த்தம் — கோலோகம் அளிக்கும்.
18. வருணன் தீர்த்தம் — ஆயுள்விருத்தி உண்டாகும்.
19. சரயு தீர்த்தம் — மனக்கவலை தீரும்.
20. வாயு — பிணிகள் அகலும்.

## குடமூக்குப் போர்



வரகுணபாண்டியன் மகன் பரசக்ர கோலாகலன் கும்பகோணத்தில் கங்கர், பல்லவர், சோழர் கலிங்கர், மகதர் ஆகியோரை வென்றான் என்று சின்னமனூர்ப் பெரிய செப்பேடு கூறுகிறது. அப்பகுதி

'கொங்கலர் பொழில் குடமூக்கில் போர் குறித்து
வந்தெதிர்ந்த கங்க பல்லவ சோள காலிங்க மாகாதாதிகள்
குருதிப்பெரும் புனல் குளிப்பக் கூர்வெங்கணை தொடைஞெழித்துப்
பருதியாற்ற லொடுவிளங்கின பரசக்ர கோலாகலன்' என்பதாகும்.



# மாமகப் பெருவிழாவில் . . .

தி. சண்முக ராஜேஸ்வரன் இ. ஆ. ப.,

## மாமகம்

அகில உலகிலும் பெரு நகரங்களும் அதன் நாகரிகமும் நதிக்கரைகளில்தான் தோன்றி யுள்ளன. நம் இந்திய நாட்டின் பெரு நகரங்களும் காவிரி கங்கை, யமுனை, பிரம்மபுத்திரா, கோதாவரி, போன்ற நதிகளின் கரைகளிலேயே அமைந்துள்ளன. இவற்றுள் தென்னிந்திய நதிகளில் ஒன்றான காவிரியின் கரையிலுள்ள கும்பகோணத்தில் 12 ஆண்டு களுக்கு ஒருமுறை நடைபெறும் மகாமகம் எனும் மாமகம் இந்த ஆண்டு 18-2-1992 இல் நிகழவுள்ளது.

## கும்பகோணம்

பல்வேறு தமிழ் இலக்கியங்களிலும் சிறப்புறக் குறிப்பிடப்பெற்றுள்ள காவிரியின் நன்கொடை எனப்படும் தஞ்சை மாவட்டத்தில், திருச்சிராப்பள்ளியிலிருந்து சென்னை செல்லும் முக்கிய இருப்புப்பாதைத் (main line) தடத்தில் தமிழ்நாட்டின் தலைநகராம் சென்னையிலிருந்து 313 கி.மீ. தெற்கே உள்ளது கும்பகோணம். வடக்கே காவிரியும் தெற்கே அரிசிலாறும் மாலையிட்டுச் செல்லும் இவ்வூர், வரலாற்றில் குடமூக்கு என்றும் திருக்குடந்தை என்றும் குறிப் பிடப்பெறும். இவ்வூர் சுமார் 300 ஆண்டுகளாகக் கும்பகோணம் என்றழைக்கப்படுகின்றது.

## கலைவளர்நிலம்

தென்இந்தியாவின் கேம்ப்பிரிட்ஜ் எனும் புகழ்படைத்த இவ்வூர் அரசு ஆடவர் கல்லூரி, திருவாளர்கள் ரைட் ஆனரபிள் சீனிவாச சாஸ்திரி, கணிதமேதை இராமானுஜம் ஆகிய கல்விமான்களைத் தோற்றுவித்துள்ளது. தமிழ் நாட்டிலுள்ள இரண்டு ஓவியக் கல்லூரிகளில் ஒன்றும், வேத பாட சாலைகள் இரண்டும் இங்கு அமைந்துள்ளன.

## கோயில்நகரம்

"கோயிலில்லா ஊரில் குடியிருக்க வேண்டாம்" என்றும் "ஆலயந் தொழுவது சாலவும் நன்று" என்றும் கூறுவது ஔவையின் வாக்கு. தமிழ்நாட்டில் உள்ள கோயில் நகரமாம் கும்பகோணத்தில் 12 சைவ மற்றும் 7 வைணவ ஆலயங்கள் வானளாவி உயர்ந்து நிற்கின்றன. சைவசமய நாயன்மார்களாலும் வைணவ ஆழ்வார்களாலும் பாடப்பெற்றுள்ள இவ் வாலயங்கள் தவிர ஜைன ஆலயம் ஒன்றும் இங்கு உள்ளது. சாபத்தால், ஆலயமும் வழிபாடும் இழந்ததாகக் குறிப்பிடப்பெறும் பிரம்மாவுக்கும் இவ்வூரில் ஆலயம் உண்டு.

வையக மக்களின் வாழ்க்கை முறையை நெறிப்படுத்துவதே சமயம். இவற்றுள் அத்துவித சமயத்தின் 'சங்கர மடம்' வைணவ சமயத்தின் 'அகோபில மடம்' மாத்வர்களின் 'பெரிய மடம்' போன்ற பல்வேறு மடங்களும் இங்கு உள்ளன.

தொழில் வளம் பெற்றது கும்பகோணம். ஆலயங்களைப் போன்றே பித்தளை, வெண்கலம், எவர்சில்வர் பாத்திரங்களுக்கும் பேருந்துகள் உருவாக்கும் பணிகளுக்கும் பெயர் பெற்றது இவ்வூராகும். தவிர இவ்வூரில்



பட்டுநெசவுத் தொழில் பல ஆயிரக்கணக்கான குடும்பங்களை வாழவைக்கும் கைத் தொழிலாகும். இது தஞ்சை மாவட்டத்தின் தலைசிறந்த வணிக நகரமுமாகும்.

## மாமகக்குளம்

கும்பகோணத்தின் இதயப் பகுதியில் 6 ஏக்கர் 2813 சதுர அடிப் பரப்பில் அமைந்துள்ளது 'மாமகக்குளம்'. இக் குளத்தின் நான்கு கரைகளிலும் படிக் கட்டுகள் நன்முறையில் கட்டப்பெற்றுள்ளன. தஞ்சையை ஆண்ட நாயக்க மன்னர்களின் முதலமைச்சராக விளங்கிய கோவிந்ததீட்சிதர் கட்டியதாகக் கூறப்படும் 16 அழகிய மண்டபங்களும் இங்கே உள்ளன. இவைகளின் விமானங்கள் புதுப்பிக்கப்பட்டு, வண்ணந் தீட்டப்பட்ட, இம் மண்டபங்களிலுள்ள சோடச இலிங்கங்களுக்கும் கடந்த, 26-1-92 அன்று குடமுழுக்கு விழாவும் நடைபெற்றது.

## மாமகநாள்

மாமகத் திருக்குளத்தில் 20 கிணறுகள் உள்ளன. ஒவ்வோராண்டும் மாசிமாதம் நிறைமதி நாளன்று இவ் வூரிலுள்ள சைவ ஆலயங்களிலிருந்து உற்சவ மூர்த்திகள் இக் குளக்கரைக்கு எழுந்தருளி "தீர்த்தவாரி" நடைபெறும். குரு (வியாழன்) எனும் கோள் சூரியனை ஒருமுறை சுற்ற 12 ஆண்டுகளாகின்றன. இவ்வாறான சுழற்சியில் சூரியன் கும்ப ராசியிலும், குரு (வியாழன்) சிம்ம ராசியிலும் மாசி மாதம் வருகின்ற நிறைமதி நாளன்று மக நட்சத்திரத்தில் ஒன்று கூடும் நாளே "மகாமகம்" எனும் சிறப்புப் பொருந்திய மாமகம் ஆகும். இதே நாளில் வைணவ ஆலய உற்சவ மூர்த்திகள் காவிரிக்கரைக்கு எழுந்தருளி "தீர்த்தவாரி" நடைபெறுகின்றது.

## ஒருமைப்பாட்டுக்கு ஒருநாள்

வடஇந்தியாவில் நடைபெறும் "கும்பமேளாவும்", ஆந்திராவில் நடைபெறும் "புஷ்கரம்" விழாவும் 12 ஆண்டுகளுக்கு ஒரு முறை நடைபெறுவதாயினும் இவை ஆறுகளின் நீண்ட பரப்பில் நடைபெறுகின்றன. "பூமருவு கங்கை முதல் புனிதமாம் பெருந்தீர்த்தம் மாமகந்தான் ஆடுதற்கு வந்து வழிபடும கோயில்" எனும் சேக்கிழார் பாடலுக்கொப்ப இந்த நாளில் இந்தக் குளத்தில் இந்திய நாட்டின் புனித நதிகளான கங்கை, யமுனை, நருமதை, சரஸ்வதி, கோதாவரி, காவேரி, கிருஷ்ணா, சரயு, மகாநதி ஆகியவை ஒன்றுகூடுகின்றன என்பதே சிறப்புக்குரியதாகும். பல நதிகள் ஒன்று கூடும் இந் நன்னாளில் இந்திய நாட்டின் பல்வேறு மாநில மக்கள் ஒன்று கூடி நீராடும் இப் பெருவிழா, இந்திய நாட்டின் ஒருமைப்பாட்டை நிலைநிறுத்தும் தேசியத் திருவிழாவன்றோ?

## நீராடல்

ஒரு குளத்தில் சுமார் 40 இலட்சம் மக்கள் ஒரே நாளில் நீராடுவது என்பது 'கின்னஸ்' புத்தகத்தில் பதிவுறவேண்டிய வொன்றாகும். இந்து சமயம் ஏற்படுத்தியுள்ள பழக்கங்களில் ஒன்றே நீராடல். நன்மைதரு நாட்களில் நீராடலும் நீராட்டலும் தமிழர்தம் நன்மரபு. இந்தவகையில் மகாமகப் புனித நீராடல் புறத்தூய்மையையும் வாய்மை மற்றும் இறைவழிபாடு ஆகிய அகத்தூய்மையையும் நல்கும் என்பதில் ஐயமில்லை.

## சுற்றுலாமையம் கும்பகோணம்

குடந்தைக்கு வருகை தரும் பக்தர்களின் வழிபாட்டிற்குரிய ஆலயங்களாகக் கும்பகோண நகரைச் சுற்றிக் கீழ்க்குறிப்பிட்டுள்ளவை உள்ளன:

1. சுவாமிமலை - அருள்மிகு முருகப் பெருமானின் அறுபடைவீடுகளுள் ஒன்று.
2. ஆலங்குடி - அருள்மிகு தட்சிணாமூர்த்தி, குருவாய் அமர்ந்து சனகர் போன்ற மகரிஷிகளுக்குத் தத்துவம் போதித்த திருத்தலம்.
3. பட்டீஸ்வரம் - விஷ்ணு துர்க்கை ஆலயம்.
4. கதிராமங்கலம் - வனதுர்க்கை ஆலயம்.



5. திருநாகேஸ்வரம் ஒப்பிலியப்பன் கோவில்

   1. ஒப்பாரில்லா அப்பன் எனப்படும் சீனிவாசப்பெருமாள் ஆலயம்.
   2. அருள்மிகு நாகநாதஸ்வாமி ஆலயம் (ராகு ஸ்தலம்).

6. சூரியனார்கோவில் - நவக்கிரகங்களுக்கும் தனித்தனிச் சந்நிதியுள்ள இடம்.

இவைகளின் காரணமாகக் கும்பகோணம் ஒரு சுற்றுலா மையமாகவும் திகழ்கின்றது.

## விழாக்குழு

மாமக விழாவினையொட்டி நாற்பது இலட்சத்துக்கும் மேற்பட்ட மக்கள் இந் நகருக்கு வந்து "மாமகக் குளத்தில்" நீராடுவர் என எதிர்பார்க்கப்படுகிறது.

பொதுமக்களின் சுகாதாரம், பாதுகாப்பு, போக்குவரத்து, நீராடல், ஆலயதரிசனம் ஆகிய வைகளைக் கவனிக்கத் தஞ்சை மாவட்ட ஆட்சித் தலைவர் திருமிகு. தி. சண்முக ராஜேஸ்வரன் இ.ஆ.ப. அவர்களின் தலைமையில் தமிழ்நாடு அரசால் அறுபத்தொன்பது உறுப்பினர்களைக் கொண்ட ஒரு குழு அமைக்கப்பட்டுள்ளது. இம்மாமகத்திற்கான பல்வேறு பணிகளையும் பொழுதுபோக்கு நிகழ்ச்சிகளையும் சிறப்புற மேற் கொள்ள பதினொரு தனித்தனிக் குழுக்கள் தஞ்சை மாவட்ட ஆட்சியரால் அமைக்கப் பெற்றுள்ளன.

சுமார் நான்கு மாதங்களாக பல ஆய்வுக் கூட்டங்கள் நடத்தப்பட்டன. எல்லாத் துறையி னைச் சார்ந்த அதிகாரிகளும் கலந்து கொண்ட இக் கூட்டங்களில் எந்த வகையில் செயல் பட வேண்டும் என்ற விவரங்கள் ஆராயப்பட்டன.

சில கூட்டங்களில் மாண்புமிகு அமைச்சர் பெருமக்களும் அரசுத்துறைச் செயலர்களும் காவல்துறை உயர் அதிகாரிகளும் கலந்து கொண்டு நல்ல ஆலோசனைகளைத் தெரிவித்துள்ளனர்.

## திருக்குளத்தூய்மைப் பணி

பல ஆண்டுகளாகத் தூர் வாரப்படாமலும் கவனிப்பாரற்றும் இருந்தமையால் மாமகக் குளம் சேறும் சகதியுமாக இருந்ததோடன்றி நோய்க்கிருமிகளின் உறைவிடமாகவும் இருந்தது. ஆகவே இந்தத் தூர் வாரும் பணி வெகு நாட்களுக்கு முன்பே தொடங்கப்பட்டது. மாணவர்களின் துணை கொண்டு தொடங்கப் பட்ட இப்பணி முக்கால் அளவு முடிவடைந்த நிலையில் பெருமழையின் காரணமாகச் சுமார் பதினைந்து அடி உயரத்திற்கு நீர் கொண்டது. ஆகவே இந்நீரை வெளியேற்றும் வகையான் மின்மோட்டார் மற்றும் டீசல் மோட்டார் உதவி கொண்டு பணி தொடரப்பட்டது. சுமார் நாற்பது நாட்கள் தொடர்ந்த இப்பணி மிகவும் சுத்தமான ஊற்று நீரைக்காண வழி கோலியது. இது காறும் மறைந்திருந்த நான்கு ஊற்றுக்கள் பெருக்கெடுக்க, அவ்விடங்களில் புதிய கிணறுகள் உருவாக்கப்பட்டன. இந்நிலையில் குளத்திற்குள் இரசாயன மருந்துகள் கலந்து மணலும் பரப்பப்பட்டு மகாமகக் குளம் நீராடத்தயார் செய்யப்பட்டுள்ளது.

இக் குளத்திலும் குளத்திற்குச் செல்லும் வழிகளிலும் போக்குவரத்து நெரிசலைத் தவிர்க்க நகருக்குள் ஒருவழிப்பாதை முறை ஏற்படுத்தப் பட்டுள்ளது. இப் பாதைகளைக் காட்டும் அறிவிப்புப் பலகைகள் ஆங்காங்கே வைக்கப் பட்டுள்ளன. பொதுமக்களுக்கு விநியோகிக்கும் வகையில் இலவச விளம்பரப் படிவங்களும் வெளியிடப்படுகின்றன.

## பேருந்து நிலையங்கள்

புனித நீராடுவதற்குச் சுமார் நாற்பது இலட்சம் மக்கள் வருவார்கள் என எதிர்பார்ப்பதால் சுமார் ஆயிரத்து இருநூறு பேருந்துகள் இயங்க உள்ளன.

சாலைகள் மூலம் வர இருக்கும் சுமார் இருபது இலட்சம் பயணிகளுக்குக் கும்பகோணம் புறநகர்ப்பகுதிகளில் ஐந்து தற்காலிகப் பேருந்து நிலையங்கள் அமைக்கப்பட்டுள்ளன. இங்கு உணவு, பாதுகாக்கப்பபட்ட குடிநீர்,



கழிப்பிடவசதிகள், மருத்துவ வசதி, தொலைத் தொடர்பு வசதிகள் யாவும் செய்யப்பட்டுள்ளன மாமகம் திருவிழாவிற்குப் புனித நீராட வரும் மக்களிடமிருந்து எந்த வகையான கட்டணமோ, வரியோ வசூலிக்கப்படக்கூடாது என்ற மாண்புமிகு தமிழக முதல்வரின் விருப்பத்திற் கிணங்க இத்தற்காலிகப் பேருந்து நிலையங்கள் இலவசமாகவே செயல்படும்.

மேலும் வாகனங்களின் பாதுகாப்புக்கருதி முன்னாள் இராணுவத்தினர் இப் பாதுகாப்புப் பணியை மேற்கொண்டுள்ளனர்.

## இரயில் வசதி

இரயில்வே துறையினர் சுமார் எழுபத்தாறு இலட்சம் செலவில் கும்பகோணம் புகைவண்டி நிலையத்தினை மேம்படுத்திச் சுகாதார வசதிகள் செய்து, பாதுகாக்கப்பட்ட குடிநீர் வசதிகளை மேம்படுத்தியதுடன், புனித நீராட வரும் மக்கள் தங்கியிருக்கத் தற்காலிகக் கொட்டகைகள், பயணச் சீட்டு வழங்கும் அறைகள் அமைத்து இருபத்தைந்து சிறப்பு இரயில்களை இயக்கிப் புனித நீராட வரும் இலட்சக் கணக்கான மக்கள் பயணம் செய்ய வழி வகை செய்துள்ளனர்.

## சாலை வசதி

கும்பகோணம் நகராட்சி எல்லைக்குட் பட்ட பகுதியில் ஐம்பத்தொரு சாலைகள் உரூபாய் முப்பத்தெட்டு இலட்சம் மதிப்பீட்டில் மேம்படுத்தப்பட்டுள்ளன. நெடுஞ்சாலைத் துறையினர் ஐம்பத்தொன்பது சாலை வேலைகளை உரூபாய் நூற்றுப்பதினேழு இலட்சம் மதிப்பீட்டில் நிறைவேற்றியுள்ளனர். சாலைகளில் இருந்த அத்துமீறிய ஆக்கிர மிப்புக்கள் அகற்றப்பட்டு சாலைகள் அகலப் படுத்தப்பட்டுள்ளன. மேலும் சாலைகளில் பெயர்ப்பலகைகள் மற்றும் தகவல் பலகைகளும் பொருத்தப்பட்டுள்ளன.

## மின்னொளி

இருநூறு சோடியம் ஆவி மின்விளக்குகள் முக்கிய சாலைகள், மாமகக் குளச்சுற்றுப்புறம், காவிரிப் படித்துறைகளிலுள்ள நீராடுமிடங்கள்



